தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் - 161

துறைமங்கலம்
சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய

# சிவப்பிரகாச விகாசம்

பாட்டும் சிற்றுரையும்

பதிப்பாசிரியர் :
திரு. அடிகளாசிரியன்
சித்த நாதேச்சுராதீனம் திருவருள் நிலையம்
கூடைகயூர்




தஞ்சை சரசுவதி மகால் நிருவாகக் கமிட்டியினருக்காக
கௌரவ காரியதரிசி
வித்துவான் அ. வடிவேலன் அவர்களால்
வெளியிடப்பட்டது.

கி. பி. 1977 ]　　[ விலை ரூ. 11—00

# வெளியிடுவோர் உரை

தமிழ் மொழியில் சைவ சித்தாந்தக் கொள்கையினை விளக்க எழுந்த நூல்கள் பல உண்டு. அவற்றுள் சில சரசுவதி மகால் நூலகத்தில் சுவடிகளாகத் தொன்றுதொட்டு பாதுகாக்கப்பட்டு வருகின்றன. தற்காலத்தில் நூலகம் தன் சிறப்புப் பணியாக அந்நூல்களை வெளியிட்டு அரிய கருத்துக்களை யாவரும் பயன் கொள்ளச் செய்து வருகின்றது. இதுவரை ஞானசாரம், தத்துவ விளக்கம், திருநெறி விளக்கம், சங்கற்பநிராகரணம், சிவஞான தீபம், சித்தாந்த நிச்சயம், சதரத்ன சங்கிரகம் (வட மொழியும், தமிழ் மொழி பெயர்ப்பும்) போன்ற சிறந்த சமய நூல்களை வெளியிட்டுள்ளதென்பதையும் இவண் கூறிக்கொள்கிறோம்.

'சங்கத் தமிழ்க் குழவிக்கொரு செவிலி' என்று சிறப்பிக்கப் பெறும் துறைமங்கலம் தவத்திரு சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய "**சிவப்பிரகாச விகாசம்**" என்னும் நூலையும் இப்பொழுது அறிஞர் பெருமக்களுக்கு அறிமுகம் செய்து வைக்கின்றோம். இவர்கள் இயற்றிய இலக்கியம் முப்பத்து நான்காகும். இவ்விலக்கியமெல்லாம் பிள்ளைத் தமிழ், அந்தாதி, கலம்பகம், மாலை, தூது, தாலாட்டு, உலா, அலங்காரம், பள்ளியெழுச்சி, புராணம், நீதி, கண்டனம், சமயம், மொழிபெயர்ப்பு, பல்நெறிப் பாக்கள் என்ற தலைப்பில் அடங்கும்.

சமுதாயத் துறையில் பலவற்றில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் சமவாய்ப்பு வேண்டும். ஆண்கள் அறிவுடையவராக வளர்ந்து, பெண்கள் அறிவில்லாதவராகவே வளரின் அச்சமூகம் மேன்மை அடைய வழியில்லை. வைதீக சமயத்தில் உபநயனம், முப்புரிநூலணிதல், வேதம் ஓதுதல் முதலியவை பெண்களுக்கு விதிக்கப்படவில்லை. நம் சிவப்பிரகாச சுவாமிகள் "வீடு உவப்பவர் ஆணெனப் பெண்ணென வேறோ" (பிரபுலிங்கலீலை கதலிவன கதி – 8) என்று வினவை எழுப்புகிறார். இதனைப்போல் பல நல்ல கருத்துக்களை இவர் இலக்கியத்திற் காணலாம்.

இந்நூல் சைவ சித்தாந்தப் பொருளைச் சிவாகமம் கூறும் முறைப்படிப் பதி, பசு, பாசம் என்று பகுத்துக் கொண்டு கூறிச் செல்கின்றது. நூலாசிரியர் வீர சைவ மரபினராதலால் இவண் கூறியுள்ள கருத்துக்கள் சைவ சித்தாந்திகள் கூறுவதிலும் வேறுபாடுடையது என்பதை மகாலின் தமிழ்ச் சுவடிகளை வரிசைப்படுத்திய தமிழ்ப் பேராசிரியர் மறைந்த மாமேதை பண்டித எல். உலகநாதபிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். மகாலிலுள்ள இப் பழஞ்சுவடி (டி. 782 / எம். 583 ஏ) அபூர்த்தியாக உள்ளது. இதனை நன்முறையில் பதிப்பித்து வெளியிட எண்ணி மயிலம் சிவஞானபாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியிலும், கரந்தைப் புலவர் கல்லூரியிலும் தமிழ்ப் பேராசிரியராய் இருந்து ஓய்வு பெற்ற குகையூர் சித்த நாதேச்சுராதீனம் வித்துவான் **திரு. அடிகளாசிரியர்** அவர்களிடம் இக்கருத்தை அறிவித்தோம். அவர்கள் இப் பணியினை ஏற்றுக்கொண்டு மகால் பிரதியுடன் வேறு சில பிரதிகளையும் பெற்று ஒப்புநோக்கி ஆராய்ந்து செப்பஞ் செய்து சிற்றுரை ஒன்றும் எழுதிச் சேர்த்து இந்நூலைப் பதிப்பித்துத் தந்துள்ளார்கள். அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகும். மேலும் இந்நூல் செம்மையோடு வெளிவரத்தக்க முறையில் செயலாற்றிய துணை நூலகர் **திரு. எம். சீராளன், பி.ஏ.,** அவர்கட்கும், காலத்தோடு கவினுற அச்சிட்டுத் தந்த **குடந்தை ஜெமினி அச்சக உரிமையாளர்** அவர்களுக்கும் கனிந்த உள்ளத்தோடு நன்றி கூறிப் பாராட்டுகின்றோம்.

நூலக வாயிலாகப் புத்தகங்கள் வெளியிடுவதற்கு ஆண்டு தோறும் ஆக்கமளித்துப் பேணிவரும் நமது **தமிழக அரசை** நன்றியோடு போற்றி மகிழ்கின்றோம்.

தஞ்சாவூர்,
11—10—1977.

**அ. வடிவேலன்,**
கௌரவ காரியதரிசி,
சரசுவதி மகால் நூல் நிலையம்.

உ

இறைவன் துணை

# சிவப்பிரகாச விகாசப் பதிப்பாசிரியர் முகவுரை

**தோற்றுவாய் :**

அறிஞன் ஒருவன் பல காலம் மிகவும் முயன்று, நல்ல இலக்கியம் ஒன்றைப் படைத்தான். அவன் அதனை அங்ஙனம் படைத்துவிட்ட ஒருசெயலாலேயே, அப்படைப்பு உலக மக்களுக்குப் பயன் தந்துவிடுவதில்லை. அது நாட்டில் பரவிப், பலராலும் கற்றுணரப்பட்டபின்தான் மக்களுக்குப் பயன் தரத் தொடங்குகிறது. இங்ஙனம் அது உலகமெல்லாம் பரவி வழங்கு வதற்கு அவ் அறிஞன் காலத்திலும், அவனுக்குப் பிற்பட்ட காலத்திலும், அவ்விலக்கியத்தைப் பரப்பும் முயற்சி நன்கு நடைபெற வேண்டும். அங்ஙனம் முயற்சி செய்யாவிடில், அது வழக்கற்றுச் சிதைந்து அழிந்துபோய்விடும். தமிழிலக்கண இலக்கிய நூல்களிற் பல புரப்பவரும், பரப்புபவரும் இல்லாமையால் அழிவுற்ற செய்தியை நாம் அறிவோம்.

**சிவப்பிரகாசர் :**

'சிவப்பிரகாசர்' என்று பெயர்தாங்கிய பேரறிஞர் பலர் இருந்திருக்கின்றனர். அவர்களுள் **துறைமங்கலத்திலும் நல்லாற்றூரிலும் வாழ்ந்திருந்த சிவப்பிரகாசரும் ஒருவராவார்.** இவருக்குக் 'கற்பனைக் களஞ்சியம்' என்றொரு பெயர் உண்டு. இவர் இயற்றிய இலக்கியங்கள் பலவாகும். இவர்க்குத் தமிழ், வடமொழி, கன்னடம், தெலுங்கு என்னும் நான்கு மொழிகளில் நல்ல பயிற்சி உண்டு, தமிழ் இலக்கண இலக்கியங்களில் மிகத் தேர்ந்தவர். வீரசைவ சித்தாந்தம், சைவசித்தாந்தம், வேதாந்தம் முதலிய சமய நூல்களைத் தெளிவாக அறிந்தவர். கருவி நூலாகிய தருக்கசாத்திரத்தில் மிக வல்லவர். செய்யுள்களைக் கற்பனை நலம் தோன்றச் செய்வதில் சிறந்தவர்.

நிரோட்டகம் முதலிய செய்யுட்களைப் பாடும் கடுங்கவியுமாவார். செய்யுளேயன்றி, உரைநடை எழுதுவதிலும் வல்லவர் என்பதற்கு இவரியற்றிய தருக்கபரிபாடை என்னும் நூல் சான்றாகும். இத்தகைய பெரும்புலவராகிய இவர் தம் வாழ்நாளில் முப்பத்து நான்கு நூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் இரண்டு **சதமணிமாலை** என்பதும், **சிவப்பிரகாச விகாசம்** என்பதும் ஆகும்.

சதமணிமாலை :

சைவசித்தாந்த சந்தான குரவர்களில் ஒருவராகிய **உமாபதி சிவாசாரியார்** என்பார், வடமொழி தென்மொழிகளிலும் சிவாகமங்களிலும் மிக வல்லவர். இவர் வடமொழியிலுள்ள சிவாகமங்களை யெல்லாம் தெளிவாகக் கற்று அவற்றுள் பத்து ஆகமங்களிலுள்ள ஞானபாதப் பொருள்களைத் திரட்டி, ஞான இலக்கணம், பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம், அவத்தையிலக்கணம், முத்தி இலக்கணம் என்ற முறையில் **சதரத்ன சங்கிரகம்**[1] என்ற பெயரால் வடமொழியில் ஒரு நூலைத் தொகுத்துள்ளார். இது சிவாகமங்களிலிருந்து தேர்ந்து எடுத்துக்கொண்ட சுலோகங்களால் அமைக்கப்பட்டதாதலின் **தொகையிலக்கியத்தின் பாற்படும்.** இந்த வடமொழித் தொகுப்பிலக்கியத்தைச் **சதமணிமாலை** என்னும் பெயரால் **சிவப்பிரகாச சுவாமிகள்** தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளனர்.

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியுள்ள நூல்களில் ஏகமத நிராகரணமும் கொச்சகக்கலிப்பாவும் வெங்கையலங்காரமும் தலவெண்பாவும் கிடைக்கவில்லை. எஞ்சியவற்றை அறிஞர் பலர் தேடி அச்சிட்டுள்ளனர். ஆனால் **சதமணிமாலையும் சிவப்பிரகாச விகாசமும்** ஒருவராலும் அச்சிடப்படாமலேயே இருந்தன.

**சிதம்பரம் ஈசானிய மடத்திலிருந்து, தவத்திரு இராமலிங்க சுவாமிகள்** செப்பஞ்செய்து வைத்திருந்த **சதமணிமாலை** காகிதப் பிரதியொன்று, வேங்கடத்தானூர் வீரமாகேச **வீ. சோமசுந்தர ஐயர்** அவர்கட்குக் கிடைத்

1. இந்நூலைச் சரசுவதி மகால் அச்சிட்டிருக்கிறது.

திருந்தது. நான் அதனைப் பார்த்து எழுதிச் செப்பஞ்செய்து 1939ல் மயிலம் **சிவஞானபாலய சுவாமிகள் மடத்து** வெளியீடாக அச்சிட்டு வெளியிடச் செய்தேன்.

**சிவப்பிரகாச விகாசம் :**

நான் 1935ல் வித்வான் இடைநிலைத்தேர்வு எழுதுவதற்காகத் தேர்விற்குச் சில திங்கள் முன்னாகவே திருவையாற்றிற்குச் சென்று தங்கிப் படித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது கரந்தைத் தமிழ்ச்சங்க யாண்டுவிழா நிகழ்ச்சி உயர்திரு. **ரா. இராகவையங்கார்** அவர்கள் சீரிய தலைமையில் நடந்து கொண்டிருந்தது. அவ்விழாவினைக் கண்டுகளிப்பதற்காகக் கரந்தைக்குச் சென்றேன். அப்பொழுது என் இலக்கண ஆசிரியரும், முசிறி உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியருமாயிருந்த உயர்திரு. வீரமாகேச **வீ. குமார வீரையர்** அவர்கள் வந்திருந் தார்கள். அவர்களுடன் அவ்விழாவினைக் கண்டு களித்துவிட்டு விழாமுடிந்ததும் தஞ்சைச் சரபோசி மன்னர் சரசுவதிமகால் நூல்நிலயத்தினைப் பார்ப்பதற்கு இருவருமாகச் சென்றோம். அந் நூல்நிலையத்திலுள்ள சுவடிப்பட்டியலில் அச்சாகாத வீரசைவ நூல்கள் ஏதேனும் இருக்கின்றதா என்று தேடிப் பார்த்தோம். பார்த்தபொழுது **சிவப்பிரகாச விகாசம்** என்னும் சாத்திரம் அச்சாகாமல் அங்கிருப்பதாகத் தெரியவந்தது. பின்னர் அச் சுவடியை வருவித்து நோக்கிச் சிவப்பிரகாச சுவாமிகளை நேரிற் கண்டாற்போல் பேருவகை அடைந்தோம்.

யான் வித்வான் இடைநிலைத் தேர்வை எழுதி முடித்தபின்னர் சரசுவதிமகால் நூல் நிலையத்தார் வழியாகச் சிவப்பிரகாச விகாசப் பிரதியொன்றினை எழுதி வாங்கிக் கொண்டு, படித்துப் பார்க்கத் தொடங்கினேன். அப் பிரதி, பிழை மலிந்து, சிதைந்த குறைப் பிரதியாக இருத்தலை உணர்ந்தேன். பதிமரபில் பாக்க ளெல்லாம் சிதைந்திருந்தன. ஏடுகள் இல்லாமையால் பல பாட்டுகள் கிடைக்கவில்லை. பாச மரபிலும் பிற்பகுதியில்லை. பிரளய மரபு இல்லை. இத்தகைய இப் பிரதியுடன் இரவும், பகலும் போராடி, "ஐயம் திரிபுகளுக்கிடையே உண்மைப் பொருளைக் கருதி உணர்பவரைப்போலக்" கருதி, ஒருவாறு செப்பமான பிரதியொன்றினை எழுதினேன்.

அப்பொழுது திருச்சி மாவட்டம் திருத்துறையூரில் திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலையாதீன சிவப்பிரகாச சுவாமிகள் திருமடத்தில் இந்நூல் இருப்பதாகக் கேள்விப்பட்டு அம்மடத்தில் இளையபட்டம் பூண்டிருந்த **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய சிவப்பிரகாச சுவாமிகளைச்** சென்று பார்த்தேன். அவர்களிடம் இருந்ததும் குறைப் பிரதியாயினும், அப்பிரதி பலபிழைகள் திருந்துவதற்கும் மேலும் சில பாட்டுகள் கிடைப்பதற்கும் ஏதுவாயிருந்தது.

நான் அடிக்கடி சிவப்பிரகாச விகாசம் குறைப் பிரதியாகவே கிடைத்திருக்கிறதே என்று எண்ணி மனக்குறைபட்டுக்கொண்டேயிருந்தேன்.

பின் ஒருகாலத்தில் **திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள்** திருமடத்தில் நிகழ்ந்த குருபூசைக்குச் சென்றிருந்தேன். அப்பொழுது அம்மடத்திலுள்ள ஓலைச் சுவடிகளைத் தேடியபொழுது சிவப்பிரகாச விகாசம் முற்றிலும் உள்ள ஓலைச்சுவடி ஒன்று கிடைத்தது. அதைக்கண்டதும் எனக்கு உண்டான உவப்பிற்கு எல்லையே இல்லை. சிவஞானம் முழுவதும் பெற்றவருக்கு எத்தகைய உவகை உண்டாகுமோ அவ்வளவு உவகை எனக்கு உண்டாயிற்று. ஞானியார் மடத்துப் பிரதி முழுச்சுவடியாயிருந்தாலும் இதிலும் சில இடங்கள் சிதைந்தே உள்ளன.

அச்சுவடியைப் பெற்று பிரதி செய்து பதிப்பிக்க முயன்றேன். வேண்டும் பொருள் வசதி கிட்டாமையால் முடியவில்லை.

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியருளிய நூல்களையெல்லாம் நன்கு ஆய்ந்து பதிப்பித்த சிதம்பரம் ஈசானியமடம் **இராமலிங்க சுவாமிகளவர்கள்** சிவப்பிரகாச விகாசத்தையும் நன்கு செப்பம் செய்து பதிப்பித்தற்காகச் சென்னை சென்றவர்கள் இதனைப் பதிப்பிக்காமலேயே இறைவனடி எய்தினர் என்னும் செய்தியை அறிந்த யான், எனக்கும் அந்நிலை வருமோ என்று எண்ணினேன். என்னிடம் ஒரு பிரதி உள்ளது. ஞானியார் சுவாமிகள் மடத்தில் ஒரு ஓலைச்சுவடி உள்ளது. இவ்விரண்டும் அழிந்துவிடில் சிவப்பிரகாச சுவாமிகள் முயன்ற முயற்சி பயனில்லாது போகுமே என்று அஞ்சிய யான், திருந்திய மற்றொரு பிரதியொன்றினை எழுதி, அதனைத் **தஞ்சாவூர் மகாராசா**

சரபோசி சரசுவதி மகால் நூல் நிலையத்திற்குக் கொடுத்துவிட்டு, உங்கட்கு வாய்ப்பு இருக்கும்பொழுது இதனை அச்சிட்டு வெளிப்படுத்துங்கள் என்று நூல் நிலையப் பொறுப்பாளருக்கு எழுதியிருந்தேன். அவர்கள் 13—8—76 இல் இதனைப் பதிப்பாசிரியனாயிருந்து பதிப்பித்துத்தருமாறு எனக்கு ஆணையிட்டார்கள். யானும் அதனை ஏற்று இந்நூலுக்குச் சிற்றுரையொன்றும் எழுதிக் கொடுத்து அச்சகத்திற்றந்து அச்சிட வேண்டினேன்.

இச் சிவப்பிரகாச விகாசம் சரசுவதிமகால் நூல் நிலையக் கௌரவக்காரியதரிசி மாண்புமிகு. அ. வடிவேலன் அவர்கள் சிறந்த முயற்சியால் அச்சாகி வெளிவருகின்றது. அவர்கட்கு என் மனங்கனிந்த நன்றியை அறிவித்துக் கொள்ளுகின்றேன். பின்னர் சிவப்பிரகாச விகாச முழுப் பிரதியைத் தந்துதவிய திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடத்தில் தற்காலம் அருளாசிரியராக எழுந்தருளியிருக்கும் தவத்திரு. சுவாமிகள் திருவடிகட்கு உருகிய அன்புடன் வணக்கம் செய்து என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்து இதனை நல்ல முறையில் அச்சிட்டுதவிய கும்பகோணம் ஜெமினி அச்சகத்தார்க்கும் என் அன்புகலந்த நன்றியை அறிவித்துக்கொள்கிறேன்.

சித்தநாதேச்சுராதீனம்,
திருவருள் நிலையம,
குகையூர்.

இங்ஙனம்,
திரு. அடிகளாசிரியன்.
9—10—1976

---

குறிப்பு :— அண்மையிலே அடையாறு உ. வே. சா. நூலகம் சென்றிருந்தேன். அங்கு சிவப்பிரகாச விகாசப்பிரதி இரண்டு இருக்கின்றன. அவற்றைப் பெற்றுப் படித்துப் பார்த்தபொழுது அவையும் குறைப்பிரதியாகவே இருந்தன.

# சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு.

தொண்டை மண்டிலத்தில் முத்தி நகரம் ஏழனுள் ஒன்றாய் விளங்குகிற **காஞ்சிபுரத்திலே** கி. பி. பதினாறும் யாண்டின் இறுதியிலே பலர்க்குந் தீட்சா குருவாகக் **குமாரசாமி தேசிக**ரென்னும் ஒருவரிருந்தனர். அவர் திருக்கார்த்திகைத் திருவிழாவினைக் காண விரும்பித் திருவண்ணாமலைக்குத் தம் பரிவாரங்களுடன் புறப்பட்டார். அவர் இடை இடையே விடுதிகளில் தங்கித் தங்கிச் சென்று, ஓர் நாள் மாலையம் போதில் திருவண்ணாமலை போய்ச் சேர்ந்து அங்குள்ள ஈசானிய தீர்த்தத்திலே அனுட்டானம் செய்துகொண்டு தமது பூசைப் பெட்டகத்தைத் தம்முடன் வந்த தொண்டர்களிடத்தே வினவினர். அவர்கள் அன்று பகலில் தங்கியிருந்த இடத்திற்றானே வைத்து மறந்து வந்துவிட்டதாக அச்சத்துடன் கூறினர்.

அதனைக் கேட்ட தேசிகர் மிகவும் மனங் கலங்கித் தம் தொண்டருடன் அவ்வூர் ஆள் ஒருவனையும் சேர்த்துப் பகலில் தங்கியிருந்த இடம் வரை தேடிப்பூசைப் பெட்டகத்தைக் கொண்டு வருமாறு அனுப்பிவிட்டு, ஓரிடத்திற்குப் போய்த் தங்கி, ஆன்மார்த்தமான உடையவரைப் பிரிய நேரிட்டதே என்று வருந்தி, அன்றிரவு முழுதும் ஊணும், உறக்கமுமின்றி, உடையவரைத் தியானித்துக் கொண்டிருந்தனர்.

அப்பொழுது அவரது சிவபுண்ணிய முதிர்வாலும், அண்ணாமலையாரின் அருளாலும், சாத்திர அறிவும் அனுபவ அறிவும் மிக்க வீரசைவ சரமூர்த்திகளொருவர் அங்கு வந்து, தேசிகருடன் உரையாடி அவர்க்குற்ற இடுக்கணை அறிந்துகொண்டார். அவர் தேசிகரை நோக்கி, ஆன்மார்த்தமான இட்டலிங்கப் பெருமானை வேறாக வைத்ததின் விளைவே இது! அவ்வாறு வைக்காமல் உம் உடம்பினையே அவ்விறைவனுக்கு எழுந்தருளும் இடமாக்கி, அவ்

விறைவனை உடம்பின்கண் அணிந்துகொண்டிருப்பின், இவ்வாறு பிரியும் நிலை ஏற்பட்டிருக்காதே என்று கூறி, இலிங்காங்க சம்பந்தமுடைய வீரசைவ சமயத்தின் சிறப்பை வேதாகம வாயிலாகவும் கூறிச், சுத்தசைவ[1] நெறியை முற்றியவர் வீரசைவ நெறிக்கே வந்து வீடுபெறுவர் என்பதையும் நன்கு விளக்கிக் கூறினர்.

அதனைக் கேட்ட தேசிகருடைய மனம் வீரசைவ சமய நெறியைப் பின்பற்றுதற்குரிய பக்குவ நிலையைத் திருவருள் வசத்தால் அடைந்தது. தேசிகர் சரமூர்த்தியை நோக்கித் தாங்கள் கூறியவாறு வீரசைவ சித்தாந்த நெறியை யான் மேற்கொள்ள விரும்புகிறேன். அந்நெறியை நன்கறிந்து இலிங்கதாரண தீட்சை செய்யும் ஞான ஆசாரியர் ஒருவர் கிடைப்பரோ என்று வினவினர். அச்சர மூர்த்தியும் அத்தலத்தில் அண்ணுமலையார் திருக்கோயிலின் தெற்குமடவளாகத்திலுள்ள ஒருமடத்தில் **சாளிகந்த குருதேவர்** என்னும் சிறந்த ஞானசிரியர் ஒருவர் உள்ளனர். அவரிடம் சென்று இலிங்கதாரண தீட்சை செய்து கொள்ளலாம் என்று கூறி, அத்தேசிகரை அத்தேவரிடம் ஆற்றுப் படுத்தினர்.

தேசிகரும் சரமூர்த்திகள் கூறியவாறே சென்று அத்தேவரைக் கண்டு வணங்கித் தம் கருத்தினை விண்ணப்பித்துக் கொண்டனர். குருதேவரும்[2] தேசிகரின் பக்குவநிலையை நன்கறிந்து அவர்க்கு

---

1 "சுத்தசைவம் முற்றியதால் துடியாய வீரசைவத்
தெத்தனையோ மேலோர்புக் கீடேறி னரென்பர்"
– சிவப்பிரகாச சுவாமிகள் சருக்கம்; புலவர் புராணம்.

2 சிவப்பிரகாசருடைய பரம்பரைக்குக் குருதேவரே சமயகுரு என்பதை
"சிவனையும் உயர்குரு தேவன் தன்னையும்,
உவகையோ டடிதொழு துரைசெய் கிற்பன்யான்"
என்னும் (சதமணிமாலை-1) சிவப்பிரகாசர் வாக்காலும்,
"புனிற்றிளந் திங்கள் வேய்ந்த புரிவளர் சடையும் நெற்றிக்
கனற்றிரு விழியும் மானும் கரந்துவந் தென்னைப் பாசம்
அனைத்தையும் அறுத்தாட் கொண்ட அருட்குரு தேவ னென்னும்
தனிப்பெருங் கருணை வள்ளல் தன்னடி மனத்துள் வைப்பாம்"
– திருக்காளத்திப் புராணம் பாயிரம் - 16
என்னும் கருணைச் சிவப்பிரகாசர் வாக்காலும் அறியலாம்.

உடனே இலிங்கதாரண தீட்சையைச் செய்து வீரசைவ சித்தாந்த நெறியின் சிறப்பினை உபதேசித்தனர். அண்ணாமலையாரைத் தொழுதற்கு வந்த தமக்கு அவர் திருவருளால் அவ்விறைவனிடம் அபேத பத்தி புரியும் வீரசைவ சமயப் பிரவேசம் கிடைத்த சிறப்பினால் உவப்புற்ற தேசிகர் அண்ணாமலையாரை வணங்கிக் கொண்டு தம் ஊர் சென்று தம்மை அடுத்த மாணவர்கட்கு அருளுபதேசம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தனர்.

அக் காலத்திலே தேசிகர்க்கு இறைவன் திருவருளால் மூன்று ஆண் மகவும், பின்னர் ஒரு பெண் மகவும் அவர் மனைவியாரிடத்தே பிறந்தனர். அவர்நால்வரும் முறையே சிவப்பிரகாசர், வேலையர், கருணைச்சிவப்பிரகாசர், ஞானம்பிகை என்னும் இயற்பெயர் உடையவராய் வீரசைவ சமயாசாரப்படி சிவலிங்க தாரணம் உடையவராய்க் கல்வி, கேள்வி, நல்லொழுக்கம் முதலானவற்றிற் சிறந்து விளங்கினர். பெற்றோர் பிள்ளைகளின் இளமைப் பருவத்திற்றானே இறைவனடி எய்தினர். பெற்றோரின் பின்பு குடும்பப் பராமரிப்பு சிவப்பிரகாசருடையதாயிற்று. அவர் தாமும் கல்வி கேள்விகளில் முன்னேறித் தம்பிமாரையும் அவற்றில் முன்னேறச் செய்தனர்.

சிவப்பிரகாசரும் அவர்தம் தம்பியரும் இளமைப் பருவத்தில் காஞ்சிபுரத்திலேயே தங்கியிருந்தனர். அப்பொழுது அவ்வூர் ஏகாம்பரேசுரர் திருக்கோவிலில் பன்மாகேசுர ரட்சகராயிருந்து பணிபுரிந்து வந்ததால் 'சிவகஞ்சி நிவாச' என்னும் பட்டப் பெயர் பெற்ற 'பொம்மபுரம் சிவஞானபாலய சுவாமிகள்[1]' என்னும் ஞானதேசிகருடைய அருளுறவு அவர்கட்குக் கிடைத்தது.

---

1. சிவப்பிரகாசர் சிவஞானபாலய சுவாமிகளிடம் ஞானதீட்சை பெற்றுக்கொண்டது காஞ்சிபுரத்திலாம், இதனை

"என்ன தவவுதவி யீதென் றுணர்கிலேன்
மன்னுசிவ ஞானமுனி வந்துற்றான் — தன்னைநிகர்,
மாசங் கெடுக்கும் மலர்த்தடஞ்சூழ் கச்சியிலெம்
பாசங் கெடுக்கும் படி" (20)

என்ற சிவஞானபாலயர் கலம்பகப் பாட்டால் அறிக.

சிவப்பிரகாசர் அத்தேசிகரையடைந்து அவரிடத்திலே ஞான தீட்சையைப் பெற்றுக்கொண்டு துறவறநிலையை மேற் கொண்டனர். வேலையரும் கருணைச்சிவப்பிரகாசரும் இல்லற நிலையையே விரும்பித் திருமணம் செய்துகொண்டனர். தங்கை **ஞானாம்பிகையை** அப்பொழுது பேரூரில் இருந்த **சாந்தலிங்க அடிகளார்க்கு** வாழ்க்கைத் துணைவி யாக்கினர்.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் பெரம்பலூர் வட்டத்திலுள்ள **வெங்கனூரில்,** அப்பொழுது, குறுநில மன்னராயிருந்த பண்ட குலத்திற் றோன்றிய **இலிங்காரெட்டியாரும்** அவர்தம் புதல்வர் **அண்ணாமலை ரெட்டியாரும்** சிவநேயச் செல்வராக விளங்கி யிருந்தனர். அவருள் அண்ணாமலை ரெட்டியார் என்பவர் சிவப்பிரகாசசுவாமிகளுடைய கல்விச் சிறப்பு துறவறச்சிறப்பு தவச்சிறப்பு முதலானவற்றை உணர்ந்து அவரைத் தம் ஊருக்கு வரவேற்று அங்கே திருமடம் ஒன்று அமைத்து அதில் தங்கியிருக்குமாறு செய்தனர். சுவாமிகள் அங்கு சிலகாலம் தங்கியிருந்துவிட்டுத் திருச்செந்தூர் முதலிய இடங்கட்குத் தலயாத்திரையாகச் சென்று திரும்பிவந்தனர். சுவாமிகள் **விருத்தாசலத்திலும்** சிலகாலம் தங்கியிருந்தனர். பின்னர் இறுதிக்காலத்தில் புதுச்சேரியை அடுத்த **நல்லாற்றூரிலேயே** தங்கியிருந்து புரட்டாசித்திங்கள் நிறை உவாவில் இட்டலிங்க பரசிவத்தில் கலந்தருளினார்கள்.

### சிவப்பிரகாச சுவாமிகள் தம் ஞானாசிரியராகிய சிவஞான பாலய சுவாமிகள்மேற் பாடியவை :

[1] தாலாட்டு, [2] நெஞ்சுவிடுதூது, [3] திருப்பள்ளியெழுச்சி, [4] பிள்ளைத்தமிழ், [5] கலம்பகம் என்பவையாம்.

### வெங்கனூரிலுள்ள பழமலைநாதர்மேற் பாடியவை :

[6] வெங்கையுலா, [7] வெங்கைக் கலம்பகம், [8] வெங்கையலங் காரம். [9] வெங்கைக்கோவை என்பவையாம்.

விருத்தாசலத்திலுள்ள கடவுள்மேற் பாடியவை:

[10] பழமலையந்தாதி, [11] பிட்சாடன நவமணிமாலை, [12] கொச்சகக் கலிப்பா, [13] பெரியநாயகியம்மை நெடுங்கழிநெடில், [14] கலித்துறை என்பவையாகும்.

அவர் தலயாத்திரையின்போது பாடியவை:

[15] சோணசைலமாலை, [16] திருச்செந்தில் நிரோட்டகயமக அந்தாதி, [17] தலவெண்பா என்பவையாம்.

சுவாமிகள் தாம் மேற்கொண்ட வீரசைவசமய தத்துவத்தைக் குறித்துச் செய்தவை:

[18] சிவப்பிரகாச விகாசம், [19] சித்தாந்த சிகாமணி, [20] பிரபுலிங்க லீலை என்பவையாம்.

இட்டலிங்க வழிபாட்டுக்குரியவையாய்ச் செய்தவை:

[21] இட்டலிங்க அபிடேகமாலை, [22] நெடுங்கழிநெடில், [23] குறுங்கழி நெடில், [24] நிரஞ்சனமாலை, [25] கைத்தலமாலை என்பவையாம்.

சைவசமய தத்துவத்தைப்பற்றிப் பாடியது:

[26] சதமணிமாலை என்பதாகும்.

சைவசமய அடியார்களைப்பற்றிப் பாடியது:

[27] நால்வர் நான்மணிமாலை என்னும் அரியநூலாகும்.

மற்றையவை:

[28] தருக்கபரிபாடையும், [29] வேதாந்த சூடாமணியும், [30] சிவநாமமகிமையும், [31] நன்னெறியும், [32] ஏசுமதநிராகரணமும், [33] திருக்கூவப்புராணமும், [34] சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பர் சருக்கமும் நக்கீரர்சருக்கமும் ஆகும். இவற்றுள் சித்தாந்த சிகாமணியும் சதமணிமாலையும் தர்க்கபரிபாடையும் வடமொழி

யிலிருந்து மொழிபெயர்த்தவை. தர்க்கபரிபாடை உரைநனட நூல், பிரபுலிங்கலீலையும் வேதாந்த சூடாமணியும் கன்னட மொழிலிருந்து மொழிபெயர்த்தவை.

இம் முப்பத்து நான்கு நூல்களில் திருவெங்கை அலங்காரமும் கொச்சகக்கலிப்பாவும் தலவெண்பாவும் முற்றிலும் கிடைக்க வில்லை. திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் உரையிலிருந்து மூன்று ஏசுமத நிராகரணப் பாடல்கள் மட்டும் கிடைத்துள்ளன.

## சிவப்பிரகாசர் வாழ்ந்திருந்த காலம் :

சிவப்பிரகாசர் தாம் இயற்றியுள்ள **திருவெங்கைஉலாவில் இலிங்கையன்** குல மைந்தனாகிய, இரட்டியாம் பண்ட குலத்தின் பயனை **அண்ணாமலை** வள்ளல் என்பார் சந்தி பொருந்தித் தகுஞ்சீர் கெடாதடுக்கிப் புந்திமகிழ் அற்புத அணித் தாய் முந்தையோர் செய்யுள்போற்" செய்த திருக்கோயிலுள் எழுந்தருளியிருந்து எம் துன்பத்தைப் போக்கும் பரஞ்சோதி என்று அண்ணாமலை ரெட்டியார் வெங்கனூரில் பழமலை நாதருக்குக் கோயில் கட்டி அதனுள் அந்தப் பழமலைநாதரை எழுந்தருளியிருக்கச் செய்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறார். மேலும் **திருவெங்கைக் கோவையில்** தலைவி கூற்றாகவரும் அறியாள் போன்று குறியாள் கூறல் என்னும் துறையில் "வல்ல கோலுக்கு வல்லஅண் ணாமலை யார்கட்டு கோயிலகப், பாலுக்கு வந்தது கண்டாய்நம் வெங்கைப் பழமலையே" என்னும் பாட்டில் மேற்கண்ட கோயிலில் பழமலைநாதரைப் பிரதிட்டை செய்த நிகழ்ச்சியை நேரில் கண்டவரைப் போலக் குறிப்பிடுகிறார். இக் காரணத்தால் அண்ணாமலை ரெட்டியார் வெங்கனூரில் பழமலை நாதருக்குக் கோவில் கட்டிக் குடமுழுக்குச் செய்த காலத்தை ஒட்டியே சிவப்பிரகாசர் வாழ்ந்திருத்தல் வேண்டும். அக்கோவில் கல்வெட்டொன்று கோயில்கட்டிக் குடமுழுக்குச் செய்தகாலம் சாலியவாகன சகம் 1545 (கி. பி. 1623) என்று குறிப்பிடுவதால், அக்காலத்தில் அவர் வாழ்ந்திருத்தல் வேண்டும்.

அவர் பிரபுலிங்கலீலையைச் சாலிய வாகன சகம் 1574 கரயாண்டு வைகாசித்திங்களில் இயற்றியதாகக் குறிப்பிட்டுள்ளார் (கி. பி. 1652) எனவே கும்பாபிடேக காலத்தில் இவருக்கு வயது இருபது இருக்கலாம் என்றால் இவர் பிரபுலிங்கலீலை செய்த காலத்தில் இவருக்கு வயது நாற்பத்தொன்பது இருக்க வேண்டும்.

இவர் இயற்றிய நூல்களில் கடைசி நூல் சீகாளத்திப் புராணமாகும். இதனை இவர்தம் ஐம்பதாவது வயதில் இயற்றி இருக்கலாம். எனவே, இவர் காலம் கி. பி. 1603 லிருந்து கி. பி. 1653 வரை இருக்கவேண்டும்.



# வரலாற்றுச் சான்று

"தெருள்சிவப் பிரகாச" என்று தொடங்கும் பாட்டு சிவப்பிரகாசர் முதலான மூவரும் பாடிய நூல்களை அறிவுறுத்தும் பாட்டாகும். இதனைப் பிற்காலத்திருந்த சிதம்பரம் **ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள்** பாடியுள்ளனர். நான் பொம்மையபாளையம் மடத்தில் உள்ள ஏட்டுச்சுவடி யொன்றில் கீழ்வரும் நான்கு பாடல்களைப் பார்த்தேன். இப்பாடல்கள் சிவப்பிரகாசர் தம்பியின் பரம்ரையினர் இன்னுர் என்பதையும் அவர் செய்த நூல்கள் இவை என்பதையும் உணர்த்துகின்றன. வரலாற்ருசிரியர்க்குப் பயன்தரும் செய்தியைக் கூறுவதால் அப்பாடல்களை இங்கே தருகின்றேன் பாட்டிற் சில இடங்கள் சிதைந்துள்ளன.

பாட்டு

1. வெங்கையுலா வெங்கையலங் காரம் வெங்கைக்
கலம்பகம்வெங் கைக்கோவை வேதாந்த …………
………… செந்தூர் வியனந் தாதி
தங்குசிவப் பிரகாச விகாசமுடன் சோண
சைலமாலை ……… .. பாடைசத மணிமாலை
பிரபுலிங்க லீலை தண்சீர்
பொங்குதிருக் காளத்திப் புராணமொடு திருக்கூவப்
புராணம் நால்வர் புகழுநான் மணிமாலை
பழமலைகொச் சகக்கலிப்பா புனித யிட்ட
………… நெடுங் கழிலே குறிய நேம
இட்டலிங்க மாலையிய லுறுநன் னெறியிலிங்க
அபிடேகக் கழிநெடில்பின் னியம்பக் கேளே (க)

2. கேளினிய பழமலையந் தாதிபிட்சா டனக்கவிகள்
பழமலையிற் குழவி யாகிக் கிளர்பெரிய
நாயகிதன் கலித்துறையே கழிநெடிலே கிரீசன்தன்சீர்
நீளுமுயர் சிவநாம மகிமைகவி பன்னிரண்டு
நிகழ்த்தி வேலோன் நிலவுமயி லத்திலன்பு
செயுமகிமைப் பாலயசா மிகள்தங் கஞ்சத்

தாளில்தரு பிளேத்தமிழே நெஞ்சுவிடு தூதொடுதா
லாட்டுஞான மேன்மைதரு மினியகலம் பகமே
திருப்பள்ளி எழுச்சியிவை தமிழிற் செய்தான்
பாளிதரு கண்டெனவே த்துறைமங்கை யெனும்பெரிய
பதியில் வாழ்வோன் பயனுதவு வீரசைவ
சிவப்பிரகா சப்பெரும்பேர் படைத்து ளானே. (உ)

3. சிவப்பிரகா சற்கிளேய வேலேயர்தம் பிரபந்தம்
தெரியக் கூறின் திருநல்லூர்ப் புராணமொடு
கைத்தலமா லேயெழிற் றேயு வெற்பில்
தவப்பிரகா சக்குகைவாழ் நமச்சிவா யன்சரிதை
சாரங்க ............ ............ வீரசிங்கா
தனபுரா ணங்கண்ணன் பாரி சாதம்
உவக்குமயி லத்திரட்டை மணிமாலே கருணேசிவப்
பிரகா சையர் உரைத்ததுதென் காளத்திப்
புராணமதிற் பாதிலிங்கத் தகவ லொன்றே
பவப்பிணிதீர் வேலேயன் காளத்திப் புராணமுற்றும்
பாடி யந்தம் பயன்பெறவே முடித்தனரிம்
மூவரும்சா யுச்சியத்திற் படிந்திட் டாரே (ௐ)

4. இளங்கருணேச் சிவப்பிரகா சையர்மைந்தன் சாமிநா
தையனெழில் வாலீசர் மகிமை யியம்புபழ
மலேக்கோவை திருப்புடையூர்ப் புராணம் ............
............ ............ ............ ............
மைந்தன்சிவ ஞானேயன் வகுத்ததுலாக் காவேரிப்
புராணமிட்ட லிங்கதுதி யிவர்தம் மைந்தர்
விளங்குசிவப் பிரகாசர் அகிலாண் டேசர்பதிக
விருத்தம் செய்து விரிதெலுங்கிற் றுயுமானுர்
சதகம் பாலேயர்தம் வெண்பா ............
களங்கமிலாக் கலித்துறையும் தமிழ்நடைபோற் றெலுங்கினிற்
கட்டுரைத்துத் தில்லேக் கடிநகர்வாழ் சிவகாமி
மாலேயும்பிற் காலத்தே கழறி னுனே. (ச)

*வரலாறு முற்றும்*

# சிவப்பிரகாச விகாசம்

## பொருட் சுருக்கம்

தவத்திருவுடன் கல்வித்திருவும் பெற்ற சிவப்பிரகாச சுவாமிகள் என்னும் பேரறிஞர் இயற்றியுள்ள பல நூல்களுள் சிவப்பிரகாச விகாசம் என்னும் நூலும் ஒன்றாகும். இது சிவாகமங்களுள் ஞான பாதப்பொருள்களைத் தெரிந்து கூறுகின்ற ஞான நூலாகும். இந்நூல் பதிஞானம் பசுஞானம் பாசஞானம் என்னும் மூன்று ஞானங்களைப்பற்றிக் கூறினாலும், தலைமைபற்றிச் **சிவத்தை விளங்கச் செய்கின்ற ஞானத்தின் மலர்ச்சி** என்ற பொருளில் சிவப்பிரகாச விகாசம் என்று பெயர் கூறப்படுகின்றது. மேற்கூறிய பொருளன்றி 'சிவப்பிரகாசத்தின் மலர்ச்சி' என்றும் பொருள் கூறலாகும்.

இந்நூல் பதிமரபு, பதிபேத வியல், பசுமரபு, பாசமரபு, பிரளயவியல் என்று ஐந்து பிரிவாக உள்ளது. அவற்றுள் பதி, பசு, பாச இலக்கணங்களைக் கூறும் பிரிவு 'மரபு' என்ற பெயராலும், பதிபேதம், பிரளயம் என்பவற்றைப்பற்றிக் கூறும் பிரிவு 'இயல்' என்ற பெயராலும் கூறப்பட்டுள்ளன. முறையே இவற்றின் பாடல்கள் $52 + 7 + 78 + 141 + 55 = 333$ ஆகும். திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் திருமடத்திலிருந்து கிடைத்த ஏட்டுச் சுவடியிலுள்ள ஈற்றுப்பாடல் ஒன்று "நன்னூற் கவிதையொரு முந்நூற்று முப்பத்து மூன்று" என்று கூறுகின்றது. இன்னும் நூன்முகப்பில் சிறப்புப்பாயிரமாக உள்ள பாடலையும் பாசமரபில் 'மருவுறும்' (12) என்ற பாடற்பின் சரசுவதிமகால் பிரதியிற் காணப்படும் 'ஒடுங்குறு' என்ற பாடலையும் சேர்த்தால் 335 பாடல்களாகும். ஆனால் நூலாசிரியர் முப்பொருளைப்பற்றிக் கூறும் இந்நூலின் பாட்டெண் ஒன்றாவது தானத்திலும் மூன்று, பத்தாவது தானத்திலும் மூன்று, நூறாவது தானத்திலும் மூன்று அமையுமாறு கருதி வைத்திருக்கவேண்டும். இவற்றுள் ஒன்றாவது

தானத்தைப் பாசமாகவும், பத்தாவது தானத்தைப் பசுவாகவும் நூறுவது தானத்தைப் பதியாகவும் கருதிக்கொண்டால் முறையே மும்மலம், மூன்றுவகை உயிர், மூன்று நிலையில் உள்ளபதி என்று கருதுமாறு, 333 என்ற இந்நூலின் முழுபாட்டெண் தொகை அமைந்திருக்கிறது. இந்நூலுக்கு முதல் நூல் சிவாகமம் என்பது 'சிவாகமம் தெரிந்து கூறுவன்' (2) என்பதனுல் புலனுகும். பசுமரபில், உலகாயதன் முதலிய சமயவாதிகளின் கொள்கையை மறுக்கும் பொருள் அமைந்த பசுக்களின் பெயர்கள் பராக்கிய சூத்திரத்திலிருந்து 'யாக்கையின் அயலான்' என்ற பாட்டால் கூறப்பட்டுள்ளது. சில மந்திரங்களின் இயல்பை வாதுளம் முதலாம் அவற்றுணர்ந்து கொள்ளே (166) என்பர். 175 ஆம் பாட்டில் **தத்துவப்பிரகாசம்** என்ற நூலொன்றினைக் குறிக்கின்ருர். இப்பெயருடைய நூல் சைவ தத்துவப்பிரகாசம் என்றும் வீரசைவ தத்துவப்பிரகாசம் என்றும் இரண்டாக உள்ளன. அவற்றுள் இந்நூல் குறிப்பது எதனை என்று ஆராய வேண்டும். இந்நூலிலுள்ள பாடல்கள் எல்லாம் நான்கடிப் பாடல்களே ஆகும். அவற்றுள் 250 ஆம் பாட்டு ஐந்தடியாகவும், 295 ஆம் பாட்டு மூன்றடியாகவும் உள்ளன.

சிவப்பிரகாச சுவாமிகள் இந்நூலில் **பதிமரபில்** நிமித்த காரணனுகிய பதி ஒருவர் உண்டெனக் கூறி அவர் இன்ன இலக்கணம் உடையவரென இயம்பி அவர் உயிர்களின் பொருட்டு ஐந்து தொழில் செய்வார் என்பதும், ஐந்தொழில் செய்யுமவர் குயவன்போல் அவயவம் உடையவரா அவயவம் இல்லாதவரா என்ற வினவை எழுப்பிக்கொண்டு, அதற்கு விடை கூறுமுகத்தால் எழுந்த பலவகை வினக்கட்கு விடை இவை என்பதும், சடப்பொருளாகிய பாசமும் சிற்றறிவுகிய உயிரும் தம்மை இயக்குவதற்குப் முதல்வனை அவாவி நிற்கின்றன என்பதும், பாசமில் முத்தராகிய சிலரே ஐந்தொழில் செய்வர் பதி எதற்கு வேண்டும் என்று வினவிக்கொண்டு அதற்கு விடை இன்னது என்பதும், ஐந்தொழில் செய்வதற்குப் பரசிவனே வேண்டுமோ வேற்றுச் சமய நூல்களிற் கூறப்பட்ட கடவுளர்

அவற்றைச் செய்யமாட்டாரோ என்று வினவிக்கொண்டு அதற்கு விடை இன்னதென்பதும், பதி உலகைப்படைக்கும் முறையும் அவன் இயல்பும் உயிர்களின் நல்வினை தீவினைகட்குத்தக அவர்கட்குப் பயன் தருவான் என்பதும் கூறப்பட்டுள்ளன.

**பதிபேத இயலில்** நிட்களமாய் நின்ற பரசிவமாகிய பிரமம் தானே சாதகர்தம் தியானம் பூசனைப் பொருட்டாக வடிவம் கொள்ளும் என்பதும், அவ்வடிவ பேதங்கள் இன்னின்னவை என்பதும் கூறப்பட்டுள்ளன.

**பசுமரபில்** உயிர் மூவகைய அவைதம் இயல்பு இத்தகைய என்பதும், பராக்கிய சூத்திரம் கூறும் யாக்கையின் அயலான் என்னும் உயிர்ப்பெயர் உலகாயதனையும், நாசமிலி என்னும் பெயர் புத்தனையும், வியாபகி என்னும் பெயர் சயினனையும், விபின்னன் என்னும் பெயர் வேதாந்தியையும், சமலன் என்னும் பெயர் சாங்கியனையும், அசடன் என்னும் பெயர் நியாய மதத்தானையும், வினைப்பேறு உண்பான் என்னும் பெயர் உயிர் வினைப்பேறு உண்பதன்று என்பவனையும், கருத்தன் என்னும் பெயர் மாவிரத சமயத்தானையும் சிற்றுணர்வினன் என்னும் பெயர் பாசுபதனையும் இறையை உள்ளான் என்னும் உயிர்ப் பெயர் மீமாஞ்சக மதத்தானையும் மறுத்தற்காக, மறுக்கும் பொருளமைதியுடையதாக உயிர்க்கு வழங்கப்படுகின்றன என்பதும் கூறப்பட்டுள்ளன.

**பாசமரபில்** திரோதான சத்தி அல்லாதவிடத்து ஆணவம் கன்மம் விந்து மாயை எனப் பாசம் நான்காம் என்பதும், அவற்றுள் ஆணவம் கன்மம் என்னும் இரண்டு மலங்களின் இலக்கணம் இத்தகைய என்பதும், விந்துவின் இலக்கணம் இத்தகையது அதிற்றோன்றிய சொல், பொருள் என்னும் இரண்டு வடிவாகிய அத்துவாவின் இலக்கணம் இத்தகையதென்பதும், அரன் தன் சத்தியால் விந்துவைக் கலக்க அதனால் தோன்றிய விருத்தி சிவம்,

சதாசிவம் மகேசம் சுத்த வித்தை என நான்காகும்; ஆனால் தத்துவப் பிரகாசம் என்னும் நூல் சத்தி என்னும் தத்துவத்தைச் சேர்த்து ஐந்தாகக் கூறும்; அவற்றின் இயல்பு இத்தகைய தென்பதும், விந்து என்பது சுத்தமாயை, மாயை என்பது அசுத்த மாயை என்பதும், மண் முதலான தத்துவங்கள் ஒன்றில் ஒன்று சூக்குமம் என்பதும், அசுத்த மாயையிலிருந்து காலம் நியதி கலை அராகம் வித்தை என்னும் தத்துவம் தோன்றும், உயிர் இவ்வைந்துடன்கூடி பிரகிருதியை நுகரத் தொடங்குங்கால் புருடன் என்று கூறப்படுவன் என்பதும், அசுத்தமாயையில் தோன்றி குணதத்துவம் முதல் நிலதத்துவம் ஈறானவற்றைத் தன்னுள்ளே அடக்கிக்கொண்டு அவற்றிற்கு முதற்காரணமாயிருப்பது பிரகிருதி அதனைச் சீகண்ட தேவர் செயற்படுத்த அதிலிருந்து குணதத்துவம் புத்தி தத்துவம் ஆங்கார தத்துவம் முறையே தோன்றுமென்பதும், ஆங்காரத்திலிருந்து தைசத வைகாரிக பூதாதி ஆங்காரம் தோன்றும் அவற்றிலிருந்து மனமும் ஞானேந்திரியமும் கன்மேந்திரியமும் தன்மாத்திரையும் தூல பூதமும் தோன்றும் முறையில் தோன்றும் என்பதும், சிவம் முதல் நிலம் வரையில் உள்ள தத்துவங்களில் உள்ள புவனங்கள் இவை என்பதும், அவற்றுள் நிவிர்த்திகலையில் உள்ள நிலதத்துவத்தில் உள்ள அறுபது புவனங்களில் பூவுலக மாகிய நடு உலகத்தின் அமைப்பு இத்தகைய தென்பதும் அவற்றுள் குமரித்தீபத்தின் அமைப்பு இத்தகையதென்பதும், பூவுலகத்தின் கீழ்உலக மேல்உலக அமைப்பும் புவனேசுரரை வழிப்பட்டோர் பெறும்பேறும் தத்துவங்களின் அளவும் இன்னவை என்பதும், ஐந்தாவது மலமாகக் கருதப்படும் திரோதாயியின் இலக்கணம் இன்ன தென்பதும், சிவம் முதல் நிலம் ஈறான தத்துவங்கள் வரும்முறை வருதல் சிருட்டி, அவை வந்தமுறை ஒடுங்குதல் பிரளயம் ஆகும் என்பதும் கூறப்பட்டுள்ளன.

பிரளய இயலில் உயிர்கள் இளைப்பாறவும், இருவினைகள் பக்குவம் அடையவும் மாயைக்குப் படைப்புச் சத்தி தரவும் பரனால் பிரளயம் செய்யப்படும்; அப் பிரளயம் அதப்பிரளயம் நாப்பண்

பிரளயம் மகாப்பிரளயம் என மூன்று வகைப்படும் என்பதும், பிரளயம் முடிந்து சிருட்டி முன் கூறியவாறு நிகழும் என்பதும், கால அளவு இவ்வாறு கொள்ளப்படும் என்பதும். அவ்வளவைப்படி கொள்ளப்பட்ட நான்முகனது பகற்காலம் சிருட்டிகற்பம் ஆகும் இரவுக்காலம் சங்காரகற்பம் ஆகும் என்பதும், இவ்விரண்டும் சேர்ந்தது அவனுக்கு ஓர் நாள் ஆகும்; இந்தநாள் முந்நூற்று அறுபது கொண்டது அவனுக்கு ஓர் யாண்டு ஆகும்; இவ்வகையான யாண்டு நூறு கொண்டது நான்முகன் திதிக் காலமாம் என்பதும், நான்முகன் திதிக்காலம் திருமாலுக்கு ஓர் திங்களாகும்; இக் கணக்கினால் திருமாலுக்கு நூறுயாண்டு நிகழின் அது அவன் திதிக்காலம் ஆகும் என்பதும், திருமாலின் திதிக்காலம் அரனுக்கு ஓர் திங்கள் ஆகும்; இவ்வளவை முறையால் நூறு யாண்டு நிகழின் அது மகேசனுக்கு ஓர் நாள் ஆகும் என்பதும், இவ்வளவையால் நூறு யாண்டு நிகழின் அது சதாசிவனுக்கு ஓர் நிமிடம் ஆகும் என்பதும், இவ்வளவைப்படி சதாசிவற்கு நூறு யாண்டு நிகழின் அது பரசிவனுக்குத் துடி என்னும் கால அளவையாய் ஒடுங்குதல் தோன்றுதலெல்லாம் அக்காலத்தில் நிகழும் என்பதும், நிலம் முதலான தத்துவங்க ளெல்லாம் ஒன்றில் ஒன்று ஒடுங்கும் முறை இன்னவாறு என்பதும், தோன்றும் பொழுதும் ஒடுங்கிய முறையே தோன்றும் என்பதும், பிரளயகாலத்தில் அழியாமல் நிலைபெறுவன மாயை, புருடன், சிவன் என்னும் மூன்று பொருள்கள் என்பதும், பிரளயத்தும் இறைவன் ஐந்தொழில் நிகழ்த்துவன் என்பதும், உயிர் கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்றவத்தை பெறும் அவ்வவத்தையின் இயல்பு இத்தகையதென்பதும், உயிர் சகலாவத்தையில் புரியட்டக உடம்புடையவனாய் வினைப்பயனை நரகம் சுவர்க்கம் என்பவற்றில் புகுந்து நுகர்வன் என்பதும், அம்மூன்றவத்தையுள் சுத்தாவத்தை தோன்றுதற்குக் காரணம் தீட்சையாகும்; தீட்சைக்குக் காரணம் சத்திநி பாதமாம் என்பதும், உயிர் புரியட்டக உடம்புடையவனாய்ப் பல்வகைப் பிறப்பில் பலகற்ப காலம் உழன்று வருந்தி நிற்ப கன்மமலம் பக்குவ மடைந்து இருவினை ஒப்பு நிகழின் இறைவன் தன் ஞான சத்தியை அவ்வுயிரினிடைப் பதியவைப்பன் என்பதும்,

அப்பொழுது ஆணவமலமும் பக்குவம் அடையவேண்டும் அது பக்குவமடையாவிடின் இறைவனுடைய ஞான சத்தி மாருய்த் திரோதான சத்தியாயிருக்கும் என்பதும், உயிரினிடத்திலே ஆணவமல சத்தி நீங்கிய பொழுது பதிந்த சிவஞானக்கிரியா சத்தியானது அவ்வுயிரிடந்தே அளவற்ற தயைமுதலிய நற்குணங்களை விளங்கச் செய்யும் என்பதும், பரசிவன் எண்ணத்தால் நல்லாசனை அடைந்தவனுன உயிர் கடைசி உடம்பு (சரம தேகம்) உடையவனுய்ப் பிறப்பான் அந்நிலை உடையவனைப் பிண்ட ஞானி என வழங்குவர் என்பதும், அப் பிண்ட ஞானிக்குச் சத்திநிபாதப் பேற்றில் உயிர்ப்பொருள் இது, உயிரல் பொருள் இது என்று பகுத்துணரும் அறிவு தோன்றும் அதற்குப் பிண்டஞானம் என்று பெயர் என்பதும், முத்திவிருப்பு, உடல் வெறுப்பு, அடியார் பத்தி, சிவாகம விருப்பு முதலானவை சத்திநிபாதக் குறியாம். இக்குறி மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் என நான்கு வகையாயிருக்கும். இப்பக்குவ நிலைக்குத் தக பரமேசுரன் உயிர்கட்குச் சத்தியோ நிருவாணம் முதலிய தீக்கையினைச் செய்வன் என்பதும். தீட்சை என்பதற்கு அறிவைக் கொடுத்து மலத்தை அழிப்பது என்று பொருளாகும்; அது சாதாரம் நிராதாரம் என இருபிரிவாகும் பரமசிவன் விஞ்ஞானகலர் பிரளயாகலர் என்னும் உயிர் வருக்கங்கட்குத் தீவிரதர சத்திநி பாதத்தால் நிரதி கரணனுயிருந்து செய்யும் தீக்கை நிராதாரம் என்பதும், அப்பரமேசுரன் குருவடிவத்தைப் பொருந்திநின்று மந்த சத்திநி பாதத்தால் சகலர் என்னும் உயிர் வருக்கத்திற்குச் செய்யுந் தீட்சை சாதாரம் என்று பெயர் பெறும், அச்சாதாரம் சபீசம் நிற்பீசம் சின்மயம் என்று மூன்றுவகையாயிருக்கும் அவை சிவாகமங்களில் முறையே கன்மகாண்டம் பத்திகாண்டம் ஞான காண்டங்களில் கூறப்பட்டுள்ளன என்பதும், அவற்றுள் சபீச தீக்கை சத்தியோ நிருவாணம் சிரநிருவாணம் என இரண்டாகும், அவற்றுள் சத்தியோ நிருவாணமாவது சீடன் பல பிறவிகளில் மூன் செய்வினை (சஞ்சிதம்) நுகர்வினை (பிராரத்தம்) இனி வரும் வினை (ஆகாமியம்) என்னும் இவற்றை யெல்லாம்

மாற்றுவதாம் என்பதும், சிரநிருவாணம் என்பது சீடனுடைய சஞ்சித ஆகாமிய வினைகளை மட்டும் தீர்த்து நுகரும் போகத்தை (பிராரத்தத்தை) முடிவில் தீர்ப்பதாம்; அது ஆணை, உவமை, சுவத்திகாரோகணம், விபூதி பட்டம், கலசாபிடேகம், இலிங் காயிதம் இலிங்கசுவாயதம் என்று ஏழாம் அவ்வேழும் இன்னின்னவாறு செய்யப்படும் என்பதும், முத்தர் என்பார் சீவன் முத்தர் பரமுத்தர் அபரமுத்தர் என மூவகையராவார் அவருள் சிரநிருவாணதி தீக்கையினை உடையவன் சீவன் முத்தனுவான் அவன் வீரமாயேசன் என்றும் கூறப்படுவான் அவன் உடம்பின் அந்தத்துப் பரமுத்தனும் அளவும் ஆசான் விதித்த முறைப்படி விதிமரபினை விடாது நிற்பன் என்பதும், அண்ணல் அருள்புரியும் யோகம் மந்திர யோகம், இலய யோகம், அடயோகம், இராசயோகம், சிவயோகம் என ஐந்தாகும்; அவை இன்ன முறையில் செய்யப்படும் என்பதும். இவ்வைந்தும் ஒன்றில் ஒன்று உயர்தனவாம் என்பதும், அவருள் சிவயோகியின் அவத்தை சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்ினோடு சகசம், உன்மணி என்பவை சேர்ந்து ஏழாகும் அவற்றின் இயல்பு இவ்வாறும் என்பதும், இந்நிலை யுடையோர் சீவன் முத்தராவார் என்பதும், மந்திரேசர் புவனேசர் என்று கூறப்பட்டுச் சாலோக சாமீப சாரூப மென்னும் முப்பதம் பெற்றவர் அபரமுத்தர் என்பதும், உவமையற்ற சாயுச்சியப் பேறடைந்தவனே பரமுத்தனுவான் இவன் பரம கேவலத்துவம் பெற்ற முத்தனும் நிருமலனும் ஆவான்; இவன் மீண்டு பிறப்பினை அடைந்து உழலான் கலாதியற்றவன் வியாபக அறிவினையுடையவன் இலயம் போகம் அதிகாரம் என்னும் பதம் கடந்தவன் என்பதும், நிலைபெற்ற சிவசூரியன்றன் சத்தி யாகிய ஒளியால் வலிமை செய்யப்பெற்ற தனது சித்தென்னும் விழியால் சிவனை ஆணவ மிலாத சீவன் காண்பான்; ஒரு பொருளைக் காண்பதற்குக் கொண்ட கொள்ளியை அதனைக் கண்டபின் நீத்தல் போலச் சிவமாகிய ஞேயத்தை ஞானத்தாற் கண்டு, கண்டபின் அந்த ஞானத்தையும் விடுவன் என்பதும், எல்லாத் தத்துவங்கட்கும் அப்பாற்பட்ட சிவத்தில் ஒடுங்கப்பெற்ற

ஞானத்தை யார் ஒருவன் உளனுவானே அனையான்றன்னை பரமுத்தன் எனக் கூறுதல் நூற்குத் துணிபாம் என்பதும், அத்தகையோனுக்கு மந்திரம் தியானம் வணக்கம் பூசனை தந்திரம் முதலியன இல்லை என்பதும், சிவஞானப் பேறுடையவர் சிவனை யன்றி வேறொன்றினையும் உணர்வதில்லை என்று மொழிந்த முறையால் அச்சிவப்பிரகாசத்தில் பொருந்தியவர்குப் பேறு போகத்தை நுகர்வதும் அதற்குத் தலைவராவதும் அதிகாரங்களை மேற்கொள்வதும் முதல்வன் செய்யும் ஐந்து தொழில்களைப் பெறுவதும் பொருந்தா என்று ஆகமங்கள் கூறும் என்பதும், எங்கும் நிறைந்த சிற்சத்தியை வடிவமாகவுடைய பரமுத்தியானது மலம் நீங்கிப் படைத்தல் முதலிய ஐந்து தொழிலினைச் செய்யும் செயலொன்றின்றி, சிவனுடன் சமரசம் பெற்று (இலிங்காங்க சமரசம்) நிற்கும் குறியாய்ச் சிறந்த தாம் என்பதும், தீக்கையால் சாதிக்கப்படுவது சச்சிதானந்தமயமாம் ஆன்ம சொரூபமேயாம் என்பதும், இது சாயுச்சிய முத்தியாம் என்பதும், எல்லாச் சிவாகமப் பொருளும் தெரிந்து கூறத்தக்க **சிவப்பிரகாசன்** கூறிய இந்நூலின் குற்றமற்ற பொருளை முத்தி என்னும் செல்வம் பெறாத வறுமை நீங்கி வாழ்வு பெற வேண்டுபவர்கட்கு விரிந்த அறிவும் இன்பமும் எய்துமாறு தன்கண் உள்ள அருளினல் கொடுப்பவனை, ஆரணம் கூறிய சிவனே என, அவன் கண்ணிற்குப் புலப்பட வந்தான் என்று உயர்ந்தோரெல்லாம் போற்றுவர் என்பதும் கூறப்பட்டுள்ளன.

சிவப்பிரகாச விகாசப் பொருட் சுருக்கம்
முற்றும்

# பொருளடக்கம்

இறைவன் துணை

# இந்நூலுக்குப் பிறர் கூறிய சிறப்புப் பாயிரம்

**பொன்புரை கடுக்கை வேணிப் புகன்றஆ கமக்கு ளத்தைத**
**தன்பெயர் விகாச நாமச் சருக்கரை யாய்ச்ச மைத்தான்**
**குன்றவிற் குழகன் வாழும் கூவநற் சரிதந் தன்னைத்**
**தென்றமிழ்க் கவிபு னைந்த சிவப்பிர காசன் ருனே.**

இதன் பொருள் : மேருவாகிய குன்றத்தை வில்லாகப் பெற்றுத் திரிபுர தகனம் செய்த குழகன் வாழ்ந்திருக்கும் திருக்கூவத் தலபுராணத்தைத் தென்தமிழ்க் கவியால் புலனெறி வழக்கப்படிப் புனைந்து கூறிய **சிவப்பிரகாசன்** என்னும் ஒப்பற்றவன்ருன், பரமேசுரன் திருவாய் மலர்ந்தருளிய சிவாகம மாகிய வெல்லக் கட்டியைச் **சிவப்பிரகாச விகாசம்** என்னும் பெயரமைந்த சர்க்கரையாகச் செய்தருளினுன். (என்றவாறு)

## குறிப்பு

குழகன் – அழகன். தன்பெயர் – சிவப்பிரகாசன் என்னும் தன்பெயர். ஞானமானது பாச ஞானமென்றும் பசு ஞானமென்றும் பதி ஞானமென்றும் மூவகைத்து. உடம்பினையே உயிரென்று அறிபவன் பாச ஞானி; உடம்பிற்கு வேருக உயிருண்டு என்று அறிபவன் பசு ஞானி; உடல் உயிர்க்கு வேருக இவற்றை இயக்கும் சிவம் உண்டு என்று அறிபவன் சிவ ஞானி. இவர்களில் சிவ ஞானி சிறந்தவனுவான் என்பதை,

ஜ்ஞாநஞ்ச த்ரிவிதம் ப்ரோக்தம் பாச: பசு பதிஸ்திதா ‖ 15
தேகாத்ம வாதிநச் சைவ பாச ஜ்ஞாநீதி கீர்த்திதம் |
ஜீவஜ்ஞாநி பசுஜ்ஞாநி சிவஜ்ஞானி பதிஸ்மிருதம் ‖ 16
ஸர்வேஷாம் ஜ்ஞாநிநாஞ் சைவ பதிஜ்ஞாநி வரிஷ்டகம் | 17

– தந்திராவதாரப் படலம்

என்னும் **காமிகாகமத்தால்** உணரலாம்.

விகாசம் – மலர்ச்சி. சிவத்தைப் பிரகாசிக்கச் செய்யும் ஞானத்தின் மலர்ச்சியே **சிவப்பிரகாச விகாசம்** என்பதன் பொருளாகும்.

உ.

இறைவன் துணை

துறைமங்கலம்

# சிவப்பிரகாச சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# சிவப்பிரகாச விகாசம்

## பாயிரம்

### காப்பு

1. எடாக்க ரத்தில் எழிலங் குசமகப்
படாக்க ருத்தறப் பாகரைத் தாள்களாற்
றடாக்க ழற்றித் தளைவிடுஞ் சிற்சிவக்
கடாக்க ளிற்றைக் கருத்து ளிருத்துவாம்.

இ-ள்: எழில் அங்குசத்தைக் கரத்தால் எடா (எடுத்து), அகப்படாக் கருத்து அற, பாகரைத் தாள்களால் தடா (தடுத்து), கழற்றித் தளையிலிருந்து விடுவிக்கும் சிற்சிவக் களிற்றைக் கருத்துள் இருத்துவாம் (எ-று) 1

விளக்கம்

அகப்படாக் கருத்து – உள் முகமாய்ச் செல்லாத மனம்; புறப்பொருள்களில் ஓடும் மனம் என்றதாம்.

பாகர் – யானைப் பாகரையும், பக்குவ நிலையுள்ள தொண்டரையும் உணர்த்தும். தளையைக் கழலச்செய்து விடுவிக்கும் என்று மாற்றுக. தளை - யானையைத் தளையும் சங்கிலியையும், உயிர்களைத் தளையும் ஆணவம் முதலான பாசங்களையும் குறிக்கும். இப்பாட்டு சிலேடையணி.

இப்பாட்டு சிவப்பிரகாச விகாசம் என்னும் இந்நூல் இனிது முடிதற்பொருட்டு, அறிவு மயமான சிவபெருமானுக்குப் புதல்வனை யானைமுகப் பெருமானை நாம் உள்ளத்தில் உள்ளுவாம் என்று காப்புக் கூறிற்று. எத்தகைய களிறு எனின்? அழகிய அங்குசம் என்னும் கருவியைத் தன் கையால் எடுத்து, உள் முகமாய்ச் செல்லாமல், புறத்தே திரிந்துகொண்டிருக்கும் மனச் செயல் நீங்கும்படிப் பக்குவமுடைய தொண்டரைத் தன் திருவடிகளால் தடுத்துப், பாசத் தளையைக் கழற்றிவிடும் களிறென்க.

உலகத்துக் களிறெல்லாம் பாகர்தம் கையகத்துள்ள அங்குசத்தால் அடக்கப்பட்டுக் கட்டுத் தறியின்கண் சங்கிலியால் கட்டப்பெறும்; ஆனால், இச் சிற்சிவக் களிறோ அங்குசத்தை எடுத்துப், பாகரைத் தாள்களால் தடுத்து, அவர்தம் தளையைக் கழற்றி விடுகின்றது. இஃது என்ன வியப்பு? என்றதாம். 'அற்புதக் கடாக்களிறு' என்றும் பாடம் உண்டு.

## தற்சிறப்புப் பாயிரம்

2\. நீர்கொளும் படர்சடை நிலவெ றிப்பமென்
தார்கொளும் பரன்திருத் தாள்இ றைஞ்சி,நான்
சீர்கொளும் சிவாகமம் தெரிந்து கூறுவன்
பார்கொளும் பதிபசு பாசத் தன்மையே.

இ-ள்: நான் பரமேசுரனுடைய திருவடிகளை வணங்கிக் கொண்டு, அத்திருவடியாகிய திருவருளால் சிவாகமங்களில் ஞான பாதத்தை நன்கு ஆராய்ந்து, பதி பசு பாச இலக்கணங்களைக் கூறுவேன். (எ-று) 2

## குறிப்பு

திருத்தாள் – திருவருள். தன்மை – இலக்கணம். இது தெய்வ வணக்கமும், செயப்படு பொருளும் கூறலின் தற்சிறப்புப் பாயிரமாகும்.

# நூல்

## பதி மரபு

**பதியாகிய சிவன் நிமித்தகாரணன் என்றது.**

3. இயற்கையான் நிருமல ஞானம் எய்திநல்
உயிர்க்கெலாம் உயர்தரு முத்தி வேதியைப்
பயக்குமோர் ஐந்தொழில் பதியெ னும்சிவம்
அயர்ப்பிலா நிமித்தகா ரணனென் றுண்டரோ.

*இ-ள்: பதி பசு பாசம் என்று முன் கூறப்பட்ட மூன்று பொருள்களில், பதி என்னும் சிவன் காணப்படும் இவ்வுலகிற்கு மூவகைக் காரணங்களில் நிமித்தகாரணன் என்று கருதப்பட்டு உண்டு என்றவாறு. அப் பதிப்பொருள் இயல்பாக அமைந்த குற்றமற்ற ஞானத்தையும், உயிர்கட்கெல்லாம் முத்தி என்னும் வேதித் தன்மையைப் பயப்பிக்கும் ஐந்து தொழிலேயும் உடையது. 'செம்பைப் பொன்னுக வேதித்தல்போல்' பதி, பெத்தான்மாவை முத்தான்மாவாக ஆக்குகிறுன்.* 3

## பதி இலக்கணம்

4. முழுவினை முதன்மைகொள் முறைமை யாலவன்
முழுதுணர் தனிமையும் மொழியப் பட்டிடும்;
தழுவுமிவ் விருவகைச் சத்தி மேவினேன்
அழிவற உளன்உயர் அநந்த நற்குணம்.

*இ-ள்: படைத்தலாதி வினைகட்குப் பதி முழுமுதன்மை கொள்ளும் முறைமையால், அவ்வினைகளை இயற்றுவதற்குப் பேரறிவாகிய முற்றுணர்வும் வேண்டியிருத்தலின், அவனுக்கு முழுதுணர் தனிமையும் சிவாகமங்களால் மொழியப்பட்டிடும். கிரியை, ஞானம் என்னும் இருவகைச் சத்திகளை மேவிய அவன், உயர்ந்த அநந்த நற்குணங்களையெல்லாம் அழிவறப் பெற்றுளன். (எ-று)* 4

## குறிப்பு

முழுவினை முதன்மையும், முழுதுணர் தனிமையும் ஆகிய இரண்டிற்கும் ஏதுவான தாதான்மிய கிரியாசத்தி, ஞானசத்திகளை யுடைமை முதல்வன் இலக்கணமாம்.

## இதுவும் அது

5. அப்பசு பாசம்வே றாக நின்றவன்
ஒப்பரும் அருளினேன் உபாதி ஒன்றிலோன்
கைப்பொடு விருப்பிலன் உண்மை காண்பவன்
செப்படி நடுவொடு முடிவி லாதவன்.

இ-ள் : தன்னோடு முப்பொருளாக எண்ணப்பட்ட அப்பசு பாசங்கட்கு வேறாக நின்றவனாகிய அப்பதி, பேரருளை உடையவன்; உபாதி அற்றவன்; வெறுப்பும் விருப்பும் இல்லாதவன்; ஐயமும் திரிபுமாய் உணராமல் உண்மையாய் உணர்பவன்; பிறரால் படைக்கப்படுதலும் காக்கப்படுதலும் அழிக்கப்படுதலும் இல்லாதவன். (எ-று) 5

## இதுவும் அது

6. தனிமுதல் இயல்புறு நிமலன் தண்ணளி
முனிவுசெய் வலியினேன் முழுது நின்றசிற்
கனன்உறும் இலயபோ காதி காரமாம்
வினையினின் றகன்றவன் விளம்பும் ஈசனே.

இ-ள் : மேலே விளம்பப்பெற்ற பதியாகிய ஈசன், ஒப்பற்ற முதலாய், இயல்பாகவே பாசம் இல்லாதவனாய், உயிர்கட்குத் தண்ணளியும் முனிவும் செய்யும் வலிமையுடையவனாய், பூரணமாய் நின்ற சிற்கனனாய்ப், பொருந்திய இலயம் போகம் அதிகாரமாம் வினையில் நின்று, அவ்வினைகளில் நீங்கியவனாய் உள்ளான். (எ-று) 6

## குறிப்பு

பரமசிவன் இலயம் போகம் அதிகாரம் என்னும் மூன்றவத்தையினும் முறையே அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்று திருமேனி கொண்டு, சத்தன் உத்தியுத்தன் பிரவிருத்தன் எனவும், சிவன் சதாசிவன்

மகேசன் எனவும், பெயர் பெற்று, அழித்தல் காத்தல் படைத்தல் என்னும் வினைகளை மேற்கொண்டு நின்றாலும், அவ்வினைகளில் பற்றற்றவன் ஆகையால் "வினையில் நின்று அகன்றவன்" என்றார். சிறக்கனன் - அறிவால் மேம்பட்டவன்.

## இறைவன் ஐந்தொழில்

7. படைத்திடல் அளித்திடல் பரிந்தொ டுக்குதல்
தடுத்திடல் அருளுதல் என்று சாற்றுவர்
அடுத்தஅவ் விறைசெயும் ஐந்தொ ழிற்பெயர்
விடுத்திடும் அவற்றினை விரித்தி யம்புவாம்.

இ-ள்: மேற்பாட்டிலே, (3) நல்லுயிர்க்கெலாம் உயர்தரு முத்திவேதியைப் பயக்குமோர் ஐந்தொழில் என்றவை படைத்தல், அளித்தல், ஒடுக்கல், தடுத்தல், அருளுதல் எனப் பெயர்பெறும். அவற்றைக் கூறுவோம். (எ-று) 7

### குறிப்பு

தடுத்தல் - மறைத்தல். விடுத்தல் - கூறுதல்.

## படைப்பு

8. பரன்உபா தானம் என்னப்
பட்டஅவ் விந்து வின்கண்
புரைதவிர் கலைசி வாதி
புவனம்அப் புவனம் வாழ்நர்
கருவுடல் வருண மாதி
காமிகா திகள்வந் தெய்தல்
உரவிய பொதுச்சி றப்பாம்
உடம்புயிர்க் குறல்ப டைப்பாம்.

பரனுடைய பொதுப் படைப்பாம்; சிறப்புப் படைப்பாம் என்று கூட்டுக.

இ-ள்: உபாதான காரணமாகிய விந்துவின்கண் கலையையும், சிவம் முதலான தத்துவங்களையும், புவனங்களையும்,

அப்புவனம் வாழ்நருக்கு உடம்புகளையும் பொருளுலகத்தின் கண்ணும், எழுத்து, பதம், வாக்கியம் முதலானவற்றையும், காமிகம் முதலான ஆகமங்களையும் சொல்லுலகத்தின்கண்ணும் வந்து எய்தச் செய்தல் பொதுப்படைப்பாம். உயிர்கள் ஒவ்வொன்றுக்கும் உடம்பு உறச் செய்தல் சிறப்புப் படைப்பாம். (எ-று) 8

## குறிப்பு

பரன் - மேலானவன். உபாதானம் - முதற்காரணம். வருணம் - எழுத்து. விந்துவின் இலக்கணத்தை இந்நூல் 157 ஆம் பாடலால் உணர்க. கலை - சாந்தியாதீத கலை, சாந்தி கலை, வித்தியா கலை, பிரதிட்டா கலை, நிவர்த்தி கலை என்பன. சிவாதி - சிவம் முதலான முப்பத்தாறு தத்துவம். புவனம் - மேற்படி கலையில் தத்துவத்தில் அடங்கிய உலகம்,

## திதியும் துடைத்தலும்

9. விதித்திடும் உலகு தத்தம்
விடையமோ டுறநி றுத்தல்
திதித்தொழில் ; சுத்தா சுத்தம்
எனப்படு செய்கை எல்லாம்
மதித்தகா ரணமாம் விந்து
மாயையின் உறவொ டுக்கல்
துதித்திடு பரன்ற னது
துடைத்திடு தொழிலென் றோர்வாய்.

விதித்திடும் உலகு - படைக்கப்பட்ட உலகம். விடையமோடு உற நிறுத்தல் - இன்ப துன்ப நுகர்வாகிய விடையமோடு பொருந்த நிறுத்துதல். செய்கை என்றது காரிய உலகத்தை. செய்கை - செயப்படுபொருள். அது விந்துவாகிய சுத்த மாயையிற்றோன்றிய சுத்த உலகமும், மாயையாகிய அசுத்தத்திற் றோன்றிய அசுத்த உலகமும் என இருவகைத்து.

இ-ள்: படைக்கப்பட்ட உலகைத் தத்தம் விடயமோடு உறும்படி நிறுத்துதல் பரன் தனது திதித்தொழில் என்றும்,

சுத்தம், அசுத்தம் என்று கூறப்படும் காரிய உலகம் எல்லா வற்றையும் இவற்றிற்கு முதற் காரணமாகிய விந்துவிலும் மாயையிலும் உறுமாறு ஒடுக்குதல் பரன் தனது துடைத்திடு தொழில் என்றும் ஓர்வாய். (எ-று) 9

## மறைப்பும் அருளுதலும்

10. மலத்தினை அளித்த லாற்றம்
மரபுறு போகம் ஊட்டல்
விலக்கரு மறைப்பென் றுரும்;
விடுத்துமும் மலம னைத்தும்
நிலைத்திடு முத்தி ஈதல்
நிகழனுக் கிரகம் என்ப;
இலக்குமிவ் வைந்தும் ஈசன்
எனப்படும் ஒருவன் செய்கை.

மறைப்பைத் திரோதானம் என்பர். மறைப்பாவது உயிர்க் குற்றமாகிய மலசத்தியின் வழி நின்று, அவற்றை நடத்துவதாகிய இறைவனது எண்ணமேயாதலின், அதனைத் திரோதான சத்தி என்று கூறுவர்.

இ-ள்: மலசத்தியினை அளித்தலால் இன்ப துன்ப வடிவாயுள்ள உலக போகங்களை உயிர்க்கு ஊட்டுதல் இறைவனுடைய மறைப்பு என்னும் தொழிலாகும். மும்மல பந்தங்களை விடுத்து உயிர்க்கு நிலையான முத்தியைத் தருவது இறைவனுடைய அநுக்கிரகம் என்னும் தொழிலாகும். படைப்பு முதலான ஐந்தும் ஈசன் செயல். (எ-று) 10

## ஐந்து தொழில் செய்யும் இறைவன் நிரவயவனோ? அவயவனோ? என்னும் வினா.

11. ........ நிரவய வன்று
ஞேசார் அவயவ னோஇவ்வைந்
தெனும்வினை செய்வோன் மேனி
இலனெனில் ஒருசெ யற்கும்

**வினைமுத லாதல் இன்றும்**
**மேல்அவ யவனே என்னில்**
**வனைவுறு குலாலன் போல**
**வடிவொடு விகாரி யாகும்.**

*இ-ள் : ஐந்து தொழில்களைச் செய்யும் இறைவன் அவயவம் இல்லாதவனோ? அவயவம் உடையவனோ? என்று வினவின், அவன் அவயவம் இல்லாதவனே எனின், தொழிலுக்கு அவயவம் துணைக்காரணம் ஆதலின், அவன் ஒரு .செயலுக்கும் வினை முதலாதல் இல்லையாகும்; அவன் அவயவம் உடையவனே எனின், அவயவம் உடையவனாய் வனைதலாகிய தொழிலைச் செய்யும் குயவனைப்போல் கருதப்பட்டு, வடிவத்துடன் விகாரம் உடையவனாகக் கருதப்படுவன்; அவனை நிர்விகாரி என்றல் பொருந்தாது என்பது வினா. இதற்கு விடை அடுத்த பாட்டு.* **11**

*நிரவயவன் – அவயவம் இல்லாதவன்.*

**12. தன்செயல் பிறர்செ யற்கண்**
**அனவத்தைத் தானும் சாரும்**
**என்குவை யேல்,மெய் யாதி**
**உபாதியால் இறைவன் செய்யின்**
**மன்குறை உளது; விந்து**
**வடிவாதி உபாதி யின்றித்**
**தன்பெருஞ் சத்தி கொண்டே**
**தலைவனும் தொழிலும் செய்வன்.**

*இ-ள் : இறைவன் அவயவியாய் (உடம்பொடு கூடியவன்) படைப்பு முதலான ஐந்து தொழிலைச் செய்வன் எனில், அவன் கொண்ட உடம்பை மற்றொருவன் படைக்கவேண்டும் என்று, வரம்பில்லாமல் சென்று, அனவத்தையாம் எனில், உடம்பு முதலிய உபாதியைக் கொண்டு, அதனால் இறைவன் செய்தால் அனவத்தை என்னும் குற்றம் கூறப்படும்; தலைவன்றானும் விந்து, மாயை இவற்றால் உண்டாகிய வடிவம் முதலிய உபாதியின்றித் தன்னுடன் பிரிவற விளங்கும் சத்தியினைக் கொண்டே ஐந்தொழிலைச் செய்வன். (எ–று)* **12**

## குறிப்பு

*அனவத்தை - ஒரு நிலையில்லாதது.*

*உபாதி - ஒன்றால் கண்டிக்கப்படுவது.*

## தன் பெருஞ் சத்தி (12) என்றதை மூன்று பாட்டால் கூறுகின்றார்.

13. ஒன்றாய்ப், பரமாய், நிருமலமாய்,
ஒளியாம் பரம சிவன்றனக்குக்
"குன்றாப் பெருமை படைத்திருக்கும்
குடிலை போலப்" பரிக்கிரகம்
அன்றாய்த், "தழற்கு வெம்மைபோல்"
அவினா பாவி யாய்த்துணையொன்
றின்றாய்ப், பராபி முகமாகி,
இயற்றும் இயல்பொன் றுடையதாய்.

14. தளைய திலதாய்ச் சமவேத
சத்தி யாய்,வே றிலாததாய்
இளிவில் சத்தி சத்திமான்
எனலால் பரனில் வேறுமாய்
உளதென் அளவாய்ப் பொருண்மையால்
ஒப்பில் அவற்கு மூர்த்தியாய்
விளிவ திலதாய் நுண்ணிதாய்
மேலாய் நிறைவாய்ச் சாந்தமாய்.

15 அந்த மாதி இலாதிவ்வா(று)
அமைந்த அமல சத்திதான்
"உந்தும் இராகு வின்றலையென்(று)
உரைத்தல் போல" இறைவற்குப்
பந்த உருவாய் உபசரிக்கப்
படும்;அச் சத்தி சந்நிதிக்கே
விந்து மாயை கலக்கமுறல்
மேவும் எனஆ கமம்அறையும்.

இ-ள் : அமல சத்திதான் (15) ஒன்ருகவும் (13) பரமாகவும் நின்மலமாகவும் உள்ள பரமசிவன் தனக்குக் குடிலை என்னும் சுத்தமாயை போல் பரிக்கிரக சத்தியாகாமல், நெருப்பிற்கு வெப்பம்போல் விட்டு நீங்காத தாதான்மிய சத்தியாய்த், தனக்குத் துணையாக ஒன்றினைப் பெருததாய், பரமேசுரனுக்கு நேர்முகமாகி ஐந்தொழில்களை இயற்றும் இயல்பொன்றினை உடையதாய்ப், பாசங்களால் (14) பந்திக்கப்படாததாய், இறைவனுடன் கூடிய சத்தியாய், ஒற்றுமை நயத்தால் இறைவனின் வேருக இல்லாததாய், சத்தி சத்திமான் என்று வழங்கப்படுதலால் வேற்றுமை நயத்தால் வேறுமாய், உள்பொருளாய், பொருள் தன்மையால் ஒப்பில்லாத பதிக்கு வடிவாய், அழியாததாய், நுண்மை உடையதாய், மேன்மையுடையதாய், எங்கும் நிறைந்ததாய், சாந்தத்தன்மை உடையதாய், அழிவும் (15) தோற்றமும் இல்லாது, இவ்வாறு இறைவனுக்கு அமைந்த அமல சத்தியானது, இராகுவின் தலை என்று கூறப்படும் ஒற்றுமைக் கிழமைபோல், அவனுக்கு உருவமாக உபசார வழக்கால் கூறப்படும். அச் சத்தியின் சந்நிதானத்தின்கண் இறைவனின் பரிக்கிரக சத்தியாகிய விந்துவும், மாயையும் கலக்க முற்று, புவன போகங்களும், தனுகரணமும் தோன்றும். (எ–று)

13, 14, 15

குறிப்பு

ஒன்ருய், பரமாய், நிருமலமாய் என்பன பரமசிவனுக்கு அடை. பரமசிவனுக்குச் சித்சத்தி அபின்ன சத்தியாகும்; குடிலை பின்ன சத்தியாகும்; அது கருதி, குடிலைபோலப் பின்னசத்தி யாகாமல், அச்சத்தி தழலுக்கு வெம்மைபோல் அபின்ன சத்தியாக உள்ளது என்றனர். அவிநாபாவம் அவினபாவம் எனத் திரிந்தது. அபிமுகம் – நேர் முகம்.

## பரமசிவன் விகாரியலன் என்றது

16. இறைவன் சத்தி யாற்கலக்கம்
எய்தும் அந்த விந்துவே
அறையும் உலகம் அனைத்தினையும்
ஆக்கும்; அதனல், அறிவுருவாய்

நிறையும் அமல பரமசிவன்
நிகழ்த்தின் விகாரி யலனென்று
மறையும் அளவில் ஆகமமும்
மதித்துத் துணிவோ டறையுமால்.

இ-ள் : இறைவனுடன் பிரிப்பின்றி நிற்கும் அமலசத்தியால் கலக்கம் எய்தும் அந்த விந்துமாயை என்னும் பரிக்கிரக சத்தியே உலகம் எல்லாவற்றையும் ஆக்கும். அதனால், அறிவே வடிவாய் வியாபித்திருக்கும் குற்றமற்ற பரமசிவனை ஆய்ந்து கூறின், அவன் விகாரியலன் என்று, வேதமும் சிவாகமும் கருதித் துணிவோடு ஒருமுகமாகக் கூறும். (எ-று) 16

ஐய வினா

17. விந்துச் சடமா தலிற்றானே
மேவு முயற்சி இலாததனுக்(கு)
அந்தச் சிவனே வினைமுதலாம்;
ஆகின், மறித்து விகாரியாய்
முந்தைப் புகற்சிக் கிகலாகி
முடியா தோ? என் குவையாயின்,
இந்தக் கடாவிற் கெதிர்விடைவிட்(டு)
இகலை இமைப்போ தினிலழிப்பாம்.

இ-ள் : உலகம் அனைத்தினையும் ஆக்கும் விந்துவானது சடசத்தி யாகையால், தானே உலகமாக ஆகும் முயற்சி இல்லாத அதனுக்கு, நிர்விகாரி என்று கூறப்பட்ட அந்தச் சிவனே வினை முதலாக ஆகல் வேண்டும்; இவ்வாறாகின், மீண்டும் அச்சிவன் விகாரியாகக் கருதப்பட்டு முன்னே கூறியதற்கு இது மாறுபாடுடையதாகி முடியாதோ என்று கூறுவையாயின், இந்த ஐயவினாவிற்கு எதிர்விடை கூறி, மாறுபாட்டினை நொடிப் பொழுதினில் ஒழிப்பாம். (எ-று) 17

இருவகைக் கருத்தா

18. கருத்தா இருவர்; சங்கற்ப
கருத்தா கரண கருத்தாவென்(று)
உரைத்தார்; அவருள் சாதனங்கொண்(டு)
உஞற்றில் கரண கருத்தாவாம்;

வருத்தா நினைவு மாத்திரையால்
வருவிக் கின்றேன் அனைத்தினையும்
செருத்தான் அகன்ற சங்கற்ப
கருத்தா வென்பர் திருக்கற்றோர்.

*இ-ள்: மாறுபாடற்ற அறிஞர் ஒரு வினைக்கு முதலாகும் கருத்தாவைச், சங்கற்ப கருத்தாவென்றும், கரண கருத்தாவென்றும் இருவராக உரைத்தார். அவருள் கருவிகளைக்கொண்டு ஒரு காரியத்தைச் செய்பவன் கரண கருத்தாவாம். வருந்தாமல் தன் எண்ணம் ஒன்றினாலேயே எல்லாப் பொருள்களையும் ஆக்குபவன் யாரோ அவனை மலைவற்ற சங்கற்ப கருத்தா என்று கூறுவர். (எ-று)* 18

*கரணம், சாதனம் என்பன கருவியைக் குறிக்கும்.*

## இறைவன் சங்கற்ப கருத்தா ஆதலின் விகாரமிலன் என்றது.

19. சங்கற் பத்தால் கடம்குயவன்
தன்னால் செய்யப் படா(து)அதனால்
அங்கக் குயவன் கரணகருத்
தாவாய்த் தேகி விகாரியாம்
சங்கற் பத்திற் சிவன்சத்தி
சந்நி திக்கண் கலக்குதலால்
துங்கக் குடிலை தனைஅவன்றான்
சொல்லின் விகாரி யலன்என்னே.

*இ-ள்: குயவன் தன்னால், தன் நினைவு ஒன்றினாலேயே குடம் செய்யப்படாது; அவன், தண்டம் சக்கரம் முதலிய கரணங்களைக் கொண்டு குடத்தைச் செய்வதால், கரணகருத்தா என்று கூறப்பட்டு, உடம்புடன் கூடினவனாய் விகாரியாம். சிவன் தன் சத்திசந்நிதிக்கண் நினைவு ஒன்றினாலேயே குடிலையைக் கலக்கி உலகத்தை ஆக்குதலால் அவன் விகாரியலன் என்று கூறுக. (எ-று)* 19

## குறிப்பு

*மேற் கூறியவற்றை "இஃது இவ்வாறாகவென எண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் செய்வதூஉம், கரணத்தாற் செய்வதூஉமென வினைமுதல் இருவகைப்படும். குயவன் கரணத்தாற் செய்வதன்றிச் சங்கற்பத்தாற் செய்யமாட்டான். இறைவன் சத்தி அவ்வாறன்றிச் சங்கற்ப மாத்திரையானே எல்லாத் தொழிலும் செய்யுமாகலால் சங்கற்ப மாத்திரத்தாற் செய்யும் செய்திக்குப் பகைப்பொருளாகிய அவிச்சையாற் கட்டுண்டல் முதலிய குற்றங்கள் கரணத்தாற் செய்யும் குயவன் முதலியோர் மாட்டுப்போல ஆண்டு உளதாவதற்கோர் இயைபில்லை" என்பர்* **சிவஞானமுனிவர்.** (சிவஞா-போ-சூ-௧-அதி-௨ பாடியம்)

## இறைவன் உபாதியின்றித் தன் சத்தியினாலேயே செயல் செய்வன் என்றது.

**20. ஓங்கும் வயிந்த வாதியாம்**
**உபாதி இன்றிப் பரமசிவன்**
**தீங்கில் சத்தி மாத்திரையான்**
**செயற்கை யாதல் அசம்பவமென்(று)**
**ஈங்கு மொழியில், காலம்உரு**
**விலதா யிருந்தும் பயன்தரல்கண்**
**டாங்கு நிமலன் இச்சையால்**
**ஆக்கும் அமூர்த்தன் ஆயுமே.**

*இ-ள்: பரமசிவன் விந்து, மாயை முதலானவற்றால் உபாதியாகிய உடம்புடையவனாதலின்றித் தாதான்மிய சத்தி ஒன்றினாலேயே ஐந்து தொழிலைச் செய்தலென்பது நிகழாதது எனின், காலம் என்னும் ஒன்று உருவில்லாததாயிருந்தும் பயன் தருதல்போல், அவன் வடிவமில்லாதவனாயிருந்தும் தன் சிற்சத்தி யால் உலகங்களை ஆக்கும். (எ-று)* *20*

## குறிப்பு

*இப்பாட்டின் கருத்தினை,*

*"சீலமோ உலகம் போலத்*
*தெரிப்பரி ததனால் நிற்கும்*
*கோலமும் அறிவா ரில்லை*
*ஆயினும் கூறக் கேள்நீ*

ஞாலமே பிணையுந் தந்து
நிறுத்திப்பின் நாசம் பண்ணும்
காலமே போலக் கொள்நீ
நிலைசெயல் கடவுட் கண்ணே" (80)

என்னும் சிவஞான சித்தியாரால் அறிக.

முதல்வன் வடிவமில்லாதவனு யிருப்பினும்
தன் கிரியாசத்தியால் எல்லாம் இயற்றுவன் என்றல்.

21. "கதிர்சன் னிதிமாத் திரையானே
கருத்தா எனல்போல் தினஞ்சேட்டைக்(கு)"
"அதுல அதேகன் எனும்உயிர்தன்
ஆக எதிரில் கருத்தாவாய்
வதிதல் போலப்" பரசிவனும்
வடிவம் இலனாய் இரும்பினும்தன்
எதிரில் கிரியா சத்திஎதிர்
எல்லாம் இயற்றும் என்பரால்.

இ-ள்: நாட்களுக்கும் செயல்களுக்கும் ஞாயிறு சந்நிதி அளவால் கருத்தா என்று கூறப்படுதல் போலவும், விளக்க மில்லாத உடம்பைப் பெற்றிராதவன் என்று கூறப்படும் உயிர் தனது உடம்பின்முன் கருத்தாவாய்த் தங்கியிருத்தல் போலவும், பரமசிவனும் உருவம் இல்லாதவனாய் இருந்தாலும் தன் சந்நிதி முன், தன் தாதான்மிய சத்தியின் சந்நிதிமுன் படைப்பாதி எல்லாத் தொழிலும் இயற்றும் என்று அறிஞர் கூறுவர். (எ-று) 21

உடம்புடன் கூடியவனே கருத்தாவாக முடியும்
என்றல் அநவத்தையாம் என்றது.

22. கண்ட சதேகன் தனக்கேயாம்
கருத்தா ஆதல் எனின்,இவன்றான்
கொண்ட உடம்பு காரியமாம்
குறிப்பால் செய்யும் வினைமுதலாய்ப்

பண்டை ஒருவன் நின்றியற்றப்
படும்;அங் கவற்கும் அவ்வாறும்;
விண்ட அவத்தை முடிவிலதாய்
மேன்மேல் வளரும் அத்திறத்தால்.

இ-ள்: காணப்பட்ட உடம்புடன் கூடியவனுக்கே ஒரு காரியத்திற்குக் கருத்தா ஆதல் ஆகும் எனின், இவன் கொண்ட உடம்பு காரியமாகக் குறிக்கப்படுவதால், காரியத்திற்கு நிமித்த காரணமாகிய வினைமுதல் வேண்டப்படுதலின், இவன் கொண்ட உடம்பைச் செய்யும் வினைமுதலாய் முன்னே ஒருவன் நின்று அவ்வுடம்பு இயற்றப்படும். அவ்வொருவன் உடம்பும் மற்றொருவனால் இயற்றப்படும். சொல்லப்பட்ட இந்நிலை முடிவில்லாததாய் மேன்மேல் வளரும். இக்கொள்கையில் அநவஸ்தா தோஷம் உண்டாகும் ஆகையினாலே. (எ-று) 22

இறைவன் தன் சத்தியாகிய உடம்புகொண்டே
ஐந்தொழில் செய்வன் என்றது.

23. ஆதலால் வயிந்த வாதி
காரியம் இன்றி, மல்கும்
ஆதியாம் படைப்பின் கண்ணே
அநந்தநற் சத்தி உள்ள I
ஆதியாம் இறைதன் சத்தி
ஆயகா யாதி கொண்டே
ஆதியாம் கருத்தா ஆம்என்(று)
அறிந்திடப் படுவ னன்றே.

பாடபேதம் I உள்ளே.

இ-ள்: அளவிறந்த சத்திகளை உடைய முதல்வனாகிய இறைவன், விந்து முதலான மாயையில் தோன்றிய காரியமாகிய உடம்பைத், தான் பெறுதலின்றி, முதற்படைப்பின்கண் தன் தாதான்மிய சத்தியாகிய உடம்பு முதலானவற்றைக் கொண்டே படைப்பாதி ஐந்து தொழில்கட்குத் தான் முதலாகிய வினை முதல் ஆவன் என்று அறிஞரால் அறிந்திடப்படுவன் (எ-று) 23

## குறிப்பு

"முத்தொழில் செய்யும் இறைவன் உருவுடையவனுதல் வேண்டும்; உடம்பின்றி வினை செய்தல் கூடாமையாலெனின், அற்றன்று; தன் உடம்பினை இயக்குவதாய உயிர்க்கு வடிவமின்மையின் இறைவனும் அவ்வாறு உருவின்றி நின்றே தன் உருவமாகிய உலகத்தைத் தொழிற் படுத்துதல் அமையும் என்க" என்றும்,

"அன்றி இறைவன் உருவமுடையவனே என்னின், உருவமெல்லாம் காரியப் பொருளாகலின், அவ்வுருவினைத்தருவான். வேறோரிறைவன் வேண்டும், வேண்டவே, அவனுக்கும் வேறோரிறைவன் வேண்டுமென்று அநவத்தையாய் முடியும்" என்றும்,

"அல்லதூஉம், உருவமாவது எல்லாத்தொழிலும் செய்யும் ஆற்றலைத் தடுப்பதாகலின், முதற்கண் இறைவன் அருவம் உருவம் என்னும் இருவகை வடிவும் இன்றி நின்றே தனது சத்தியால் விந்துவைக் கலக்கி நாதம் முதலியவற்றைத் தோற்றுவித்துப் பின்னர் தனது இச்சை வயத்தால் வடிவமும் கொள்வனென்று உணர்க" என்றும் (சூ - க - அதி - உ - சிபோ - பா) சிவஞான முனிவர் கூறுவதையும் உணர்க.

24. உரைசெயும் வயிந்த வாதி
உபாதியொன் றிலாமை யாலே
பரசிவன் இயற்றும் செய்கைப்
பால்தொறும் அவன்ற னக்குத்
திரிவித கார ணங்கள்
கொண்டுதான் செய்வ தாக
ஒருசெயல் தானும் இல்லென்(று)
உரைப்பர்நுண் ணுணர்வின் மிக்கோர்.

இ - ள்: பரமசிவனுக்கு விந்து மாயைகளினல் உபாதி இல்லாமையால், அவன் இயற்றும் எல்லாச் செயல்தோறும், மூன்று காரணங்களையும் குறைவறக்கொண்டு செய்வதாக ஒரு செயலும் இல்லை என்று அறிஞர் கூறுவர். (எ - று) 24

## குறிப்பு

திரிவித காரணங்கள் – முதல் துணை நிமித்தம் என்பன.

25. காயம்இன் ருக நின்ற
 கரணம்உண் டாக என்னில்,
ஆயசின் மயன்றன் சத்தி
 ஆதலால் அறிவே ஆகும்
தூயவாம் இச்சை ஞானத்
 தொழிலிடை விடமம் இன்றி
மேயதோர் கரணம் ஆகும்
 சத்தியின் வேறென் றில்லை.

இ—ள்: இறைவனுக்கு உடம்பு இல்லாமலிருக்கட்டும்; ஆனால், அறிதல் முதலானவற்றிற்கு மனம் முதலான கருவிகள் உண்டாக வேண்டுமே என்றால், இறைவன் அறிவுவடிவமானவன் அவனுடைய சத்தியாதலால் அதுவும் அறிவுமயமாயிருக்கும்; அவன் இச்சிக்குமிடத்தும் அறியுமிடத்தும் தொழில் செய்யுமிடத்தும் ஏற்றக் குறைவின்றிக் கருவியாக ஆகுவது அவன்றன் சத்தியே; அதனைத்தவிர்த்து அவனுக்கு வேறுகரணம் இல்லை. (எ – று) 25

குறிப்பு

இப்பாட்டின் கருத்தைச்,

"சத்தியின் வேறென் றெண்ணச்
 சார்கர ணமுமீங் கில்லை
சித்தின்வே றுய சித்தாம்
 சத்தியும் தெரியி னில்லை
இத்திற மதனு லிந்த
 ஏகமாங் கரணந் தானே
வைத்தபல் வினையான் ஞானக்
 கிரியையின் மருவி நிற்கும்." (13)

என்று கிரண சூத்திரப் பொருளாகச் சதமணிமாலை கூறுகின்றது.

## இறைவன் கரணமின்றியே காரியம் செய்வன் என்றல்.

26. காரியம் இலையாம் இன்றேல்
 கரணமென் றிடில்,செங் காவி
வாரிசம் விரித்தொ டுக்கும்
 மதிகதிர் கரும்பொன் ஈர்க்கும்

சீரிய காந்தம் போலச்
சிவன்கர ணங்கள் இன்றி
ஏரியல் சத்தி கொண்டே
இயற்றுறும் கருத்தா வாகி.

*இ – ள்:* இறைவனுக்குக் கரணம் இல்லையாகில் படைப்பாதி காரியமும் இல்லையாம் என்றிடில், கரணமில்லாமலே திங்கள் செங்காவி மலரை விரித்தொடுக்குவது போலவும், ஞாயிறு தாமரை மலரை விரித்தொடுக்குவதுபோலவும், காந்தம் இரும்பினை இழுப்பது போலவும், இறைவன் கரணங்கள் இன்றித் தனது சிற்சத்தியைக் கொண்டே தான் வினைமுதலாயிருந்து காரியத்தை இயற்றுவன். (எ – று) 26

இறைவனிடம் சத்தி உண்டு என்பதை எவ்வாறு அறிவதென்று கூறுகின்றது.

27. காண்கரும் கிரியா சத்தி
காண்பதிங் கெவ்வா றென்னில் ?
காண்கும்நின் கண்ணின் சத்தி
கண்ணின்வே றுருகும் ; இன்றேல்
காண்குறும் தன்மை இந்தக்
கண்ணினுக் கின்றும் ; அத்தால்,
காண்குவர் அருத்தா பத்தி
யாலொளிர் கண்ணின் சத்தி.

28. அத்திறம் கருத்தன் பாலும்
அதிந்திய சத்தி கொள்க
இத்திறம் காண்டல் இல்லா
இறையிடைக் கொண்ட சத்தி
தத்துவம் புவனம் யாவும்
தந்திடும் தானென் றுயச்
சத்திபல் வகைபோற் றேன்றும்
உபாதியே தத்தி னன்றே.

இரண்டு பாட்டும் ஒரு தொடர்.

இ-ள்: (27) காண்பதற் கரிய கிரியாசத்தி இறைவனிடத்தில் உண்டு என்பதை எவ்வாறு அறிவதெனில்? காணும் நின் கண்ணின் சத்தி கண்ணிந்திரியத்தின் வேறாக இருத்தல் வேண்டும்; அச் சத்தி இல்லையாகில் பொருள்களைக் காணும் தன்மை இந்தக் கண்ணுக்கு இல்லையாகும்; அந்தக் காரணத்தால் அருத்தாபத்தி என்னும் அளவையினைக்கொண்டு கண்ணிற்கு வேறாக அதன் சத்தி உண்டென்பதை அறிஞர் உணர்வர். (28) அதுபோல இறைவனிடத்தும் அதிந்திய சத்தியினைக் கொள்க; இவ்வகை காணுதல்இல்லாத இறைவனிடை உண்டென்று அறிந்துகொண்ட சத்தியானது தத்துவங்களையும் புவனம் முதலானவற்றையும் தந்திடும். தான் ஒன்றாய் உள்ள அச்சத்தியானது உபாதி பேதத்தால் பலவகை போற்றோன்றும். (எ-று) 27, 28

## குறிப்பு

இறைவன் சத்தி, ஒன்றாய் உபாதி பேதத்தால் பலவாயிருக்கும் என்பதை "இனித் தீயின் சத்தி யொன்றே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தி என்றற் றொடக்கத்துப் பலவேறு வகைப்படுமாறு போலச் சிவசத்தியொன்றே காரிய வேறுபாட்டால் பராசத்தி, திரோதான சத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி எனப் பஞ்ச சத்திகளாகவும்; முறையே ஐந்தும், நான்கும், எட்டும், பதின்மூன்றும், எட்டுமாகிய கூறுபாடுடைய ஈசானமுதல் சத்தியோசாத மீறாகிய பஞ்சசத்திகளாயும்; ஆரணி, ஜனனி முதலிய மூவகைச் சத்திகளாயும்; நிவிர்த்தி, பிரதிட்டை முதலிய பஞ்ச சத்திகளாயும்; வாமை, சேட்டை முதலிய அட்ட சத்திகளாயும்; பரவாகீசுவரி, அபர வாகீசுவரி, மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி என்று எழுவகைச் சத்திகளாயும்; அத்தியான்மிகமான உன்மனை, சமனை முதலிய கலைகளாயும் இன்னும் பலவேறுவகைப்பட்டு நிற்கும். அவ்வச் சத்திகளோடு புணர்ந்த சிவமும் அங்ஙனம் பலவேறுவகைப் பெயர்பெற்று நிற்கும். அவ்வச் சத்திகட்கிடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறு வகையான் விருத்திப்பட்டு நிற்கும். || சி-போ-பாடி-சூ-2-அதி-4 ) என்பர். சிவஞானமுனிவர்.

### இறைவன் தன் சத்தியாகிய கரண காயத்தால் எல்லாம் இயற்றுவன் என்றது.

29. ஒத்திடா உபாதி தன்னால்
ஒழிவிலிச் சத்தி யாயச்

சத்தியாங் கரண காயச்
சார்பினுல் நிறைந்த நாதி
முத்தனுய் முழுது ணர்ந்து
முழுமுத லாகி நின்ற
நித்தன்வான் தொழிகள் ஐந்தும்
நிகழ்த்துவன் என்ப துண்மை.

*இ–ள்;* ஒன்ருேடு ஒன்று பொருந்தாத பலவகை உபாதியினுல் ஒன்ருகிய சத்தியே பல்வேறு வகைச் சத்திகளாய் விளங்க அச்சத்தியையே கரணமாகவும் உடம்பாகவும் பெற்று அச் சத்திச் சார்பினுல் நிறைந்து அநாதிமுத்தனுய் எல்லாவற்றையும் உணர்ந்து முழுமுதலாகி நின்ற அழிவற்ற இறைவனே எல்லாத் தொழில்கஃாயும் செய்வான் என்பது உண்மையாகும். (எ – று) 29

மூப்பொருளில் பதியல்லாதன
தம் இயக்கத்திற்கு முதல்வனை அவாவி நிற்கும் என்றது.

30. சடமொடஞ் ஞானி யாகுந்
தன்மையால் பதிய லாத
உடையதம் பிரவி ருத்திக் (கு)
ஒருவனை அவாவி நிற்கும்;
அடைவுறு பகுதி, காலம்,
அணுவிவை சடங்க ளென்னப்
படுதலின், அறிவன் அன்றிப்
பண்ணுதல் அறியா வன்றே.

*இ–ள்:* பதி, பசு, பாசம் என்ற மூன்று உண்மைப் பொருள்களில், பதியல்லாத பாசமும், பசுவும் அறிவில்லாத சடப் பொருளாகவும், அஞ்ஞானியாகவும் இருக்கும் தன்மையால், அவை தம் இயக்கத்திற்குச் சடத்தன்மையும், அஞ்ஞானத் தன்மையும் இல்லாத ஒன்ருயிருக்கின்ற இறைவனை விரும்பி நிற்கும். உலகத் தோற்றத்திற்குக் காரணமாகக் கூறப்பெறும் பிரகிருதியும், காலமும், ஆணவத்தால் மூடப்பட்ட உயிரும் ஆகிய இவை

எல்லாம் சடமொடு அஞ்ஞானி என்று கூறப்படுதலின் முழுதுணர் முதல்வனன்றி, அவற்றை வேறொன்று இயக்குதலறியா. (எ-று) 30

## குறிப்பு

'அணுவினை' என்றும் பாடம் உண்டு. ஆணவத்தால் மறைக்கப்பட்ட உயிர்க்கு அணு என்று பெயர். பகுதியும் காலமும் சடமாகும்; அணு அஞ்ஞானியாகும்.

## உயிர் வினைமுதலாகி உலகினைப் படைத்தல் செய்யா என்பது.

31. சேதனன் எனினும் சீவன்
சிற்றறி வுடையன் ஆகிக்
காதுறு வினைகள் தம்மால்
கட்டுறப் பட்டு நிற்பன்;
ஆதலின், உலகந் தன்னை
ஆக்குவன் என்று நோக்கப்
போதுறு வலியும் இல்லன்
என்றனர் புலவ ரன்றே.

இ-ள்: சீவன் அறிவுடையவன் என்றாலும், முற்றறிவினன் ஆகாமல் சிற்றறிவுடையவன் ஆகி, இருவினையால் கட்டப்பட்டு நிற்பவன் ஆகையால், இவ்வுலகத்தை அவன் ஆக்குவன் என்று கருதுதற்குத் தக்க ஆற்றலும் இல்லாதவன் என்றனர் புலவர். (எ-று) 31

## சடமாகிய உலகம் அறிவுடை முதலால் இயங்கும் என்பது.

32. சேதனம் அலாஇஞ் ஞாலம்
சேதன இயக்கம் அன்றி,
ஓதுறு பிரவி ருத்தி
நிவர்த்தியில் "உருளைத் திண்டேர்

ஆதியில்" சுதந்த ரத்த (து)
அன்றிவண் சத்த ஞகும்
ஏதமில் பிரவி ருத்தன்
யாரவன் பதியென் றோர்வாய்.

இ-ள்: அறியுந் தன்மை இல்லாத இவ்வுலகம், அறிவுடைப் பொருளால் நடத்தப்படுதலன்றித் தோற்ற ஒடுக்கங்களில் 'உருளையை யுடைய தேரினைப்போல' சுதந்திரமாய் இயங்கும் தன்மை உடையதன்று. இந்த நிலையில் சேதனனாகிய சத்தனை யிருந்து சட உலகத்தைத் தோற்ற ஒடுக்கம் செய்பவன் யாரோ அவனே பதிப்பொருள் என்று ஆராய்ந்து உணர்க. (எ-று) 32

## குறிப்பு

சேதனம் அலா இஞ்ஞாலம் - சடஉலகம். பிரவிருத்தி - தோன்றும் முறைப்படி விரிதல். நிவர்த்தி - ஒடுங்கும் முறைப்படி ஒடுங்குதல். பிரவிருத்தன் என்றதால் நிவர்த்தனையும் கொள்க.

## சடமாகிய பாசமே சடவுலகத்தை இயக்கும் என்றல் பொருந்தாதென்றல்.

33. "இரும்பினைச் சடமாம் காந்தம்
இயக்கல்போல்" சடமாம் பாசம்
திருந்திய உலகம் ஆக்கும்
என்பது சிறந்த தன்றாம்;
பொருந்திய அவைகள் தம்மைப்
புணர்ப்பவன் றனைய வாவி
வருஞ்செயல் உறலால் என்பர்
மதியில்நூல் மரபு கண்டோர்.

இ-ள்: பசு, பாசம் என்னும் இரண்டில் பாசமாகிய சடந்தானே, "சடமாகிய காந்தம் இருப்பினை இயக்குதல்போல" உலகத்தைப் படைக்கும் என்று கூறுவது சிறந்த கொள்கை யாகாது. ஏன் எனில்? இயக்குவதாகிய காந்தத்தையும் இயக்கப்படுவதாகிய இரும்பையும் கூட்டுவிப்பவன்றனை அவை அவாவி நிற்றலால் என்பர். (எ-று) 33

## குறிப்பு

சடமாம் பாசம் என்றது வினையாகிய பாசத்தை. இப்பாட்டின் கருத்தை "உலகினை ஆக்குதற்கு வினையே அமையும்; இறைவன் வேண்டா வெனின், அற்றன்று; வினையும் மாயைபோலச் சடமாகலின் கூட்டுவானை இன்றி அமையாதென்க. பால் சுரந்து கன்றினை வளர்ப்பவும், காந்தம் இரும்பை வலிப்பவும் காண்டலின், சடமும் கூட்டுவானை இன்றி அமையும் என்பது பொருந்தாது; பால் சுரந்து வளர்க்கு மாயின் உயிர் நீங்கிய ஆன் முலையினும் பால் சுரத்தல் வேண்டும். அஃதின்மையிற் சேதனமாகிய ஆவையின்றியமையாமை உணர்க. காந்தம் இரும்பை வலித்தலும் அவ்விரண்டனையும் இயைவிக்கும் சேதனனை இன்றியமையாமை உணர்க" என்பது சிவஞானபாடியம்.

34. "அசேதன அமுதம் கன்றை
வளர்த்தல்போல்" அகிலம் ஆக்கும்
அசேதன பாசம் என்னும்
அவ்வநை காந்தி கத்தை
அசேதனம் ஆத லாலென்(று)
அறைதரும் ஏது என்னில்
அசேதனம் அலாத ஆன்நல்(கு)
அமுதமே வளர்க்கும் கன்றை.

இ – ள்: சடப்பொருளாகிய அமுதம் (பால்) கன்றினை வளர்த்தல் போலச், சடமாகிய பாசந்தானே இவ்வுலகத்தினை உண்டாக்குவதாம்; அப்பாசம் அமுதத்தைப் போலச் சடமாயிருத்தலால் என்று அநைகாந்திகக் குற்றமுள்ள ஏது வாக்கியத்தாற் கூறின், அங்ஙனம் கூறுதல் ஏற்புடைத்தன்று. ஏன் எனின், அசேதனம் அலாத பசு நல்கும் அமுதமே கன்றினை வளர்க்கும் (எ – று) 34

## குறிப்பு

அநைகாந்திகம் – ஒருமுடிவில்லாதது பிறழ்ச்சியுடையது. இது குற்றமான ஏதுக்களில் ஒன்று.

35. ஆதலின் இலைஅ நேகாந்
திகம்என அறைந்த குற்றம்
ஏதுவில் இறந்த கோவில்
இன்அமு துண்டா மாயின்

சேதனம் அலாத பாசம்
செயலினைத் தானே செய்யும்;
ஆதலின் அசேத னங்கள்
சேதனம் அவாவி நிற்கும்.

*இ-ள்:* ஆதலால், இறந்துபோன பசுவில் இனிய பால் தோன்றி, அப்பால் கன்றினை வளர்க்குமேயானால், "அசேதன பாசம் அகிலத்தை ஆக்கும்; அமுதம் அசேதனமாதல் போலப், பாசமும் அசேதனமாயிருத்தலால் என்னும் ஏது, அநைகாந்திகக் குற்றமில்லாத ஏதுவாயிருக்கும்" அவ்வுதாரணப்படி சடமாகிய பாசந்தானே உலகத்தை இயக்கும் என்று கூறலாம்; அங்ஙன மில்லாமையால், அசேதனப் பொருளெல்லாம் தம் இயக்கத் திற்குச் சேதனப் பொருளையே அவாவிநிற்கும் என்பதே தேற்றமாம் (எ-று) 35

**வேறுபாடும், அவயவப்பகுப்புமுடைய இக் காரிய உலகம் ஒருவனாகிய முழுதுணர் முதல்வனை நிமித்த காரணமாக உடையதென்றல்.**

36. தழுவிய விவர்த்தம் எய்தும்
சகமதிங் கவய வத்தோ(டு)
ஒழுகுறு தன்மை தன்னால்,
"ஒழிவறு கடாதி போல"
விழைவுறு செய்கை யாகி
மேவலால், விளங்கு மாற்றோர்
முழுதுணர் கருத்தன் தன்னை
முன்னுள தாகும் அன்றே.

*இ-ள்:* வேறுபாட்டுடன் கூடிய இவ்வுலகம், ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் அவயவங்களுடன் நடைபெறும் தன்மை பெற்றுள்ளதால், "கடம் முதலான காரியத்தைப் போலச்" செயப்படுபொருளாகி மேவுதலால் விளங்கும் நெறியானே ஓர் முழுதுணர் கருத்தனை அது முன்னே பெற்றுள்ளது. (எ-று) 36

குறிப்பு

*இப்பாட்டுடன் சிவஞானபோத முதற்சூத்திரப் பொருளை ஒப்பிட்டறிக.*

## இவ்வுலகத்திற்கு ஒரு முதல்வன் வேண்டும் என்றது.

37. வடிவுடன் அவய வத்தால்,
வரைவில்பல் உருவம் ஆகி
அடைவுறு பரிச்சே தத்த
ஆகிய பொருள்கள் மூலம்
படும்அவ யவத்தால், புத்தி
பயில்தரும் ஏது ஒன்றை
உடையவன் செய்கை யால்மா
னித்திட உளன்ஒ ருத்தன்.

*இ – ள்: இவ்வுலகம் வடிவுடன் கூடிய அவயவத்தாலும், கணக்கற்ற பல உருவங்களை உடையதாகிப் பல பிரிவுகளை உடைய பொருளெல்லாம் மூலநிலைமைப் படும் அவயத்தைப் பெற்றிருத்தலாலும், இவ்வுலகம் விசித்திர காரியமாகையால் இவ்வுலகத்தைப்பற்றி நிகழும் செயலெல்லாம் புத்திபயில்தரும் ஏது ஒன்றை உடையவன் செய்கையாயிருத்தலால், இவ்வேதுக்களைக்கொண்டு அனுமானித்திட, இவ்வுலகத்திற்கு நிமித்தனாக ஒருமுதல்வன் வேண்டும். (எ – று)* 37

குறிப்பு

*மானித்தல் – அனுமானித்துணர்தல்.*

## இதுவும் அது

38. சடங்களாம் மாயை ஆதி
தமைஇயக் குறுத லாலே
அடங்கலும் உணர்வோன் ஆகி
அகிலகா ரணனும் ஆகி
ஒடுங்கலில் வியாபி யாகிச்
சதோதிதன் ஆகி உள்ள
திடம்தரு மதியாம் ஈசன்
சித்தமா யினன்இங் கன்றே.

இ-ள்: சடப்பொருளாகிய மாயை முதலியனவற்றை இயக்குதலால், இயக்கும் அவன் முற்றுணர்வுடையனாகி, நிமித்த காரணன் ஆகி, அழியாத வியாபியாகிச், சதோதிதன் ஆகி உள்ள திடம் தரும் மதியாம் ஈசன் இவ்வுலகிற்கு வினை முதல்வனாகச் சித்தமாயினன். (எ-று) 38

## குறிப்பு

சதோதிதன் – எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருப்பவன்.

## இவ்வுலகை ஆன்மாவே இயக்கும் என்பாரை மறுத்தது

39. அறிவின்மா யாதிக் கில்லை
ஆகச்செய் கருத்தா ஆதல்
அறிவுறும் ஆன்மா விற்குண்
டாக,இவ் வீசன் தன்னால்
பெறுபயன் யாதிங் கென்னில்?
பெருமலத் தறிவி லானாய்
இறையல னவன்க டாதி
எனப்பிறி தாவாவு வோனும்.

இ-ள்: வினைமுதல்வன் ஆதல் அறிவில்லாத மாயைகட்கு இல்லையாக; ஆனால் அறிவுறும் ஆன்மாவிற்குக் கருத்தா ஆதல் உண்டு. இறைவனால் பெறக்கூடிய பயன் இங்கே யாது என்னில்? உயிர் பெரிய மலத்தினாற் கட்டுண்டு அறிவிலானாய் (சிற்றறிஞனாய்) கடாதிகளைப் போலவே தன் இயக்கத்திற்குப் பிறிதொன்றை அவாவுதலாய் உள்ளான். அதனால் உயிரின் வேறாக இறைவன் உளன் என்க. (எ-று) 39

## குறிப்பு

இக் கருத்தை "உயிர்கள் சேதனமாகலின் அவையே அமையும் இவற்றின் வேறாய் இறைவன் உண்டெனபதற்குப் பிரமாணம் இல்லை எனின், அற்றன்று, உயிர்கள் மலத்தாற் கட்டுற்றுச் சுதந்தரமின்றித் தம்முடைச் செயற்குக் குடம்போல வேறொரு கருத்தாவை அவாவி நிற்றலான் என்பது" (சிவ-போ-பாடி. சூ-க்-அதி-உ) என்னும் சிவஞான முனிவர் உரையை ஒப்பு நோக்கி அறிக.

## இதுவும் அது

40\. பசுத்துவம் எனும்ம லத்தால்
பண்டுதான் தடுக்கப் பட்டு
வசித்தசிற் சத்தி யின்றன்
வயமிலன்; மாயை கன்மம்
அசித்தெனப் படலால் கூட்டும்
அவன்றனை அவாவி நிற்கும்
இசைத்திடும் இறைவன் தன்னோர்
இச்சையால் வலியன் ஆவான்.

இ-ள்: அறிவுறும் ஆன்மா (39) பசுத்துவம் என்று கூறப்படும் ஆணவ மலத்தால் அநாதியே தடுக்கப்பட்டு, அதனால் ஞானசத்தி (ஆன்ம சிற்சத்தி)யின் வசமாய் நடத்தலில்லாதவனா யுள்ளான்; மாயையும் வினையும் சடப்பொருள் எனப்படலால் கூட்டுவிக்கும் ஒருவனை அவாவி நிற்கும்; இக் காரணத்தால், மாயையும் கன்மத்தையும் தன்னொடு கூட்டுவிக்கும் இறைவனது இச்சாசத்தியால் வலிமை பெறுபவனாய் அவன் உள்ளான். (எ-று) 40

### குறிப்பு

இசைத்திடும் - கூட்டுவிக்கும். பசுத்துவம் - பந்தத்தன்மை.

## பாசமில் முத்தரே படைப்பாதித் தொழிலைச் செய்வார் என்பாரை மறுத்தது

41\. பந்தம(து) உறுவோர்க்(கு) இன்றேல்
பாசம்இல் முத்தர்க்(கு) ஆக
முந்துசெய் தன்மை என்னின்,
முத்தர்ஓர் இருவர் ஆவார்
அந்தம்இல் அநாதி முத்தன்
ஆதிமுத் தன்றான் என்ன
வந்தஇவ் விருவர் தன்மை
வழுவற இயம்பக் கேண்மோ.

**இ – ள்:** பாசக் கட்டினை உடைய உயிர்கட்குக் கருத்தா வாதல் இல்லையாகில், பாசத்தில் நீங்கிய முத்தராகிய உயிர்கட்கு முற்பட்டு ஐந்து தொழில் செய்யும் தன்மை ஆகலாம் எனில், அம் முத்தர் அநாதி முத்தன், ஆதி முத்தன் என இருவகையினர் ஆவார்; இவ் விருவர் இயல்புகளைக் குற்றமறக் கூறக் கேட்பாயாக. (எ – று) 41

## அநாதி முத்தன் இயல்பு

42. அறிவொடு கிரியை யாகும்
ஆக்கம்இங் கொருவன் தன்னால்
பெறுகில னாகி எல்லாம்
உணர்தரு பெருமை, மற்றும்
உறுமுழு முதன்மை என்னும்
ஓரிரு சத்தி மேவும்
இறையவன் எனும்சி வன்றான்
இயம்புறின் அநாதி முத்தன்.

**இ – ள்:** அறிவொடு செயலாகிய ஆக்கத்தை இங்கே ஒருவனால் பெறுதவனாகி, எல்லாவற்றையும் உணரும் பெருமையும், மற்றும் முழு முதன்மையும் என்கின்ற, ஒப்பற்ற இரண்டு பேராற்றல்களை மேவும் இறைவன் என்னும் சிவனே தெரிந்து கூறுமிடத்து அநாதி முத்தனாவான். (எ – று) 42

## ஆதி முத்தன் இயல்பு

43. சாற்றிய ஆன்மா என்பான்
தன்வலி தன்னால் முத்திப்
பேற்றினை அடைவா னல்லன்;
சிவன்எனப் பெயர்பெற் றுள்ள
போற்றிய அளவி றந்த
பொருவிலி அருளின் அன்றேன்
ஆற்றல்செய் முத்தன் ஆவான்
ஆதலின் ஆதி முத்தன்.

இ – ள் : முப்பொருளில் ஆன்மா என்பவன், தன் ஆற்றல் ஒன்றினாலேயே வீடு என்னும் பேற்றினை அடைவானல்லன்; மேலே கூறப்பட்டுள்ள அநாதி முத்தனாகிய சிவனது அளவிறந்த ஒப்பற்ற அருளால் அவன் முத்தனாவன்; ஆதலில் அவன் ஆதியாகிய முத்தனே. (எ – று) 43

## குறிப்பு

ஆதி – முதல்.

## இருவரில் ஆதி முத்தன் கருத்தா அல்லன் என்றது.

44. இனையஇவ் விருவர் தம்முள்
இயம்பிய ஆதி முத்தன்
வினைமுத லாக எண்ணின்
மெய்ப்பரா பரமாம் முத்தி
முனம்அவன் றனக்க ளித்த
முதல்வனுண் டாத லாலே
நினைவுறும் ஆதி முத்தன்
நிகழ்த்திடில் கருத்தா அல்லன்

இ – ள் : இத்தகைய அநாதி முத்தன், ஆதி முத்தன் என்னும் இருவருள் ஆதி முத்தனே கருத்தா ஆகல் வேண்டும் என்று கருதின், முத்தனாதலை முன்னே அவனுக்களித்த மெய்யான பராபரமாம் முதல்வன் உளன் ஆதலாலே, ஆதி முத்தன் கருத்தா அல்லன். (எ – று) 44

## இதுவும் அது

45. அப்பரி சேல்,அ நாதி
முத்தனே ஆக என்னில்,
செப்பிய அனையன் முன்னர்ச்
சித்தமா தலின்இவ் வீண்டு
வைப்புறு சித்த சாத
னத்துவ குற்றம் மன்னும்
இப்பரி சால்அ நாதி
முத்தனே கருத்தா என்பர்,

இ – ள்: அவ்வாருயின், அநாதி முத்தனே கருத்தாவாக எனின், நீ சொல்லிய அநாதி முத்தன் முன்னரே கருத்தா என்பது எம் கூற்ருலே சித்தித்திருத்தலின் இப்பொழுது நீ கூறிய இவை சித்தசாதனம் என்னும் குற்றமாம். அதனல், யாம் முற்கூறிய அநாதி முத்தனே இவ்வுலகிற்குப் படைப்பு முதலான தொழிலைச் செய்யும் வினைமுதல்வன் என்பர். (எ – று) 45

## குறிப்பு

"அற்றேல், மலந்தீர்ந்த முத்தரே அமைவராலெனின், நன்று சொன்னய்! முத்தராவர் ஆதி முத்தரோ? அநாதி முத்தரோ? கூறுவாயாக. அநாதி முத்தரெனின், அதுவே எமது சித்தாந்தமாகலின், இது சித்த சாதனம். ஆதி முத்தரெனின், அவருக்கும் முத்தியளிப்பவன் முன்னரே யுளனுதல் பெறப்படுமாகலின், அநாதி முத்தனுகிய இறைவன் உண்டென்பது தெற்றென உணர்க. (சிவ-போ-பாடி-க-உ) என்னும் சிவஞானமுனிவர் உரையை நோக்குக.

சித்தசாதனம் – சுபக்கத்தான் முடிபே பரபக்கத்தானுக்கும் முடிபாவது,

## இவ் வுலகம் எல்லா முத்தரும் கருத்தாவாயிருந்து செய்வதன்று என்றது

46. இயற்றலுறு வினைமுதல்வர் பலரென் ருலும்
இயக்குமொரு சிற்பன்வசத் திசைதல் போல
அயர்த்தலரும் சிவனிச்சை இசைந்து நின்ற
அனந்தாதி யாலலது பலரும் செய்கை
பயத்தலுறு வினைமுதல்வ ரெனினும் எல்லாம்
பண்டிதரா யினும்பெருமை விருப்ப ரேனும்
செயத்தகுவ கெடுமெனலான் முத்த ரெல்லாம்
செய்வதுமன் றிவ்வுலகம் தெரியுங் காலே.

இ – ள்: கோயில் முதலியன அமைக்கலுறுங்கால் இயற்றும் வினைமுதல்வர் பலராயினும் அவரை இயக்கும் வினைமுதல்வனுகிய ஒரு சிற்பன் வசத்து அவர் இசைந்து நடத்தல்போல், மறதி இல்லாத சிவனது இச்சாசத்தி பொருந்தி நின்ற அனந்தர் சீகண்டர் முதலியோர் படைத்தல் முதலிய தொழில் புரியினல்லது,

ஒருவினை செய்வார் பலரும் காரியத்தைப் பயப்பிக்கும் வினை முதல்வராயினும், எல்லாம் வல்ல பண்டிதராயினும், பெருமை விருப்பரேனும் பலராயின் செயத்தகுவ கெடும் எனலால், ஆதி முத்தர் எல்லோரும் சேர்ந்து இவ்வுலகத்தைச் செய்வதும் அன்று. (எ – று) 46

## குறிப்பு

அனந்தர் – அட்ட வித்தியேசுரருள்ளே தலைவர். அசுத்த மாயையைத் தொழிற்படுத்துபவர். அழிவற்றவர் என்பது பொருள்.

## வேற்றுச் சமய நூலில் தெய்வங்களாகக் குறிக்கப்பட்டவரே இவ்வுலகிற்கு முதல்வராவார் என்பாரை மறுத்தது

47 தந்திராந் தங்கள்தமில் சாற்றப் பட்டோர்
தலைவரா குகவென்னில் தளையா நின்ற
பந்தமார் பசுக்களவர் ஆத லாலே
பதியாகும் பரசிவனால் பவங்கள் தோறும்
முந்தைநாள் சேர்த்தியபோத் தியர்க ளாகும்
முறைமையால் அவர்கருத்தர் அல்லர் என்பர்
எந்தையாம் பரசிவற்கிவ் விசிட்டம் எவ்வாறு
எய்தியதென் குவை?ஆயின் இயம்பக் கேளே.

இ – ள்: பாஞ்சராத்திரம் முதலான தந்திரங்களின் முடிவில் சொல்லப்பட்டோராகிய திருமால் முதலான தேவர்கள் இவ்வுலகிற்குக் கருத்தா வாகுக என்னில், அவரெல்லாம் தளையும் பாசத்துடன் கூடிய பசுக்களாதலால், முதல்வனாகிய பரமேசுரனால் அவர்தம் பிறவிகள்தோறும் முற்காலத்தில் சேர்க்கப்பட்ட போத்தியர்களாகும் முறைமையினால். அவர் கருத்தர் அல்லர் என்பர். எந்தையாகிய பரசிவனுக்கு மட்டும் இவ் விசிட்டத் தன்மை எய்தியது என்னை? என்குவையாயின், சொல்லக் கேட்பாயாக. (எ – று) 47

## குறிப்பு

இப் பாட்டின் கருத்தினை,

"யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே,
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்,
வேதனைப் படும்இ றக்கும் பிறக்கும்மேல் வினையும் செய்யும்,
ஆதலான் இவையி லாதான் அறிந்தருள் செய்வ னன்றே.

என்னும் சிவஞான சித்தியால் உணரலாம்.

## இதுவும் அது

48. விளங்கலுறு பரசிவனுக் கிவ்வி சிட்டம்
விசித்திரகா ரியவிசிட்டத் துவத்தி னாலே
அளந்தனுமா னிக்குமியல் புடைய தாகும்;
அகலிடஞ்சேர் வழக்கினும் மெய்ப்பரிச தாக
வளங்கெழுமெக் காரியமும் உற்றி ருக்கும்
மற்றதுதான் அப்பரிசாம் கார ணத்தை
உளங்கொளுமா றுடையதென உலகம் ஈன்ற
உமைபாகன் அருள்நூல்கள் உரைக்கு மன்றே.

இ – ள்: அறிவிற்குப் புலனாகும் பரசிவனுக்கு இச் சிறப்பு, உலகமாகிய விசித்திர காரியத்தின் சிறப்புத் தன்மையால் அளந்து அநுமானித்துத் துணியும் இயல்புடையதாகும். உலக வழக்கினும் உண்மைத் தன்மையாக சிறந்த எக்காரியமும் அத்தன்மையான காரணத்தைக் கருதுமாறு உடையதெனச் சிவாகமம் செப்பும் என்றது. (எ – று) 48

## குறிப்பு

"முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளும் சுதந்திரமும் முதலிய குணங்களுடைமையின், அதி விசித்திரமாகிய உலகத்தைத் தொழிற் படுத்துதற்கு அவன் ஒருவனே அமையும்; அக்குணங்கள் இன்மையின் ஏனையோரெல்லாம் அவ்விறைவனுக்குத் தொழும்பராதலேயன்றி முதற் கடவுளராகாரெனவும் சித்தாந்தஞ் செய்து" (சிவ-போ-பாடி சூ-1 அதி-ந) என்னும் சிவஞானமுனிவர் உரையைக் கருதுக.

அகலிடஞ்சேர் வழக்கு – உலக வழக்கு. சிறந்த காரியங்களெல்லாம் சிறந்த காரணங்களை முதலாக உடையன.

## இவ்வுலகினை இறைவன் படைக்கும் முறை.

49. உலகினையோ ரிறைவன்முறை உதவு மோவன்
றொருங்குதவு மோமுறையின் உதவு மென்னில்
பலபலவா தலின்முறையன் றென்றல் கண்டாம்
பலவாத லாலொருங்கு தருதல் தானும்
இலையெனில்நீ பலவுடலம் ஒருங்கு தோன்றும்
இயல்காண்ட லானுமொரோ வொன்றாய்த் தோன்றும்
நிலையுறுத லானும்அன முறையி லேனும்
நின்றொருங்கி லேனும்உல குதவு மன்றே.

*இ—ள்: ஒன்றாகிய இறைவன் உலகத்தை ஒன்றன்பின் ஒன்றாக முறையாகப் படைப்பானோ? அல்லது, எல்லாவற்றையும் ஒருசேரப் படைப்பானோ? என்று வினவில், அவன் முறையாகவே உலகத்தைப் படைப்பான் என்னில், உலகப் பொருள் மிகப் பலவாதலின் முறையாகப் படைத்தல் இயலாதென்பதைக் கண்டோம்; உலகம் வெவ்வேறு வடிவான பலவாயிருத்தலால் ஒருங்கு படைத்தலும் இல்லை என்று நீ கூறின், பல உடலம் ஒருங்கு தோன்றும் இயல்பைக் காண்டலானும், ஒவ்வொன்றாய்த் தோன்றும் நிலையையும் காண்டலானும், இந்த இரண்டு முறையிலேனும், அல்லது ஒருசேரவேனும் தான் விரும்பியவாறு உலகினைத் தோற்றும் என்க. (எ — று) 49*

## பதியின் இயல்பைத் தொகுத்துணர்த்தியது.

50. அம்முறையில் இவ்வுலகம் இறையில் லாத
தன்றுபலர் இறைவரெனப் பட்ட தின்றால்
இம்மையுல கினும்இணையில் பனுவ லுள்ளும்
எடுத்தியம்பும் இறையொருவ னன்றி யில்லை
மெய்ம்மைபெறு முழுமுதல்வன் முழுது ணர்ந்தோன்
வியாபகனோர் உபாதியிலான் அருளன் நித்தன்
செம்மையினன் பசுபாசம் விலக்கி னேனும்
சிவனோநற் பதியென்றல் தெளிவு காணே.

இ–ள்: மேற்கூறிய முறையினல் இவ்வுலகம் நிமித்த காரணஞகிய இறைவனை இல்லாததன்று; பலர் இறைவர் எனப்பட்டதும் இன்று; இந்த உலகத்தினும் ஒப்பற்ற நூல்களுள்ளும் எடுத்துக் கூறப்படும் இறைவன் ஒருவனன்றி இல்லை. உண்மைபெறும் முழுமுதல்வனும் முற்றறிஞனும் எங்கும் நிறைந்துள்ளவனும் ஓர் உபாதியில்லாதவனும் அருளை உடையவனும் அழிவற்றவனும் நல்லவனும் பசுபாசங்களில் வேருகியவனும் ஆகும் பரசிவனே பதி எனத் துணிதல், ஐயமும் விபரீதமும் இல்லாத துணிவெனக் காண்பாயாக. (எ – று) 50

## இறைவன் எல்லோர்க்கும் இன்பம் நல்காதது ஏன்? என்பதற்கு விடை.

51. பழுதறநன் குணர்ந்தொருவன் சாத ஞங்க
பலமொடுசெய் கின்றதுநன் ருகு மென்னும்
மொழிமுறையான் முரணறநாம் முன்னம் கூறும்
முழுதுணர்தன் முதலாய குணங்கள் பெற்ற
இழிவிலான் புரிந்தமையால் உலகம் நன்ருய்
இருந்ததென 'இயம்புறுவ ராயின் ஈசன்
வழுவகல அனைவர்க்கும் இன்பம் ஒன்றே
வழங்கிலனென் னெனின்மரபின் வகுப்பக் கேளே.

இ–ள்: குற்றமற நன்கு எண்ணி கருவி பலத்தாலும் ஏனைய அங்க பலத்தாலும் செய்யும் செயல் நன்ருகும் என்னும் அறிவர் மொழி முறையால், மாறுபாடு அற நாம் முன்னர்க் கூறியுள்ள முழுதுணர்தன் முதலான குணங்களைப் பெற்ற இழிவிலான் வினைமுதலாயிருந்து இயற்றுதலால், விசித்திர காரியமாகிய உலகம் நன்ருக உள்ளது என மொழிவர். ஆனல், வழு நீங்க இவ்வுலகத்தின்கண் எல்லோர்க்கும் இன்பம் ஒன்றே அக்கடவுள் வழங்கிலனே, அதற்குக் காரணம் என்னையெனின்? முறைமையினல் சொல்லக் கேட்பாயாக. (எ – று) 51

### இதுவும் அது

52. உண்ணுமுயிர் வினைவழியால் உயிர்கட் கெல்லாம்
உறுமின்ப துன்பங்கள் ஊட்ட லாலே
கண்ணுதலெம் முதல்வனோர் விடம னல்லன்
கருதிலவன் நிட்டூரன் றானும் அல்லன்
நண்ணுறும்அந் தரியாமி ஆகி உள்ளுள்
நயமுறுதன் சத்தியால் புறத்து நூலால்
எண்ணரிய சுதந்தரனாய் நிறைந்த ஈசன்
எவ்வுயிர்க்கும் கத்துருவாய் இருக்கு மன்றே.

*இ - ள் :* உலக போகத்தை உண்ணத்தக்க உயிர்க்கு அவற்றின் இருவினைவழியால் அவற்றிற்கெல்லாம் இன்ப துன்பங்களை ஊட்டலாலே, அம் முதல்வன் நடுநிலை பிறழ்ந்தவனல்லன்; கொடுமை புரிபவனுமல்லன். நண்ணுறும் அந்தரியாமியாகி உயிர்களின் உள்ளேயிருந்து தன் சத்தியால் உணர்த்தியும், புறத்தே விதிவிலக்குகளைக் கூறும் நூலால் உணர்த்தியும் கருதுதற்கரிய சுதந்தரனும் நிறைந்த இறைவன் எல்லாவுயிர்க்கும் வினை முதல்வனாய் இருப்பன். (எ - று) 52

### குறிப்பு

அந்தரியாமி - உள்ளே நின்று நடத்துவோன்.

பதிமரபு முற்றும்.
(ஆகத் திருவிருத்தம் - 52)

## பதிபேத இயல்

### முதல்வனின் மூவகை நிலை.

53. உரைத்தஇயல் புடையசிவன், சத்தன் உத்தி
யுத்தனொடு பிரவிருத்தன் எனத்தன் சத்தி
விருத்தியினால் உபசரிக்கப் பட்டு மிக்க
விந்துவினைக் குறித்தொருமூ வகையாய் நிற்பன்

" திருத்தமிகு கமலமலர் விரித்தொ டுக்கும்
செய்கைமுத லாற்போத காதி யாம்பேர்
அருக்கனுற லெனக்"குடிலை குறித்த செய்கை
அதுகொடிறை வன்பெறுஞ்சத் தாதி நாமம்.

இ – ள்: மேற்கூறிய இலக்கணங்களையுடைய பரமசிவன் மிக்க சுத்தமாயையைச் செயற்படுத்தும் முறைமையினைக் குறித்துத் தன் சத்தி விருத்தியினால் தான் உபசரிக்கப்பட்டுச் சத்தன் என்றும் உத்தியுத்தன் என்றும் பிரவிருத்தன் என்றும் மூவகையாய் நிற்பன். தாமரை மலரை மலரச்செய்து, நிலைபெறுத்திப், பின் குவியச்செய்யும் செயலால் போதகன் முதலான மூன்று பெயர்களைக் கதிரவன் பெறுதற்போல சுத்தமாயையைச் செயற் படுத்தும் முறையைக் கருதி முதல்வன் சத்தன் முதலிய மூவகைப் பெயர்களைப் பெறுவன். (எ – று) 1

இதுவும் அது

54. பரசிவனிற் குடிலைபிர ளயத்தொ டுக்கப்
பட்டகா ரியமொடுகா ரணமாய் நிற்ப
மருவுமில யத்துவமாம் பெயரி னோடு
வயங்குசிவ தத்துவமாம் பெயரும் ஈசன்
உரைசெய்சிவன் கிரியாதி சத்தி தங்கள்
ஊக்கமுதல் கிரியையினின் றொழிந்தி ருப்பான்
நிருமலனென் சத்தனெனப் படும்அச் சத்தன்
நிட்களனென் றுகமநூல் நிகழ்த்து மன்றே.

இ – ள்: பிரளய காலத்திலே சுத்தமாயையானது ஒடுக்கப் பட்ட காரியத்தொடு காரணவடிவாய்ப் பரசிவனில் நிற்ப, இலயன் என்னும் பெயரினோடு சிவதத்துவம் என்னும் பெயரும் பெற்று அப் பரமசிவன் தன் சத்தியின் செயலிலிருந்து நீங்கி நிற்பன். அப்பொழுது அவன் பெயர் சத்தன் என்று கூறப்படும். அச்சத்தனைச் சிவாகமங்களெல்லாம் நிட்களன் என்று கூறும். (எ – று) 2

## இதுவும் அது

55. குடிலைசிவ ஞற்படைப்பின் காரி யங்கள்
கூடிலிறை போகமெனப் படுவன்; அப்பேர்
அடையுமவன் உத்தியோ கிக்கப் பட்ட
அளப்பரிய சக்தியுள ஞத லாலே
படியிஞெரு பெயர்உத்தி யுத்த னென்னப்
படுவனவன் சதாசிவனென் றறைவர் நல்லோர்
விடலரிய பிரவிருத்த ஞகுந் தன்மை
விளங்கஅருள் நூல்மரபின் விரித்து ரைப்பாம்.

*இ-ள்: சிவனல் படைப்பிற்கு வேண்டிய காரியங்களைக் குடிலை கூடில், அப்பொழுது அச் சிவன் போகம் எனப்படுவன். அப்பெயர் பெற்ற அவன் உத்தியோகிக்கப்பட்ட அளப்பரிய சத்தியைப் பெற்றிருத்தலால், உத்தியுத்தன் என்னப்படுவன்; அவனைச் சதாசிவனென்றும் நல்லோர் கூறுவர். அச் சிவனே பிரவிருத்தன் ஆகும் தன்மையைச் சிவாகமங்களிற் கூறிய முறைப்படிக் கூறுவாம். (எ-று)* 3

## இதுவும் அது

56. விந்துமுழு முதலாய இறைவன் றன்ஞல்
விருத்திபெறில் தனதுகா ரியத்தின் கண்ணே
அந்தமறு பரமசிவன் றனக்கு நாமம்
அதிகார னெனவறையப் படுவ னன்றி
இந்தவதி காரனெனும் பெயர்பெற் றுனே
ஈசனெனப் படுவனிவன் சத்தி யெல்லாம்
முந்துபிர விருத்தியினை அடையா நின்ற
முறைமையால் பிரவிருத்த ஞகு மன்றே.

*இ-ள்: சுத்தமாயையானது முழுமுதலாய இறைவனல் தனது காரியத்தின்கண்ணே விருத்திபெறில் அப்பொழுது அவ்விறைவனுக்குப் பெயர் அதிகாரன் என அறையப்படும். அஃதன்றி, இந்த அதிகாரனெனும் பெயர்பெற்றவனே ஈசன்*

என்றும் கூறப்படுவன். இவ்விறைவன் சத்தியெல்லாம் பிரவிருத்தியினை அடையாநின்ற முறைமையால் அவ்விறைவன் பிரவிருத்தனென்றும் கூறப்படுவன் (எ – று) 4

## நிட்கள சிவப் பெயர்.

57. சாற்றுசிவம் பராபரமே சூக்கம் நித்தம்
சகலகதம் அவ்வியமோ டநிந்தி தம்தான்
ஆற்றலுறு அனுபவம்அப் பிரமாணம் பின்னம்
அனுமயமென் றுகமஞ்சொல் லிலக்கணங்கள்
ஏற்றமிகு பேரறிவே உருவ மாகி
இலங்குறுநிட் களசிவமுற் றிருக்கு மென்பர்
போற்றுறுமந் நிட்களமாஞ் சிவமே வந்து
புகழ்சகள மாமுறையைப் புகன்று ரைப்பாம்.

இ – ள்: ஏற்றம் மிகும் பேரறிவே வடிவமாகி விளங்கும் நிட்கள சிவமானது, சிவம் பராபரம் சூக்கம் நித்தம் சகலகதம் அவ்வியம் அநிந்திதம் அனுபவம் அப்பிரமாணம் பின்னம் அனுமயம் என்று ஆகமம் கூறும் இலக்கணங்களைப் பெற்றிருக்கும் என்பர். அந்த நிட்களமாம் சிவமே வந்து சகளமாகும் முறையைக் கூறுவாம். (எ – று) 5

### குறிப்பு

பராபரம் – பராத்பரம்; மேற்பொருளுக்கெல்லாம் மேலான பொருள். சூக்கம் – நுண்பொருள். நித்தம் – அழிவற்றது. சகலகதம் – எல்லாப் பொருளிலும் நிறைந்திருப்பது. அவ்வியம் – (அவ்வியயம்) என்றும் அழிவற்றது. அநிந்திதம் – நிந்தனையற்றது. அனுபவம் – அனுபவ அறிவால் உணரப்படுவது. அப்பிரமாணம் – பிரமாணங்களால் அளக்கப்படாதது. பின்னம் – ஆன்மாவிற்கு வேறுபட்டது. அனாமயம் – நோய் இல்லாதது.

## சகள சிவம்

58. சாதகர்தம் தியானபூ சனைட்பொ ருட்டுத்
தகுசிவசா தாக்கியமே ஆதி யாக
ஏதமறு கருமமீ றுக ஐந்தும்
இலங்குருவாய்ச் சதாசிவனென் றிருக்கு மென்பர்

ஆதிபரன் அறைந்தசா தாக்கி யங்கள்
ஐம்பிரமம் எனப்படுமப் பரசி வன்ருன்
ஓதரிய கிரியாபே தத்தால் ஐயைந்
துறுபேத முடையபே ரீச ஞகும்.

இ-ள்: அந் நிட்கள சிவம் சாதகர்களின் தியானம் பூசனைப் பொருட்டாகச் சிவசாதாக்கியம் முதல் கன்ம சாதாக்கியம் ஈருக ஐந்து சாதாக்கியங்களும் வடிவாகப்பெற்று, சதாசிவன் என்று பெயர்பெற்று இருக்கும் என்பர். முதன்மையான பரமேசுரன் கூறிய ஐந்து சாதாக்கியங்களும் ஈசாஞதி ஐம்பிரமம் என்று கூறப்படும். பரசிவனது தொழில் வேறுபாட்டால் இருபத்தைந்து பேதமுடைய சிவ மூர்த்தங்கள் தோன்றின. (எ-று) 6

## குறிப்பு

சிவ சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம் கர்த்திரு சாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என சாதாக்கியங்கள் ஐந்து. இவை முறையே பராசத்தி, திரோதான சத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியிற் ரேன்றின. சாதகர் – கடவுள் நெறியில் பயில்பவர். ஐம்பிரமம் – ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் என்பன.

## சிவ பேதங்கள்

59\. சந்திரசே கரஞதி இலிங்க மீருய்ச்
சாற்றுமவை ஈசனுருப் பேத மாகும்
அந்தமுறு சிவமொன்று சதாசி வந்தான்
ஐந்தீச தத்துவமோர் இருபத் தைந்தாம்
இந்தவகை பெறும்முப்பத் தொன்றும் சத்தி
இயற்றுசெயற் பேதமுறு உபாதி தன்ஞன்
முந்துசிவ பேதமென உபசா ரத்தான்
மொழிவவலால் உண்மையல மொழியுங் காலே.

இ-ள்: மேற்பாட்டில் 'ஐயைந்துறு பேதமுடைய பேர் ஈசஞகும்' என்றவை சந்திரசேகரன் முதலாக இலிங்கோற்பவர் ஈருகச் சொல்லப்படும்; அவை ஈசனுருப் பேதமாகும். அழகு

பொருந்திய சிவம் ஒன்று, சதாசிவம் ஐந்து, ஈசனுருப்பேதம் இருபத்தைந்து ஆக இந்த வகைபெறும் முப்பத்தொன்றும் சத்தி இயற்றும் செயற்பேதம்உ-று உபாதியால் சிவபேதம் என உபசார வழக்கால் சொல்லுவன வன்றி அச்சிவம் ஒன்றேயாம். (எ-று) 7

குறிப்பு

ஈசனுருப்பேதம் இருபத்தைந்தாவன: சந்திரசேகரர், உமாமகேசர், இடபாருடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிட்சாடனர், காமாரி, அந்தகாரி, திரிபுரதகனர், சலந்தராரி, விநித்துவம்சர், வீரபத்திரர், நரசிம்மநிபாதர், அர்த்தநாரீசர், விக்கிரதரர், கங்காளர், சண்டிகேசாநுக்கிரகர், கறைக்கண்டர், சக்கராபயப்பிரதர், கசமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், தெட்சிணாமூர்த்தி, அனங்ககப்பிரத்துமர், இலிங்கோற்பவர். சதாசிவந்தான் ஐந்து: சதாசிவன், ஈசன், பிரமீசன், ஈசுரன், ஈசானன் என்பவர்.

பதிபேதவியல் முற்றும்.

(ஆக விருத்தம் - 59)

## பசு மரபு

### பசுக்கள் மூவகையர் என்றது.

60. சாற்றுமுயிர் விஞ்ஞான கலர்பிரளை
யாகலரே சகலர் என்று
பாற்றலரு மலகரும மாயைகளின்
புணர்ப்பினுல் பதியே போலப்
போற்றலுறு மூவகைத்தாம் அம்மூவர்
இயல்புதனைப் புகன்று ரைப்பின்
ஆற்றலுறும் ஒன்றிரண்டு மூன்றுதளை
முறையுடையர் அவர்தா மன்றே.

இ-ள்: உயிர், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்று ஆணவமலம் கன்மமலம் மாயாமலங்களின் கூட்டுறவால் பதியைப் போல நித்தியமாய் மூவகைத்தாம். அம்மூவர் இலக்கணத்தைக் கூறின் அவர் தாம் முறையே ஒன்று இரண்டு மூன்று பாசங்களை முறையே உடையராவார் என்க. (எ-று) 1

## குறிப்பு

"ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயைப் பிரளயா கலருக்கே
ஆணவ மாயையும் கன்மமும் மூன்றுமே
காணும் சகலர்க்குக் காட்டும் மலங்களே" (2241)

என்பது திருமந்திரம்.

### சகலர் என்ற காரணம்.

61. ஓதலுறும் மாயையெனும் தளைதானே
பந்தமாய் உறுத லில்லை
ஆதலினன் மாயையெனும் மொழியினல்
அதன்பெருங்கா ரியங்க ளாகப்
போதலுறு கலாதிமொழி யப்படுமக்
கலாதிகளின் புணர்ப்பி னுனே
வீதலரும் தளைபடுநர் சகலரென
நூன்முழுதும் விளம்பு மன்றே.

*இ – ள்: மாயை என்னும் முதற் காரணம் உயிர்கட்குப் பந்தமாக உறுதலில்லை; ஆகையினல் மாயை என்னும் மொழியினல் அதன் காரியங்களாகிய கலை முதலான தத்துவங்களே கூறப்படும்; அக் கலை முதலான தத்துவங்களுடன் கூடித் தளைபடும் உயிர் வருக்கம் சகலரெனப்படுவர். (எ – று)* 2

## குறிப்பு

*ஸ + கலர் - கலை முதலிய மாயா காரியங்களுடன் கூடிய உயிர் வருக்கம்.*

### ஞானத்தால் கன்மங்கெட்டு உடம்போடுற்ற சிலரும் சகலர் எனப்படுவர்.

62. முடிந்திடினும் கடம்திகிரி சுழறல்போல்
விஞ்ஞான முதலால் தம்மை
அடைந்தவினை கெட்டிடினும் வாதனையால்
மாயைமயம் ஆகும் என்னும்

உடம்புசில பகலுறலான் மலமாயை
எனுமிரண்டோ டுற்ரு ரேனும்
தொடர்ந்துசிலர் சகலரெனப் படுவரென
ஆகமநூல் துணிந்து சொல்லும்.

இ - ள்: குயவன் குடத்தை இயற்றும்பொழுது குடம் செய்து முடிக்கப்பட்டாலும், மேலும் சில நொடிவரை சக்கரம் சுழலுதல்போல, ஞானச் சிறப்பால் தம்மை அடைந்த கன்மமலம் கெட்டொழியினும், வாசனைமலத்தால் மாயையின் காரியமாகிய உடம்பு சில நாளிருத்தலான், மலம், மாயை என்னும் இரண்டு மலங்களுடன் பொருந்தினரேனும் கன்மமலம் கெட்ட அவர் (சிலர்) சகலர் என்று கூறப்படுவர். (எ - று) 3

சகலன் இயல்பு.

63. மும்மலமோ டுறுசகலன் மரபியம்பின்
மலத்திஞன் மூட மாய
மைம்மலியும் சிற்சத்தி உளனுகி
அச்சித்து வயங்கு தற்குப்
பொய்ம்மலியும் கலாதியொடு புணர்ந்துவினை
போகத்தின் பொருட்ட டைந்து
மெய்ம்மறையும் உயிர்சகல னெனப்படுமென்
ருகமநூல் விளம்பு மன்றே.

இ - ள்: மும்மலத்தான் என்னும் சகலனுடைய இலக்கணங்களைக் கூறின், ஆணவ மலத்தால் மறைக்கப்பட்ட விளங்காத ஞானசத்தியை உடையனுகி, அந்த ஞானசத்தி விளங்குதற்குக் கலை முதலான தத்துவங்களுடன் கூடி, கன்மத்தை உலக போகங்களை நுகர்தற் பொருட்டு அடைந்து, உண்மைப் பொருளை அறிந்துகொள்ளாத உயிர் சகலன் என்று கூறப்படுவான். (எ - று) 4

குறிப்பு

சிற்சத்தி – ஆன்ம சிற்சத்தி.

## பிரளயாகலர் இயல்பு.

64. பிரளயகா லத்திலுறு கலாதியுப
சங்காரம் பெறுத லாலே
இருண்மலமொன் றுற்றதனுல் மறைப்புறுமொண்
சிற்சத்தி யிசைந்தக் காலம்
மருவியவா தனையதின்மன் மாயையுறும்
எனலால்அம் மாயை மேவும்
கருமமலி பாகமுறாக் கலையுடையன்
பிரளயா கலனென் றுமே.

*இ-ள்: பிரளய காலத்திலே தான் பெற்றிருந்த கலை முதலான மாயாகாரியங்கள் சங்கரிக்கப்பட்டதால் ஆணவமலம் ஒன்றைப் பொருந்தி, அம் மலத்தால் மறைத்தலைப்பெற்ற ஞான சத்தியுடன் (ஆன்ம சிற்சத்தியுடன்) பொருந்தி, அக்காலம் பொருந்திய மாயாமல வாசனையினுல் நிலைபெற்ற மாயையை இடமாகப் பொருந்தும் பக்குவமடையாத கன்மத்தையுடையவன் யாரோ அவன் பிரளயாகலன் ஆவான். (எ - று)*

### குறிப்பு

*"பிரளயத்தில் கலையற்றவன் பிரளயாகலன் ஆவான். பிரளயா கலரும் அநாதியே மல கன்மங்கள் மாத்திரம் உடைய பிரளயா கலரும், இடையே பரிபக்குவ விசேடத்தான் மாயாபந்தம் மாத்திரம் நீங்கி ஏனையிரண்டுமுடைய பிரளயா கலருமென இருவகையர்." என்பது (சூ-4; அதி-3) சிவஞானபாடியம்.*

## விஞ்ஞான கலர் இயல்.

65. விரிதலுறும் விஞ்ஞானம் யோகம்சன்னி
யாசம்முதல் விதியி னுல்முன்
கருமம்அழி வுறுதலினுல் அக்கரும
நுகர்விற்காங் கலாதி மாய
மருவிமலம் ஒன்றொடுரூ னியகாயன்
ஆகிமிக வயங்கும் ஞானக்
கிரியையுளன் விஞ்ஞான கேவலனென்
றையமறக் கிளக்கும் நூலே.

இ–ள்: விஞ்ஞானம் யோகம் சன்னியாசம் முதலான விதியினலே முன்னர் கருமமலம் அழிவுற்றதால், அக்கரும நுகர்ச்சிக்குக் கருவியாகிய மாயாகாரியமாகிய கலைமுதலான தத்துவங்கள் மாய, ஆணவமாகிய ஒருமலத்தோடுமட்டும் மருவி, சூனிய உடம்பையுடையவனுகி மிக விளங்கும் ஞானச்செயலினை யுடைய உயிர் விஞ்ஞான கேவலனென்று ஐயமறச் சிவாகமம் செப்பும். (எ–று) 6

## குறிப்பு

விஞ்ஞானத்தால் கலை யற்றவர் விஞ்ஞான கலர். "விஞ்ஞான கலர் அநாதியே, மலபந்தமாத்திரமுடைய விஞ்ஞான கலரும்; அனுபவத்தானுதல் விஞ்ஞானத்தானுதல், யோகத்தானுதல், சன்னியாசத்தானுதல் தீக்கை யானுதல் இடையே மாயபந்தம் கன்மபந்தம் முழுவதும் நீங்கி அசுத்த மாயையின்மேலுள்ள புவனங்களில் நுகரக்கடவனவாகிய விஞ்ஞான கலருமென இருவகையர்" என்பர் (சிவ-பாடியம்—சூ-4 அதி—ந) **சிவஞானமுனிவர்.**

## விஞ்ஞானகலருள் எண்மரைத் தலைவராக்கியது.

66\. பேசுமுயிர் மலபாக மிகைகுறையால்
அமைப்பில்பல பேதம் எய்தும்
பாசமசே தனமாகித் திரவியமா
தலிற்புணரும் பாகம் நோக்கின்
காசமென வாதலினோர் மலமுடைய
விஞ்ஞான கலருள் அண்ணல்
ஆசிலிரு நால்வர்தமை முழுதுணர்ந்து
முழுமுதல்வ ராக வாக்கி.

இ–ள்: மேலே கூறப்பட்ட உயிர் ஆணவமல பக்குவத்தின் மிகுதியாலும் குறைவாலும் அளவில்லாத பல பேதத்தை அடையும். என்னை காரணமென்னில்? பாசமானது சடப் பொருளாய்த் திரவியமாதலில் அதற்குக் கூடும் பக்குவத்தை நோக்கின் வேறுபாட்டிற்குக் காரணமாம் என்க, அண்ணலாகிய பரமசிவன் ஓர் மலமுடைய விஞ்ஞான கலருள் எண்மரை எல்லா வற்றையும் உணர்ந்து முழுமுதல்வர் ஆகுமாறு ஆக்கி. (எ–று) 7

## அட்ட வித்தியேசுரர்

67. மாயையதி காரம்வாக் குதவிவயிந்
துவமாகும் வடிவம் நல்கி
தீயவினை தபுமீச தத்துவவா
சிகளாகச் செய்தான்; அன்னோர்
நேயமிகும் அனந்தன்சூக் குமன்சிவோத்
தமனேக நேத்தி ரன்றுன்
சேயொளியோர் உருத்திரன்நல் திரிமூர்த்தி
சீகண்டன் சிகண்டி என்பர்.

*இ–ள்: விஞ்ஞான கலரிற் சிறந்த எண்மருக்கு அசுத்த மாயையைத் தொழிற்படுத்தும் அதிகாரத்தையும் வாக்கையும் உதவி, சுத்தமாயையாலாகிய வடிவத்தைத் தந்து, தீவினை கெட்ட ஈசுர தத்துவத்தில் வசிப்பவராகச் செய்தான் அவ் வண்ணல். அவ்வெண்மர் பெயர் அனந்தன், சூக்குமன், சிவோத்தமன், ஏகநேத்திரன், ஏகருத்திரன், திரிமூர்த்தி, சீகண்டன், சிகண்டி என்பனவாகும் என்பர். (எ–று)* 8

## குறிப்பு

*ஓர் உருத்திரன் – ஏக ருத்திரன்.*

## விஞ்ஞானகலருள் தலைவர்.

68. வரைவகல ஒருசிலரை மலபாக
முறைமைகொடு மந்தி ரங்கள்
அருள்புரியு மிடைக்கரண பூதர்கடாம்
ஆகவே அருளி ஞனே
விரிவுறும்ஏழ் கோடிமந்தி ரேசரென
ஆக்கியே வித்தை மேவப்
பரமசிவ னமைத்தானென் றுத்தமொழி
எனும்பனுவல் பகரு மன்றே.

*இ–ள்: பரமசிவன் விஞ்ஞானகலருள் ஒரு சிலரை ஆணவ மல பக்குவ முறைமையைக் காரணமாகக் கொண்டு, மந்திரம்*

முதலானவற்றை உபதேசிக்கும் நந்திகேசுரர் முதலான இடைக் கரண பூதர்கள் தாம் ஆகவே ஆக்கினன்; விரிவு பொருந்திய ஏழ்கோடி மந்திரேசரென ஒரு சிலரை ஆக்கிச் சுத்த வித்தியா தத்துவ புவனத்தை மேவி வசிக்குமாறு அமைத்தான் என்று சிவாகமம் கூறும். (எ – று) 9

## இதுவும் அது

69. விளங்கலுறும் அம்மந்தி ரேசர்தம்முள்
சிலர்சகலர் விடையம் ஆகித்
துளங்கலரும் சகலாதி கரணன்எனும்
சிவன்அருள்செய் தொழிலின் கண்ணே
வளங்கெழுமுக் கரணமாந் தன்மையிஞ
லிருந்து முத்தி மருவுகிற்பர்
உளங்கொளுமாப் பிரளயத்தென் றுமைபாகன்
ஆகமநூல் உரைக்கு மன்றே.

இ – ள்: அசைவரும் சகல அதிகரணன் எனும் பரமசிவன் அருள்செய்யும் தொழிலிடத்தே மேற் கூறிய மந்திரேசர் தம்முள் சிலர், சகலருக்கு விடையமாகியிருந்து முத்தொழில் செய்வதற்குக் கருவியாந் தன்மையிஞலிருந்து பெரும் பிரளய காலத்திலே முத்தியை அடைவர். (எ – று) 10

## குறிப்பு

சகலாதி கரணன் — எல்லா அதிகாரங்களையும் உடையவன்.

## இதுவும் அது

70. அனையவருள் ஒருசிலர்தாம் உயர்நிரதி
கரணனெனும் அரன்த னக்கு
வினையகலும் விஞ்ஞான கலர்பிரள
யாகலர்தம் விடையந் தன்னில்
பனுவல்மொழி கரணமாம் திறம்மருவி
இவ்வுலகின் படைப்பின் பின்னர்
முனம்மருவு அதிகார வயிராக
வழியிஞர் முத்தி சேர்வர்.

இ - ள்: மேற்கூறிய விஞ்ஞான கலருள் ஒரு சிலர், உயர்ந்த நிரதிகரணன் எனும் பரமசிவனுக்கு, வினை நீங்கும் விஞ்ஞான கலர் பிரளயா கலர்களின் விடையத்திலே நூல்களைக் கூறும் கரணமாம் திறம்மருவி, இவ்வுலகின் படைப்பின் பின்னர் முன்னே பொருந்திய அதிகார வயிராக வழியினர் முத்தி சேர்வர் என்க. நிரதிகரணனுக்குத் தாங்கள் கரணமாந் திறம் மருவி, என்று கூட்டுக. 11

### விஞ்ஞானகலருள் பக்குவர்.

71. மிக்கமல பரிபாகம் உடையராய்
அதிகார விருப்பம் இல்லார்
புக்குறுவர் பரமுத்தி விஞ்ஞான
கலர்தம்முள் புகலில் சில்லோர்
பக்குவமாம் மலமுடையர் மலபரிபா
காந்தமொரு பாச மேசார்ந்
தக்கரும கலைகளான் மறித்தசைக்கப்
படுவரென அறையு நூலே.

இ - ள்: விஞ்ஞான கலருள் ஒரு சாரர் மிகவும் ஆணவமல பக்குவம் உடையவராய் அதிகாரம் புரிய விருப்பம் இல்லாதவர் மேலான முத்தியில் புகுவர். அவருள் பக்குவமாம் மலமுடையவரே மலபரிபாக முடிவில் ஒரு பாசமே சார்ந்து வினையாலும் மாயா காரியமான கலைகளாலும் மீண்டும் கட்டப்படுவரென சிவாகமம் கூறும். (எ - று) 12

### பிரளயாகலரிற் பக்குவர்.

(வேறு)

72. பகர்தருமப் பிரளயா கலர்க டம்முள்
பக்குவமாம் மலம்உளர்க்கப் பக்கு வத்தால்
அகிலவினை களும்மருவும் பக்கு வத்தை;
அனையமல கருமங்கள் பாகந் தன்னால்

புகலரிய அவர்களிடைச் சத்தி பாதம்
பொருந்துறுமச் சத்திநிபா தத்தி ஞனே
உகலரிய பரமுத்தி உறுவ ரென்ன
உமைபாகன் ஆகமநூல் உரைக்கு மன்றே.

*இ-ள்: மேற் கூறிய பிரளயாகலர்களுள் பக்குவ மடைந்த ஆணவ மலம் உள்ளவர்க்கு அம் மல பக்குவத்தால், அவருடைய எல்லாக் கன்மங்களும் பக்குவத்தை மருவும்; அந்த மல கருமங் களின் பக்குவத்தால் புகலரிய அவர்களிடைச் சத்திநிபாதம் பொருந்தும்; அச் சத்திநிபாதத்திஞல் அவர் கெடுதலில்லாத மேலான முத்தியை அடைவர் என்று சிவாகமம் கூறும். (எ-று) 13*

பிரளயாகலருட் சிலரை அதிகாரம் உடையவராக்கியது.

73. அப்பிரள யாகலருட் சிலரைச் சீர்சால்
அனந்தேசர் சிவதீக்கை அதனுன் முன்னர்
ஒப்பரிய மாயாகற் பாதி காரம்
உடையவராய்ப் புரிந்ததனுக் குரிய வென்ன
வைப்புறுமொண் கலாதியொடு புணர்த்த வற்றின்
வயமிலராய்ச் செய்துபஞ்சாட் டகங்க ளாகச்
செப்பலுறு புவனேசர் ஆகும் வண்ணம்
செய்தனரென் றிறையருணு லியம்பு மன்றே.

*இ-ள்: சீர்சால் அனந்தேசர் அப்பிரளயாகலருட் சிலரை சிவதீக்கையால் மாயாகற்பாதிகாரம் உடையவராய்ப் புரிந்து, அவ்வதிகாரத்திற்கு உரியவென்ன கலைமுதலான தத்துவங்களுடன் கூட்டி அத்தத்துவங்களின் வயமிலராய்ச் செய்து பஞ்சாட்டகங் களாகச் சொல்லப்படும் புவனேசர் ஆகும் வண்ணம் செய்தனர் என்று சிவாகமம் கூறும். (எ-று) 14*

குறிப்பு

*பிரளயாகலர் கலாதியொடு கூடினும் அவற்றின் வயமிலராய் ஒழுகுமாறு சிவதீக்கை அதனுல் அநந்தேசர் புரிவர். பிரளயாகலர் கலைகளோடு கூடினும் சகலராகார் என்பதை "விஞ்ஞானகலர், பிரளயா*

கலர் நுகரக்கடவனவாகிய போகத்துக் கேதுவான கலைகளோடு கூடினும் அவற்றாற் பந்தமுறுதலின்மையின் அகலரேயன்றிச் சகலராகாமை உணர்க" என்பதால் அறிக. (சூ-உ-அதி-2) சிவஞானபாடியம்.

### பஞ்சாட்டகமும் சகலரின் வகையும்

74. ஐந்துவகை யெனுமெட்டிங் குலோக பாலாட்
டகங்குய்யாட் டகமதிகுய் யாட்ட கம்பின்
வந்துறுகுய் யாற்குய்யாட் டகம தன்பின்
வருபவித்தி ராட்டகமென் றறைவர் மேலோர்;
பந்தமுறு சகலர்தமை இனியு ரைப்பின்
பக்குவா பக்குவத்தின் பகுதி யாலே
நந்துதிரி பாசரென இருபே தத்தால்
நவின்றிடப்பட் டிடுவரென நவிலும் நூலே

இ-ள்: மேற்பாட்டிற் கூறிய பஞ்சாட்டகங்களாவன:- உலோக பாலாட்டகம், குய்யாட்டகம், அதிகுய்யாட்டகம், குய்யாற்குய்யாட்டகம், பவித்திராட்டகம் என்று கூறுவர். இனி மும்மலத்தால் தளையப்பெற்ற சகலராகிய உயிர்வருக்கத்தை உரைப்பின், அவர் பக்குவ மும்மலத்த ரெனவும், அபக்குவ மும்மலத்தரெனவும் இருவகையால் கூறப்படுவர். (எ-று)

### குறிப்பு

குய்யாட்டகம், அதிகுய்யாட்டகம், குய்யதராட்டகம் பவித்திராட்டகம் தாணுவட்டகம் சூக்கும புவனாட்டகம் யோகாட்டகம் என்று ஏழென்றும், ஒன்று எட்டாகி ஐம்பத்தாறு புவனமாமென்றும், இவை பிரதிட்டாகலையி லடங்கும் அப்பு மண்டலத்திலிருக்குமென்றும். இவற்றை உருத்திரர் காப்பாரென்றும் (சூ - 2; அதி - ந.) சிவஞானபாடியம் கூறும். விஞ்ஞானகலர் முதலிய மூவகை உயிர்களையும் பக்குவர், பக்குவாபக்குவர், அபக்குவர் என மூன்றாகப் பிரித்துக் கூறுதலும் உண்டு.

### சகலரில் பக்குவ பாசர்

75. வயங்குகலைத் தலைமேவு ககனே சாதி
மண்டலிக ரெண்மர்குணம் உடையோ ரென்ன
இயம்பலுறு குரோதாதி எண்மர் பின்னர்
இலங்குகுண தத்துவமா வாசி யாக

வியந்துரைசெய் சீகண்ட ருத்தி ரன்ருன்
விறற்சதருத் திரரதிட்டாத் துருவாம் வீரன்
சயங்கொள்பிர மாண்டதா ரகரா மென்று
சாற்றுசத ருத்திரர்தாம் பாக பாசர்.

இ-ள்: கலே என்னும் தத்துவத்திலுள்ள புவனங்களில் வசிக்கும் ககனேசர் முதலிய மண்டலிகர் எண்மரும், குரோதாதி எண்மரும், குணதத்துவத்தில் வாழும் சீகண்ட ருத்திரரும், சதருத்திரர் அதிட்டாத் துருவாம் வீரனும், பிரம்மாண்டத்திலே வசிக்கும் சதருத்திரரும் ஆகிய இவரெல்லாம் பக்குவபாசமுள்ள சகலராவார். (எ-று) 16

குறிப்பு

மண்டலிகர் எண்மர், குரோதாதி எண்மர், சீகண்ட ருத்திரன், சதருத்திரர், அதிட்டாத்துருவாம் வீரன், சதருத்திரர் ஆகிய நூற்றுப் பதினெண்மரும் பாகபாசர். இவரை "நூற்றுவர் மேற்பதினெண்மர்" (77) என்பர்.

அபக்குவ முப்பாசராகிய சகலர்

76. பக்குவமின் மும்மலத்தால் தளையப் பட்டுப்
பழகுபுரி யட்டகமாம் படிவ மெய்தி
அக்கடிய பிறப்பினிடை உழலா நின்ருேர்
அபக்குவமுப் பாசரவ ராத லானே
மிக்கதொரு மாயாமண் டலத்தின் நாப்பண்
மேவுவோர் சகலர்திதி யிடையா சானுள்
புக்கவரு ளொடுசிலரைச் சத்தி பாதப்
புணர்ப்பினுன் முத்திகளிற் பொருத்து மீசன்.

இ-ள்: பக்குவமில்லாத மும்மலத்தால் கட்டப்பட்டு பழகிய புரியட்டக உடம்பை அடைந்து அந்தக் கடுமையான பிறப்பின்கண் உழல்பவர் அபக்குவ முப்பாசராவார்; அவ் வியல் புடையராதலால் அவர் அசுத்தமாயா மண்டலத்தின் நடுவே மேவுவோராவார்; சகலர் எனப் பெயர்பெறுவர். பரமசிவன்

அச்சகலருள் சிலரைத் திதிகாலத்தின்கண் ஆசானுள் தான் புகுந்து செய்யும் அருளால் சத்திநிபாதப் புணர்ப்பினால் முத்தியிற் பொருத்தும். (எ-று) 17

## குறிப்பு

புரியட்டகம் சூக்கும தேகமும் (அதிசூக்குமமாகிய) பரதேகமுமென்று இருவகைத்து. அவற்றுள், தன்மாத்திரை ஐந்தும், அந்தக்கரணம் மூன்றுமாகிய எட்டானுமாகியது சூக்கும தேகம். இது காலோத்தரத்திற் காண்க. பூதமொன்றும், தன்மாத்திரையொன்றும், ஞானேந்திரிய மொன்றும், குணதத்துவமொன்றும், மூலப்பகுதியொன்றும், கலாதி யொன்றும் என்னும் எண்வகைப்பட்ட முப்பத்தொரு தத்துவங்களானயது பரதேகம். பரதேகமெனினும் அதி சூக்குமமெனினும் ஒக்கும். இது மிருகேந்திர முதலியவற்றுட் காண்க என்பது (சூ-2; அதி-2) சிவஞான பாடியம்.

## மண்டலிகர் முதலியவரைத் தலைவராக்கியது.

77\. நூற்றுவர்மேற் பதினெண்மர் என்ன முன்னம்
நுவன்றவரை மலாதிகளின் பாக பேதத்(து)
ஊற்றமிகு சிவன்நிரதி கரணன் ஆகி
உலகுபடைப் புறுதலின்கண் அருள் புரிந்து
சாற்றரிய மாயாகற் பாதி காரத்
தன்மையராய்ப் பரிபாக மலாதி மேவும்
ஆற்றலினால் கலாதிவசர் அல்ல ராகி
அழகியமந் திரேசரென அமர்த்து மன்றே.

இ-ள்: ஊற்றமிகு சிவன், நிரதிகரணனாகி, மேலே [75] நுவன்ற நூற்றுப்பதினெண்மரை ஆணவ மலம் முதலானவற்றின் பக்குவ வேறுபாட்டால் உலகைப் படைக்கும் தொழிலில் அருள் செய்து, அசுத்தமாயா கற்பாதிகாரத் தன்மையராய்ப் பக்குவ மடைந்த ஆணவ மலாதிகள் மேவும் ஆற்றலினால் கலாதிவசர் அல்லராகி ஒழுகும் அவர் தம்மை மந்திரேசரென்ன அமரச் செய்யும். (எ-று) 18

## குறிப்பு

மண்டலிகர் எண்மர், குரோதாதி எண்மர், சீகண்ட ருத்திரன், சத ருத்திரர் அதிட்டாத்துருவாம் வீரன், பிரம்மாண்ட தாரகராகிய சத ருத்திரர் ஆக இவர் நூற்றுப் பதினெண்மராவார்.

## சீகண்ட ருத்திரர் முதலியோர் செயல்.

78. மற்றவருட் சீகண்ட ருத்தி ரன்றான்
வருமத்தி யப்பிரள யாந்தந் தன்னில்
உற்றவொரு பகுதியின்கீழ்த் தத்து வங்கள்
உறுபுவனம் ஆக்குறுவன் மும்ம லங்கள்
பெற்றுவரு சகலர்தமுள் ஞான யோகப்
பெருமையுளன் அயன்றிருமால் பதம்பு ரப்பன்
அற்றநடுப் பிரளயத்தின் மிசிரம் ஆகும்
அத்துவாவி னுள்மருவு மராக மேவும்.

இ-ள்: நூற்றுப்பதினெண்மரில் சீகண்ட ருத்திரன்றான், மத்தியப் பிரளயத்தின் முடிவில் பிரகிருதியின் கீழுள்ள தத்துவங்களையும் புவனங்களையும் ஆக்குவன். மும்மலராகிய சகலருள் ஞானயோகப் பெருமையுள்ளவன் பிரமன் திருமால் பதவிகளில் வீற்றிருந்து அப் பதங்களைப் புரப்பன். நடுப் பிரளயம் வந்த பொழுது மிசிராத்துவாவின் உள்ளே உள்ள அராக தத்துவத்தில் பொருந்தியிருப்பன். (எ-று) 19

## பக்குவ சகலர் அபக்குவ சகலர் செயல்.

79. மீண்டுபடைப் புறுகாலம் எய்தின் எம்மான்
விளம்பலுறு பகுதியிற்கா ரியங்க ளாக்க
நீண்டதிரு மாலயனைப் பயந்த வற்கு
நிலையுதவு மென்றிசைப்பர் நெறியு ணர்ந்தோர்;
ஈண்டுரைசெய் பவர்தம்மில் வேறும் ஆவி
எனப்படுவ பக்குவமில் முப்பா சத்தில்
பூண்டுபுரி யட்டகமெய் தாங்கா நின்று
புன்பிறவி நேமியிடைச் சுழலு மன்றே.

இ-ள்: நடுப்பிரளயம் முடிவுற்று மீண்டு படைப்புறு காலம் வரின், பரமசிவன் மூலப் பிரகிருதியில் காரியங்களாக்க நெடிய திருமாலையும் பிரமனையும் தோற்றுவித்து, அவர்க்கு வேண்டிய நிலையை உதவும் என்று கூறுவர் அறிஞர். இங்கே கூறிய பக்குவ மும்மலத்தாரில் வேறுபட்ட உயிர் என்று கூறப்படுவன பக்குவமில் முப்பாசத்தினைப் பெற்று, புரியட்டக உடம்பினைத் தாங்காநின்று பிறவி வட்டத்திற் சுழன்று கொண்டிருக்கும். (எ—று) 20

## உயிரிலக்கணம் கூறி அதன் சோதனை கூறுவேன் என்றது.

80. பரந்தபல சகலர்தமுள் உருத்தி ராதி
பதிநிலைவேண் டுநர்தமக்கப் பதங்க ளெல்லாம்
திருந்துகுரு வடிவாகி அருளில் நல்கும்
சிவபெருமா னென்றுலகந் தெளிந்து ரைக்கும்;
மிகுந்தவுயி ரிலக்கணமிவ் வாறு கூறி
இலக்கியமாம் பசுவிடையிவ் விலக்க ணங்கள்
பொருந்துமுறை யினில்நனிசோ திக்குந் தன்மை
புகன்றுரைப்பன் அறிஞருளம் பொருந்து மாறே.

இ-ள்: மிகப் பலவாகிய சகலருள், உருத்திரர் முதலான பதங்களின் நிலையை வேண்டுபவர்க்கு அப் பதங்களெல்லா வற்றையும் சிவபெருமான் திருந்திய குருவடிவாகி வந்து அருளால் கொடுக்கும் என்று உலகம் தெளிந்து கூறும்; உத்தேசிக்கப்பட்ட உயிருக்கு இலக்கணத்தை இவ்வாறு கூறி, இலக்கியமாகிய உயிர்களிடத்தே கூறிய இலக்கணங்களைப் பொருந்து முறையால் மிகவும் சோதிக்கும் தன்மையை அறிஞருளம் பொருந்துமாறு கூறுவன். (எ—று) 21

## சீவன் முத்தரின் வேறுயுள்ள மூவகை உயிரும் பசுவாம் என்றது.

81. பன்னரு மவித்தெசாதி பதங்கள் எய்திப்
பரனருளைந் தொழிலதிகா ரத்த ராகு

மன்னபர முத்தர்தமின் நிமல ராகி
வயங்கிசிவ நிகர்த்தபர முத்தர் தம்மின்
உன்னரிய சதாநிருவா ணத்த ராகி
உடல்வறைவித் தனையதிறற் சீவன் முத்தர்
என்னுமவர் தமில்வேருய்ப் பசுத்து வத்தோ
டிசைந்தமூ வகையுயிரும் பசுவாம் என்பர்.

*இ-ள்:* உயர்ந்த பதங்களை அடைந்து பரமசிவன் அருளிச் செய்யும் படைப்பாதி ஐந்து தொழில் அதிகாரத்தராக நிலைபெறும் அபரமுத்தருள், மலமற்றவராய் வயங்கிச் சிவனை நிகர்த்த பரமுத்தருள், சதா நிருவாணத்தராகி வறுத்த விதையை ஒத்த உடம்பைப் பெற்றிருக்கும் சீவன் முத்தரின் வேருய்ப், பந்தமுற்ற தன்மையோடு கூடிய விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்ற மூவகை உயிரும் பசுவாம் என்பர். (எ-று) 22

## குறிப்பு

சதா நிருவாணத்தர் – எக்காலமும் பற்றற்றவர் – வறுத்த விதை முளையாது; அதுபோல் இவர் எடுத்த உடல் பிறவிக்கு ஏதுவாகாது.

## பராக்கிய சூத்திரம் கூறும் பசுவிலக்கணம்.

(வேறு)

82. யாக்கையின் அயலான் நாச
மிலிவியா பகிவி பின்னன்
ஆக்கமில் சமல னன்றி
அசடன்றன் வினைப்பே றுண்பான்
ஊக்கமில் கருத்த னேசிற்
றுணர்வினன் இறையை உள்ளான்
பார்க்குறில் பசுவென் றோதும்
பராக்கிய சூத்தி ரந்தான்.

*இ-ள்:* பராக்கியம் என்னும் சிவாகமம் உயிரிலக்கணத்தை உடம்பிற்கு வேருனவன், அழிவில்லாதவன், வியாபகம் உள்ளவன், வேருயிருப்பவன், மலத்தோடு கூடியவன், சடத்

தன்மையில்லாதவன், தன் வினைப்பயனை உண்பவன், கருத்தனை யிருப்பவன், சிற்றறிவினன், முதல்வனை உடையவன் என்று இவ்வாறு கூறும். (எ-று) 23

## குறிப்பு

**சதமணிமாலை** என்னும் நூலில் **மிருகேந்திர சூத்திரப்** பொருளாக

"அன்னியனிவ் வுடம்புதனக் கழிவிலன்சிற் றறிவாளன்
பின்னன்மல மொடுபுணர்வோன் பெரியவியா பகனசடன்
துன்னுறுதன் வினைநுகர்வோன் சொல்லியவவ் வினைமுதல்வன்
தன்னைநிகர் வுறுமிறைவன் றனையுடையன் பசுவென்பான்"

என்று கூறும்.

**சித்தாந்த சாராவளி** "தேகாந்யன், ஸகஜசித், சமலன், அநேகன், ஈஸ்வர சகிதன், விபு, அற்பவித், ஸ்வைகிருதபுக், கர்த்தா, நித்யன், அப்பிரபு" என்று பசுவிலக்கணத்தைக் கூறும். (சுலோ. 5)

## இதுவும் அது

83. யாக்கையின் அயலா னென்னும்
இதுமுதன் முப்ப தங்கள்
போக்குல காய தாதி
புறச்சம யங்க டம்மை
நீக்கவும், விபின்ன ஞதி
நிகழ்த்தும்வே தாந்த மாதி
யாய்க்கிளர் வைதி கத்த
அகற்றவும் அமைந்த என்பர்.

இ-ள்: யாக்கையின் அயலான், நாசமிலி, வியாபி என்னும் மூன்று சொற்கள் முறையே உலகாயதன், புத்தன், சயினன் என்னும் புறச்சமயிகள் உயிரைப்பற்றிக் கருதும் கொள்கைகளை நீக்கவும், விபின்னன் முதலான ஏழு சொற்கள் வேதாந்தி முதலான வைதிக சமயத்தவர் தம் கொள்கைகளை அகற்றவும் அமைந்தன என்பர். (எ-று) 24

### உலகாயதன் கூற்று

84. காண்டகு நிலநீர் செந்தீக்
காலெனும் பூதம் நான்கும்
ஈண்டிய புணர்ச்சி யாலிவ்
வியாக்கையோர் உணர்வு டைத்தாம்
வேண்டிய உடம்பிற் காண
வேறிலை ஆன்மா என்று
மாண்டிடன் முத்தி என்பான்
மயங்கினன் இயம்பு மன்றே.

*இ-ள் :* காண்டலளவைக்குப் புலனாகும் நிலமும் நீரும் தீயும் காற்றும் என்கின்ற நான்கு பூதமும் கலந்த புணர்ச்சியால் இவ்வுடம்பு ஓர் உணர்வைப் பெற்றுள்ளதாம்; உடம்பினுள் காண்பதற்கு ஆன்மா என்று வேறு இல்லை; இறத்தலொன்றே முத்தியாம் என்று உலகாயதன் கூறுவான். அவன் மயக்க உணர்வினால் இவ்வாறு கூறுகிறான். (எ-று) 25

### குறிப்பு

பூதங்கள் ஐந்துண்டென்பது பூதவாதியின் கொள்கை; பூதம் நான்கே என்பது உலகாயதன் கொள்கை.

### உலகாயதன் மத மறுதலை

85. இயங்குடல் தன்னில் வேறாய்
இருந்துள உணர்வு டைத்து;
நயந்தரு சடமாய்த் தானாய்
நடத்தலின் மையில்; க டம்போல்;
இயங்குறு சடவு டம்பின்
செயலினுக் கேது வாகி
வியந்திடும் உணர்வு தானே
விளம்புவ தான்மா வென்று.

*இ-ள் :* இயங்குகின்ற உடம்பு, தன்னில் வேறாக இருக்கும் அறிவுப் பொருளைப் பெற்றுள்ளது (மேற்கோள்); என்ன காரணம்

என்னில்? உடம்பு சடப் பொருளாகித் தானாய் இயங்கும் இயக்கம் இன்மையினாலே (ஏது); எது போலெனின்? கடம் முதலான சடப்பொருள்போல (திருட்டாந்தம்); மேற் கூறிய கருதலளவையால் இயங்குகின்ற சடவுடம்பின் செயல்களுக் கெல்லாம் காரணமாகி உடம்பிற்கு வேருயுள்ள அறிவுதானே உயிர் என்று வழங்கப்படும். (எ–று) 26

## மேலும் உலகாயதன் கூற்று

86. உடம்புறும் உணர்விற் கேது
வொன்றுவே றில்லைக் காணச்
சடங்களாம் பூத யோகம்
தரவரும் உணர்வு மாகும்
முடங்குமெல் லிலைவெண் சுண்ணம்
முதலிய புணர்ப்பால் செம்மை
அடைந்துள தியாவை காண்ப
அவைசெய்கா ரணமும் காண்ப.

இ-ள்: உடம்பு பெற்றிருக்கும் உணர்விற்குக் காண வேறு ஏது ஒன்றுமே இல்லை; சடங்களாகிய நான்கு பூதங்களின் கூட்டமே உணர்வையும் தரும்; எது போலெனின்? வெற்றிலையும் பாக்கும் சுண்ணமும் ஒன்றாகக் கூடின் அங்கே செம்மை நிறம் தோன்றுகின்றது; அதற்குக் காரணம் அவற்றின் சேர்க்கையன்றி வேறு காரணம் என்னை? அதுபோல் நான்கு பூதங்களின் சேர்க்கையால் உணர்வு தோன்றுகிறது; உணர்வு தோன்றுதற்குப் பூதங்களின் சேர்க்கையன்றி வேறு காரணமில்லை. (எ–று) 27

## குறிப்பு

மெல்லிலை – வெற்றிலை; வினைத்தொகை.

## இதுவும் அது

87. சுரைதரு கார ணங்கள்
ஒன்றுற அவற்றின் இல்லா
வரைமத சத்தி மேவும்
மதுவிடை; அதுபோற் கூடும்

கரையறு பூதந் தம்மால்
கடத்திலா உணர்வு தோன்றும்
புரமுறல் இவ்வா றன்றிப்
புகலுயி ரில்லை என்னில்.

*இ-ள்:* கள்ளினைத் (நறவு) தருதற்குரிய காரணப்பொருள் களெல்லாம் ஒன்ருகச் சேர, அப்பொருள்களில் இதற்குமுன் இல்லாத மதசத்தி மேவும் அக் கள்ளிடத்தே; அதனைப்போல, ஒன்ருகச் சேரும் பூதங்களால், பூதக்கூட்டுறவுப் பொருளில் அறிவு தோன்றும்; உடம்பிற்கு உணர்ச்சி உறுதல் இவ்வாறன்றி உடம்பிற்கு வேருக உயிர் இல்லை என்று கூறில். (எ-று) 28

குறிப்பு

பூதக் கூட்டுறவால் உணர்வு தோன்றும் என்று பூதவாதி கூறுவதை,

"பூத வாதியைப் புகல்நீ என்ன,
தாதகிப் பூவும் கட்டியு மிட்டு,
மற்றும் கூட்ட மதுக்களி பிறந்தாங்,
குற்றிடும் பூதத் துணர்வு தோன்றிடும்" — 27-263-66

என்னும் மணிமேகலையால் உணரலாம்.

உலகாயதன் மத மறுதலை

88. விருத்தகா ரணத்தி லொன்ரு
விருத்தகா ரியங்க ளென்ன
உரைத்தன ரதனுல் பின்ன
காரியக் குணமென் ருதாம்;
விருத்தமில் சத்தி தன்னுல்
விசித்திர மில்லை யென்றிங்
குரைத்தனர்; சடவு டம்பின்
உணர்வதெவ் வாறு திக்கும்.

*இ-ள்:* வேறுபட்ட காரணத்தில் வேறுபட்ட காரியங்கள் பொருந்தியிரா தென்று அறிஞர் கூறுவர். அதனுல் பின்ன காரியத்தில் பின்ன குணம் பொருந்தியிராதாம். வேறுபாடில்லாத

சத்தியால் விசித்திரமில்லை என்றிங் குரைத்தனர். சடமாகிய நான்கு பூதத்தாலாகிய சட வுடம்பிலே சித்துத் தன்மையையுடைய உணர்வு எவ்வாறு தோன்றும்? (எ-று) 29

## குறிப்பு

*காரணத்தின் குணங்களே அதன் காரியத்திலுண்டாம்; ஒளியைத்தரும் விளக்கிற்குக் காரணமான நெருப்பு ஒளியைத்தான் தரும்; இருளைச் செய்யாது.*

## உடம்பிற்கு வேறாய் உயிருண்டென்பது.

89. யாதொரு பொருளுண் டாயின்
இவ்வுட லியங்கா நிற்கும்
யாதொரு பொருளின் றென்னில்
இவ்வுட லியங்கா தாகும்
ஓதுறி னதுதா னிந்த
உடம்பின்வே றாகி நின்ற
வீதலி லான்மா வென்று
விளங்குற விளம்பும் நூலே.

*இ-ள்: எப்பொருள் உடம்பிலிருப்பின் இவ்வுடல் நடவா நிற்கும், எப்பொருள் உடம்பிலில்லையாயின் இவ்வுடல் நடத்தலில்லாததாகும், கூறின், அதுதான் இந்த உடம்பின் வேறாகி நின்ற அழிவற்ற ஆன்மா என்று நூல்கள் விளம்பும். (எ-று)* 30

## புத்தன் கூற்று.

90. மிக்கசூத் திரத்தில் நாச
மிலியென விளம்பும் சொல்லால்
சத்தெனப் பட்ட தெல்லாம்
சலதரப் படல மேபோல்
அக்கண பங்க மென்ன
அறைந்துதன் புத்தி கெட்ட
புத்தன தியல்பு தள்ளப்
படுமவன் புகற்சி சொல்வாம்.

*இ–ள்:* பராக்கிய சூத்திரத்திலே உயிர் நாசமிலி என விளம்பும் சொல்லினுல், சத்தெனக் கூறப்பட்ட பொருளெல்லாம் மேகபடலம் போல கணத்தில் கெடும் என்று கூறித், தன் புத்தி கெட்டுப்போன புத்தனின் உயிரிலக்கணம் தள்ளப்படும்; அவன் கூற்றைக் கூறுவாம். (எ–று) 31

## குறிப்பு

சலதரப்படலம் என்பது மேகபடலத்தையும், நீரோட்டத்தையும் குறிக்கும். சலதரம் - நீரைத் தாங்கியிருப்பது என்ற பொருளில் மேகத்தைக் குறிக்கும்.

"புத்த சமய நூலாகிய பிடக நூலிற் கூறும் பொருளாவன: ஞானமே ஆன்மா எனப்படும்; அது நீரோட்டம் போலச் சந்தானமாய்க் கணந்தோறும் தோன்றி அழியும்; அங்ஙனம் தோன்றி அழியுங்கால் மான்மத நாற்றம் போல முற்கணத்தில் அழிவெய்தும் ஞானத்தில் தோன்றிய வாசனை, பிற்கணத்திற் றோன்றும் ஞானத்திற் பற்றுதலான் அறிவு முதலாயின நிகழும். மற்றும் உள்பொருளெனப்பட்டவை யெல்லாம் கணந்தோறும் தோன்றியழியும்; இந்த ஞானத்திற் றோன்றிய வாசனை அழிவதே முத்தி என்பதாம். ஞானங்கூடக் கெடுதல் முத்தி என்பாருமுளர் (அவையடக்கம்) என்பது சிவஞானபாடியம்.

## புத்தமத மறுதலை.

91\. உள்ளது கணபங் கத்த(து)
  ஒண்முகிற் படலம் போலென்(று)
உள்ளுறும் பிரமா ணத்தால்
  உதுகடம் என்னும் ஞானம்
கொள்ளுறும் புத்தி போக்கு
  வரல்குறிக் கொள்ளொணுத
தெள்ளுதண் புனல்போல் நிற்றல்
  தீர்கண பங்க மாகும்.

*இ–ள்:* "முகிற்படலம் போல" உள்ளதெல்லாம் கணத்தில் கெடுவதென்று புத்தனுகிய நீ மேற்கொண்ட அளவையால், இது கடம், இது படம் என்று சுட்டி அறியும் நிலையான அறிவினைக் கொள்ளும் புத்தியானது போதல் வருதலில்லாமல் ஓரிடத்தி

லேயே நிற்கும் தெள்ளிய தண்ணீர்போல் நிற்றலால், முகிற்படலம் போல், நீரோட்டம் போல் புத்தி முதலியன கணபங்கத்தது என்பது பொருந்தாததாகும். (எ-று) 32

## இதுவும் அது

92. உடலுறு புத்தி ஞானம்
ஒழிந்துயி ரில்லை என்னில்
அடலுறு கணபங் கத்த
தாகில்நீ கூறும் ஞானம்
தொடர்வுறு கரும ஈட்டம்
யார்க்கிது சொல்க ஞானம்
கெடலுறு தன்மை தன்னால்
கிளர்வினைப் பயங்கூ டாதால்

இ-ள்: உடலிடத்தே பொருந்தியுள்ள புத்திஉணர்வைத் தவிர்த்து வேருக உயிர் என்பது இல்லை என்று கூறில், அப்புத்தி ஞானம் கணத்திலே கெடுவதாயின், செய்தானை நிழல்போல் தொடரும் வினைத் தொகுதி யாருக்கு உரியதாய்த் தொடரும்? இதனைச் சொல்க; நீ உயிரென்று கூறும் ஞானம் கணபங்கத்த தாய்க் கெடும் தன்மையால் வினைப்பயன் நுகர்தல் அதற்கு இல்லையாம். (எ-று) 33

## இதுவும் அது

93. முற்கணத் திறக்கும் ஞானம்
முயன்றுறு கரும நாற்றம்
பிற்கணத் தடையும் ஞானம்
பற்றுறும்; "பிரச மென்பூ
நற்கனிக் கந்தந் தம்பால்
நணுகிய பொருளிற் பற்றி
நிற்குமத் தன்மை போல
என்றியேல் நிகழ்ந்தக் கேண்மோ.

இ-ள்: முதல் கணத்திலே கெடுகின்ற ஞானமானது முயன்று செய்யும் கன்ம வாசனை, பின் கணத்து அடையும் ஞானத்தைப் பற்றும்; என்போலெனில்? "தேனையுடைய மென் பூவின் மணமும் நல்ல கனியினுடைய மணமும் தம்மிடத்தே நண்ணிய பொருளிற்பற்றி நிற்கின்ற தன்மைபோல" என்று நீ கூறின், அதற்குப் பதிலை யாம் கூற நீ கேட்பாயாக. (எ-று) 34

## இதுவும் அது

94. அரியவா தனையின் றன்மை
அவிச்சின்ன மோதான்? பின்ன
உருவுடை யதுவோ? பின்ன
உருவுடைத் தென்பை யாயின்
மருவுமுன் கணத்துட் பட்டு
மாயுமற் றென்னின் ஒன்றாய்த்
திரமொடு பலஞா னங்கள்
சேர்ந்தது தானன் மாவாம்.

இ-ள்: மேலே கூறிய கன்ம வாசனையின் தன்மை அவிச்சின்னமோ (விட்டு நீங்காததோ)? அல்லது பின்ன உருவை உடைத்தோ என்று வினவினாற்கு, அக் கன்மவாசனை பின்ன ரூபத்தை உடையது என்று நீ கூறின், அக் கன்மவாசனை முற்கணத்துள் தோன்றியதால் அது கெட்டுப்போம்; அங்ஙன மன்று அது அவிச்சின்னமே என்று நீ கூறின் முன்னும் பின்னு மாய்த் தோன்றிய பல ஞானங்கள் சேர்ந்ததே ஆன்மா என்று கூறப்படும். (எ-று) 35

## சயினன்

95. மிக்கபுன் சயினன் தள்ள
வியாபியென் பதம்பு ணர்ப்பத்
தக்கதென் றுரைப்பர் நல்லோர்;
தன்வினை நுகர்வால் ஆன்மா

மெய்க்கணில் பரிமி தத்தன்
வியாபக னலன்மெய்ம் மட்டே
பக்குறும் உணர்வு காணப்
படுதலால் என்ப னன்றே

*இ-ள்:* நல்லோர் பராக்கிய சூத்திரத்தில், **சைனன்** உயிரைப்பற்றிக் கூறும் கொள்கையை மறுத்தற்காக 'வியாபி' என்கின்ற சொல் சேர்க்கப்பட்டுள்ளது என்பர். **சைனன் ஆன்மா** தன்வினை நுகர்வொடு கூடித் தேகபரிமாணமுடையவன்; உடம்பளவில் உணரும் உணர்வு காணப்படுதலால் அவன் வியாபகனலன் என்று கூறுவான். (எ-று) 36

## குறிப்பு

"ஆர்ஹதர் ஆத்மாவைத் தேகபரிமாண மென்றார்கள். அது சுருதி விரோதம். அநேக தேகங்களைப் பரிக்ரகிக்கிற யோகிகள் ஸ்வரூபத்திற்குச் சைதில்யம் வரும்" என்பர். (அஷ்டாதசரகஸ்யம்) **பிள்ளைலோகாச்சாரியார்.**

## சைன மத மறுப்பு.

96. புரையுடல் அவதி யாகும்
போகம்நாம் காண்கை யாலே
பரவுயிர் தனக்குத் தேக
பரிமாணத் துவங்கூ டாதால்
உரைசெயும் உடம்பு என்றி
ஒழிந்ததும் ஆன்மா நின்று
திரிவற உணர்ந்து கொள்ளும்
செய்கையால் என்பர் நல்லோர்.

*இ-ள்:* உயிர் தன் உடம்பளவான போகத்தை நுகர்வதை நாம் காண்டலால், அதனைக் கொண்டு மட்டும் அதற்குத் தேக பரிமாணத்துவம் கூறிவிடக்கூடாது; ஏன் எனில்? ஆன்மாவானது உடம்பளவில் உணர்தல் மட்டுமன்றி எஞ்சியவற்றையும் உணர்ந்துகொள்ளும் செயலையுடையதாகையால் என்பர் அறிஞர். (எ-று) 37

## குறிப்பு

"இனி ஆருகதர் இவ்வாறு கொள்ளாது உடம்பின்கணன்றி ஏனையிடத்து அறிவு நிகழாமையின், ஆன்மா உடம்பளவில் வியாபகமாய் நிற்குமென்றும் அஃது எறும்புடலிற் புகுதுங்கால் அவ்வளவிற் சிறுத்தும், யானையுடலிற் புகுதுங்கால் அவ்வளவிற் பெருத்தும் இங்ஙனம் அவ்வுடம்பளவிற் செழுகம் போலச் சுருங்கியும் விரிந்தும் வருமியல்பிற்றென்றும் கூறுவர். ஆன்மா அவ்வுடம்பளவிற் சிறுத்தும் பெருத்தும் வருவதாயின், அறிவும் அவ்வாறே சிறுத்தும் பெருத்தும் நிகழ்தல் வேண்டும்; அங்ஙனமின்றிப் பேருடம்பிற் சிற்றறிவும் சிற்றுடம்பிற் பேரறிவும் நிகழக்காண்டலானும், சுருங்கியும் விரிந்தும் வருமாயின் அவயவமுடைத்தெனப்பட்டு அழிவெய்து மாகலானும், உடம்பு மாத்திரையினன்றிச் சேய்மைக்கண்ணே துருவமண்டலத்தை அறிதலானும் அது பொருந்தாமை யறிக" (சூ – 4; அதி – 2) என்று கூறும் சிவஞானபாடியம்.

## இதுவும் அது

97\. அட்லுயிர் அமூர்த்தம் ஆகும்
தன்மையால், "ஆகா யம்போல்"
கெடலறும் வியாபி யாகும்;
கிளக்குமிம் முறைமை யாலே
உடலுயிர்த் தரும பூத
உணர்வுநல் வியாபி யாகும்
விடையவுன் முகமாய் என்றும்
விளம்புவர் களங்க மில்லோர்.

இ–ள்: (சீவான்மா ஒவ்வொன்றும் வியாபகமாயின் வியாபகமான பல ஆன்மாக்களும் ஓரிடத்து எங்ஙனமிருத்தல் கூடும்? ஒரு கையின் சையோகமுள்ளவிடத்து மற்றொருகையின் சையோகமின்மையின் எனின், சமான தேசத்திருத்தல் மூர்த்தத் திரவியங்களுக்கு விரோதமாமன்றி அமூர்த்தத் திரவியங்களுக்கு விரோதமில்லையாம்.) உயிர் அமூர்த்தத் திரவியம் ஆகும் தன்மையால், ஆகாயம்போல் வியாபியாகும். சொல்லப்படும் இம் முறைமையால் உடலிலே வாழும் உயிரின் தருமபூதமாயுள்ள உணர்வு நல்ல வியாபியாகும்; தனக்கு எதிர்ப்படும் விடையத்தில் ஒருமுகப்

பட்டுப் பதிந்து தொழிற்படுங் காலத்திலே என்று அறிஞர் கூறுவர். (எ-று) 38

98. உயிர்பல வாகி யாண்டும்
ஒன்றுமேல் தன்னு டம்பில்
பயில்தரும் அந்த ணுதி
பலர்க்கும்நா யாதி கட்கும்
செயலுறு தன்வி னைப்பால்
சேர்ந்திட வேண்டு மென்னுர்
முயலுறு வினைகள் தன்கண்
முற்றவும் வேண்டு மென்னில்.

*இ-ள்: உயிர் பலவாகி வியாபகப் பொருளாதலின் எங்கும் சேர்ந்திருக்குமே யாகில், உயிரோடு கூடிய அந்தணன் முதலான பலர்க்கும், நாய் முதலான பலவற்றிற்கும் செயல்கள் கலந்து விடாமல் தொடங்கிய அவரவர் வினை, அவையவை வினை தம்மிடத்தேயே முடிய வேண்டுமே என்றுல். (எ-று)* 39

99. மன்னுயிர் அமூர்த்த மாகும்
ஆற்றினுல் புணர்ப்பே யில்லை
என்னினும், எவனுக் கெம்மெய்
எய்துறும் அவனுக் கம்மெய்
தன்னிடை உணர்வுண் டேனோர்
தமக்கில்லை; அதனுல், யாண்டும்
துன்னினும் உயிர்க்குக் கன்மம்
துய்த்தல்மெய் விசிட்ட மாகும்.

*இ-ள்: நிலைபெற்ற உயிர் அமூர்த்தத்* (வடிவமில்லாத) *திரவியமாதலால்* (*ஆகாயமும், காலமும் வியாபகமாயிருந்தும் அமூர்த்தமாதலால் தமக்குள் புணர்ப்பில்லாமலிருத்தல்போல*) *தமக்குள் புணர்ப்பே இல்லை என்றுலும், எவ்வுயிர் எந்த உடம்பை எய்துறும் அவ்வுயிர்க்கு அவ்வுடம்புபற்றிய இடத்தே உணர்வு உண்டு, ஏனைய உயிர்க்கு அவ்வுணர்வில்லை, அதனுல் உயிர்*

எங்கும் வியாபித்திருப்பினும் கன்மத்தைத் துய்த்தல் தம்தம் உடம்புடன் கூடியதாகும். (எ-று) 40

## வேதாந்தி

100\. போற்றுறு விபின்னன் என்னும்
புகற்சிவே தாந்தி தன்னை
மாற்றுற வந்த தாகும்
மற்றவன் பக்கம் ஓதில்
சாற்றுறும் ஆன்மா ஒன்றே
"சந்திரன் குடநீர் தோறும்
தோற்றுறு மாபோல்" மெய்யால்
தோற்றுறும் பலபோல் என்பான்.

*இ-ள்: பராக்கிய சூத்திரத்தில் உயிரின் பெயராகக் கூறப்பட்ட சொற்களுள் விபின்னன் என்னும் சொல் வேதாந்தி கூறும் ஆன்ம இலக்கணத்தை மறுத்தற்கு வந்த சொல்லாகும். வேதாந்தியின் கொள்கையைக் கூறினல், சொல்லப்பட்ட ஆன்மா ஒன்றேயாகும். "சந்திரன் ஒருவனயிருந்து குடத்திலே உள்ள நீர்தொறும் பலவாய்த் தோன்றுவது போல" ஒன்ருகிய ஆன்மா பலவகை உடம்பின் உபாதியால் பல ஆன்மாப்போலக் காணப்படுவன் (எ-று)* 41

101\. அறிவுறு வுடைமை தன்ஞல்
அகண்டமாம் ஆன்மா விற்கிங்
கிறலறு மொருமை கூடும்
ஏககா லத்தும் வேருய்ப்
பிறிவுறு நுகர்ச்சி கொண்டு
பேதமும் கூடு மென்று
நறுமல ரிதழி வேணி
நம்பனூல் கண்டோர் சொல்வர்.

*இ-ள்: சிவாகமப் பொருளை உணர்ந்தவர் ஞான சத்தியை உடைமையால் உபாதியற்ற ஆன்மாவிற்கு ஒன்ருந் தன்மை*

கூடும்; ஒரே காலத்தில் வேருயிருந்து வெவ்வேறு நுகர்ச்சியை நுகர்வது கொண்டு பேதமும் கூடும் என்று கூறுவர். (எ-று) 42

102. கடமுத லாம வற்ருேர்
ககனமே தோன்று தற்போல்
உடலிடை ஒருபே ரான்மா
உறுமெனில், பலக டத்துள்
அடைவிசும் பொருப டித்தாம்
அறிவுமற் றதுபோ லன்று
விடமதிட் டாந்தம் நீதான்
விளம்பிய தாத லாலே.

இ-ள்: "கடம் முதலான கண்டப் பொருள்களுள் ஒன்ருகிய ஆகாயமே தோன்றுதல் போல" பல்வேறு வகையான உடலின் கண்ணே ஒன்ருகிய பெரிய ஆன்மாவே உறும் என்று வேதாந்தியாகிய நீ கூறினல், நீ பொருந்தாத திருஷ்டாந்தத்தைக் கூறினய்; பல கடத்துள் அடைவிசும்பு ஒரு தன்மையாகவே யிருக்கும்; உடலிடை ஒரு பேரான்மாவின் அறிவு அதுபோலில்லை. (எ-று) 43

சீவாத்மா பின்னம் என்றது.

103. ஒருவன்ஊண் விருப்பம் எய்த
ஒருவற்கு நடைவி ருப்பம்
மருவுறும்; ஆத லாலே,
மன்னுயிர் பின்ன மாகும்
அருவுயி ரெத்தி றத்தும்
அபின்னமே என்னில், யார்க்கும்
ஒருபொழு திச்சை யொன்றே
உதித்திடல் வேண்டு மன்றே.

இ-ள்: ஒரே காலத்தில் ஒருவன் உண்ண விருப்பம் எய்த, அதே காலத்தில் மற்ருெருவற்கு நடத்தலில் விருப்பம் பொருந்தும்; ஆதலால் உயிர் ஒன்றன்று; வெவ்வேறே ஆகும். அருவாகிய

உயிர் எத்திறத்தும் அபின்னமே என்னில், எல்லா உயிர்கட்கும் ஒருகாலத்தில் இச்சை முதலானவை ஒன்றாகவே தோன்ற வேண்டும். (எ-று) 44

104. முற்றுமோர் கடத்துள் வான்தூண்
முதலிய மருவப் பெற்றால்
மற்றைய கடாகா யங்கள்
மருவுறா அவைக ளோடே
அற்றுடல் உபாதி யாலின்
பாதியால் பின்ன மேனும்
சொற்றிடில் ஏகம் ஆன்மா
என்பதே துணிவிங் கென்னில்.

இ-ள்: ஓர் கட நீரில் ஆகாயமும் தூண் முதலிய வெவ்வேறு பொருளும் காணப்பெற்றால், மற்றைய கடத்தின் ஆகாயங்கள் மேற்குறிப்பிட்ட கட நீர் போல தூண் முதலிய பொருள்களைக் கூடியிரா; அதைப்போல ஆன்மா உடல் உபாதியால் பின்னத் தைப் போலக் காணப்பட்டாலும் ஆராய்ந்து கூறில் எல்லாக் கடத்திலும் உள்ள ஆகாயம் ஒன்றாயிருத்தலைப் போல எல்லா உடம்பிலுள்ள ஆன்மாக்களெல்லாம் ஒன்றென்பதே துணிவாம் என்று கூறில்; (எ-று) 45

105. உடம்பினில் உண்ணும் போகம்
உயிர்வினை யால்வந் தெய்தும்
அடைந்துள கருமம் ஆதி
அவித்தையால் வந்த தாகும்
மிடைந்துள அவித்தை தன்னை
வீப்பது வித்தை யென்ப
தொடங்குமிவ் விபாகத் தாகித்
துவிதம்; அத் துவித மின்றாம்.

இ-ள்: உயிர், உடம்பினிலிருந்து உண்ணும் போக நுகர்ச்சி அதன் வினை காரணமாக வந்து கூடும்; அவ்வினையோ முதலாகிய

அவித்தையால் வந்ததாகும்; அந்த அவித்தையைக் கெடுப்பது வித்தையாகும். எனவே, அவித்தையோடு கூடியது உயிர் என்று கருதப்பட்டு, அவித்தையில்லாத பிரமத்தில் வேறுபாட்டை உடையதாகி, உயிர் துவிதமாகும். அத்துவிதத்தை உடையதன்று. (எ–று) 46

## குறிப்பு

"ஒன்றென்றது ஒன்றேகாண் ஒன்றே பதி; பசுவாம் ஒன்றென்ற நீ பாசத் தோடுளே காண்" என்பது (சூ-2–அதி-1) **சிவஞானபோதம்.**

**106. உறுந்தரு மாதி கன்மத்**
**துண்ணுறு சுகாதி பேதம்**
**பெறுந்தகை மையினால் ஆன்ம**
**பேதமும் சித்தி ஆயிற்(று);**
**இறந்திடும் அவித்தை என்ப**
**திலையெலாம் வித்தை தானே**
**அறிந்திடு பரமான் மாவே**
**அனைவரும் என்பை யாயின்.**

இ-ள்: பரமாத்மாவாகிய பிரமம், நல்வினை முதலிய கன்மங்களால் நுகரும் இன்பம் முதலியவற்றை உடையதன்று; உயிர், அவித்தையால் வரும் நல்வினை முதலிய கன்மங்களால் நுகரும் இன்பம் முதலிய வேறுபாட்டை உடையது. இக்காரணத்தால் பிரமம் வேறு, உயிர் வேறு என்று கொள்ளும் பேதமும் சித்தியாயிற்று. எனில், வேதாந்தியாகிய நீ அவித்தை என்பதில்லை; எல்லாம் வித்தையே; எல்லா உடம்பிலுள்ள உயிரும் பரமான்மாவே என்று கூறின். (எ–று) 47

**107. சொல்லிய அவித்தை தன்னைத்**
**தொலைத்திட நீசெய் கின்ற**
**பல்லறங் களும்வீ ணுகும்**
**பயன்படும் என்பை யாயின்**

வெல்லரும் அவித்தை யாப்பு
　　வித்தையால் அவிழ்க்கப் பட்டு
நல்லவ ளுகு மென்று
　　நாடிநின் மனத்திற் கொள்ளே.

*இ-ள்: அவித்தை என்பதில்லை என்று நீ கூறின், அவித்தையைத் தொலைப்பதற்காக நீ செய்கின்ற பலவகை அறச்செயல்களும் வீண் செயலாகும்; பயன்படும் என்று நீ கூறுவையாயின், அவித்தை உண்டெனக் கருதப்பட்டு, அவ்வவித்தையால் கட்டப் பட்ட கட்டு வித்தையால் அவிழ்க்கப்பட்டு, உயிர் தூய்மையாகும் என்று ஆராய்ந்து மனத்திற் கொள்வாயாக. (எ-று)* 48

108. உன்னுடைப் பிரமம் யாக்கை
　　உபாதியை அடைந்த தன்மை
தன்னுடைத் தரும மேயோ?
　　தனதுபே ராடல் தானே?
என்னுரைக் குதி? நீ தானிவ்
　　விருதிறத் தானும் யாண்டும்
உன்னுதற் கரிய முத்தி
　　உறுதலோ இல்லை யன்றே.

*இ-ள்: ' நீ கூறும் பிரமம் உடம்பாகிய உபாதியை அடைந்த தன்மை அதன் இயல்போ? அல்லது அதனது பெரிய திருவிளை யாடலோ? இந்த இரண்டில் எதனைக் கூறுவாய்? யாக்கையை அடைந்தது தன் இயல்பெனின், அவ்வியல்பு எப்பொழுதும் உள்ள தென்று கருதப்படும்; திருவிளையாடலெனின், அத்திருவிளையாடல் எப்பொழுதும் நிகழ்வதென்று கருதப்படும். இவ்விரு கூற்றாலும் அப்பிரமம் முத்தியடைவதென்பதே இல்லையாகும். இதனால், உயிர் விபின்னன் என்பதே ஏற்புடைத்தாம். (எ-று)* 49

சாங்கியன்

109. சாங்கிய மதம்வி லக்கச்
　　சமலனென் பதம்பு ணர்ந்த(து)
ஆங்கது புகலில், "ஆன்மா
　　அசுத்தனே அல்லன்; என்றும்

ஓங்கிய சுத்தன்; தன்பால்
உபலஞ்செம் பரத்தஞ் சார்ந்(து)
ஆங்குறு பெத்த ராக
ஆகும்" என் றறையு மன்றே.

உபலம் – படிகக் கல்.

இ–ள்: ஆணவமலம் என்ப தொன்றில்லை என்னும் சாங்கிய சமயத்தானின் கொள்கையை மறுக்கவே பராக்கிய சூத்திரம் ஆன்மாவிற்குச் சமலன் என்ற பெயரை வைத்தது. அச் சாங்கியன் கொள்கையைக் கூறின், ஆன்மா அசுத்தனே அல்லன்; என்றும் உயர்ந்த சுத்தனுவான்; அங்ஙனமாயின் ஆன்மா பந்தத்தில் உழலுதல் எதனுலெனின், படிகம் செம்பரத்தம் பூவைச் சார்ந்து செம்மையாக விளங்கிறைற்போல, ஆன்மாவும் தன்னைச் சார்ந்த பிரகிருதி முதலானவற்ருல் பந்தப்பட்டு பெத்தனுய் நிற்பான். (எ–று) 50

110. நீடுயிர் தனக்குச் சுத்தி
நிமித்தம்வா ராது வென்ருல்
கூடிய உயிர்க்கச் சுத்தி
கூடுருது; ஊரி லாற்கு
நாடுள தோதான் என்ன
நவின்றிடு நியாயத் தாலே
வீடுறு மார்க்க மென்ப
திலையென்பர் விளக்கம் மிக்கார்.

இ–ள்: நிலைபெற்ற உயிர் தனக்குச் சுத்திக்கு நிமித்தம் இல்லையெனின் அதற்கு அச் சுத்தி பொருந்தாது; சுத்தி பொருந்தாதாயின், ஊரிலாற்கு நாடுளதோ தான் என்று கூறிடும் நியாயத்தாலே வீடுபேற்றினை அடையும் வழி இல்லை என்று கூறுவர் விளக்கம் மிக்கவர். (எ–று) 51

111. உயிர்மலத் தடைய தாகும்
பேரறி வுடைய தாயும்
பயில்செய்சிற் றறிவே காணப்
படுகையால் அனைய ஆன்மா

அயில்செய்சிற் றறிஞன் மாசன்
அலனெனில் போக சத்தி
வியல்நிலத் தெவ்வா ருகும்
வியம்புதி விளங்கு மாறே.

இ-ள்: உயிர் பேரறிவை உடையதாயும் அதனிடம் சிற்றறிவே காணப்படுகையால் அது ஆணவமலத்தடையை உடையதாகும். அத்தகைய ஆன்மா மாசுடையவன் (சமலன்) சிற்றறிஞன் அல்லா விடில் (முற்றறிஞனும் மலமில்லாதவனுமாயிருந்தால்) அகன்ற இந்த நிலவுலகத்திலே உலகபோகங்களில் பற்றுக்கொண்டு துய்க்கும் போகசத்தி எவ்வாறு தோன்றுமென்று சாங்கியனே விளங்கக் கூறுவாயாக. (எ-று) 52

## குறிப்பு

ஆணவமலம் ஆன்மாவிற்குப் போகசத்தியை உண்டாக்கும் என்பதை,

"ஒன்றதாய் அநேக சத்தி உடையதாய் உடனா யாதி,
அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவொடு தொழிலை ஆர்த்து
நின்றுபோத் திருவத்தை நிகழ்த்திச்செம் பினிற்க ளிம்பேய்ந்,
தென்றுமஞ் ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே"

என்னும் சித்தியாரால் உணரலாம்.

112. நிருமலன் றனக்குப் போக
சத்தியென் னெறியி னூலும்
வருமெனில் முத்தர் கண்ணும்
மற்றது வருதல் வேண்டும்
பரமநன் முத்தர் தாமும்
பரசிவன் ருனும் என்றும்
உரமுறு போக சத்த
ரலரென உரைக்கும் நூலே.

இ-ள்: மலத்தோடு கூடாத சுத்தனாகிய உயிர்க்கு உலக போகங்களை நுகரும் சத்தி எந்தவழியிலாவது வருமென்றால், முத்தி யடைந்த முத்தர்கண்ணும் போகசத்தி வருதல் வேண்டும்; ஆனால்,

சிவாகமங்கள் மேலான நல்ல முத்தரும் பரமசிவனும் போகசத்த ரலர் என்று கூறும். (எ—று) 63

113. ஆதலின் அராக கன்ம
மாமவற் றயலாம் பாசம்
ஓதரு மமூர்த்த மாகும்
உயிரினை ஆவ ரிக்கும்
"போதரும் ஆல சத்தி
போல" அப் பரிசால் கோடின்
மூதுணர் வுறுமான் மாவை
மொழிகுவர் சமல னென்றே.

இ—ள் : ஆகையால், ராகம் முதலிய மாயாமலம், கன்மமலம் ஆகும் அவற்றிற்கு வேறாகிய ஆணவமலமானது அருவாகிய உயிரை 'நஞ்சின் சத்திபோல'ப் பற்றிக்கொள்ளும். அத்தன்மையைக் கருதிக்கொண்டால், முதிய அறிவுடைய ஆன்மாவைச் சமலன் என்று கூறுவர். (எ—று) 64

## குறிப்பு

மேற்பாட்டுக்களால் கூறிய சாங்கிய மதக் கருத்தை நோக்கினல், ஆணவமலம் இல்லை என்று கூறுவது சாங்கிய மதக் கருத்தென்பது புலனாகும். **உமாபதி சிவம்** சங்கற்ப நிராகரணத்துள் மாயாவாதி முதலான பல சமயிகளின் கொள்கைகளைக் கூறி, அவற்றிற்கு மறுப்புக் கூறியுள்ளனர். அவற்றுள் ஒன்று ஐக்கியவாதி சங்கற்ப நிராகரணமாகும். ஐக்கியவாதி கொள்கையாக

"அரியோர்க் துணராப் பெரியோன் உரைத்த
பதிபசு பாசம் விதிமுறை கிளக்கில்
ஈசன் ஏகன் எண்ணிலி பசுக்கள்
பாசம் இருவகைப் பரிசின துலகத்
தாயவன் உயிர்க்கு மாயையின் அருளால்
இருவினைத் தகைமையின் உருவினைத் தருமால்
கருமுகில் அடர இரிதரு கதிர்போன்று
அறிவாம் உயிரிற் பிறியா தேயும்"

என்று மாயையும் கன்மமுமே கூறப்பட்டுள்ளன. ஆணவமலம் கூறப்படவில்லை. இந்த ஐக்கியவாதி யார் என்று வினவின், ஆணவமலம் இல்லை

என்று கொள்ளும் சாங்கியனைப் பாசுபதனை இருக்கலாம். வீரசைவ சித்தாந்த நூலிற் சிறிதும் பயிற்சியில்லாத சிலர் வீரசைவ சமயம் ஐக்கிய வாத சமயமே என்று கூறியும் எழுதியும் வருகின்றனர். இதற்கு மாறாக **வீராகமம்** என்னும் வீரசைவ நூல் ஆணவமலம் இல்லை என்று கூறும் கொள்கையைக் கண்டித்து,

"மாயையும் வினையு மன்றி மலமிலை யென்னின் மாயை
காயமாய் அறிவு நல்கும் கான்மியம் இன்ப துன்பம்
ஆயுயிர்க் கருத்தும் மூல ஆணவம் இயற்கை யாகி
ஓய்வுறு மாயை கன்மம் உதித்தொடுங் கிடம தாமே." 91

என்று கூறுவதைக் காண்க.

## நியாயன்

114. சூத்திர மதன்கண் நின்ற
அசடனென் கின்ற சொற்றான்
பார்த்திடின் ஞானம் தோன்றப்
படுமிடம் ஆன்மா என்ன
ஓர்த்துள நியாயன் தன்மை
ஒழித்திடப் போந்த தாகும்
கூர்த்துரை செயும வன்றன்
கூற்றுமேற் கூற லுற்றாம்.

இ-ள்: பராக்கிய சூத்திரத்தில் ஆறுவதாய் நின்ற அசடன் என்கின்ற சொல்லானது, ஆராய்ந்து பார்த்தால் மனத்தின் சேர்க்கையால் அறிவு தோன்றப்படுமிடம் ஆன்மா என்று கருதிக் கொண்ட நியாயனுடைய கொள்கையை மறுத்திடப் போந்த தாகும். தருக்கித்து நுண்ணிதாகக் கூறும் அவன்றன் கூற்றினை மேலே கூறுவாம். (எ-று) 55

115. ஆருயிர் மனப்பு ணர்ப்பால்
ஆகிய உணர்வு டைத்துச்
சேரறி வெனுங்கு ணத்தால்
சேதன மென்ப தன்று

"பாரிய சிலைபோல்" நிற்கும்
முத்தியின் பாலும் ஒன்றற்(கு)
ஒருடல் முதல ஏது
ஒருவன்செய் தமையால் என்பான்.

இ-ள்: ஒருவனாகிய பரமான்மா பலவாகிய உயிர்கட்கு ஒவ்வொரு உடம்பைப் படைத்தமையானும், ஒவ்வொரு உயிர்க்கு ஒவ்வொரு மனத்தைக் கூட்டியமையானும் அரிய உயிர் உணர்வைப் பெற்றுள்ளது. அது மனத்தால் உண்டாகும் அறிவைப் பெற்றிடும் தன்மையால் சேதனம் என்று கூறப்படுவதன்று. அது முத்தியிலும் பெரிய கல்லைப்போல உணர்ச்சியற்றிருக்கும் (எ-று) 56

குறிப்பு

நியாயனுடைய கொள்கையை "ஆன்மா பரமான்மா, சீவான்மா என இருவகைப்படும். பரமான்மா முற்றுணர்வுடையவன்; எல்லாம் வல்லவன்; அவன் இச்சை வயத்தானே உலகம் தோன்றி ஒடுங்கும். சீவான்மாக்களுக்கு மனத்தொடு கூடாதவழி அறிவில்லை; ...... அறிவின்றிப் பாடாணம்போற் கிடப்பதே முத்தி என்பதாம்" என்று (அவையடக்கம்) சிவஞானபாடியம் கூறும்.

116. அறிதொழி லுருவ மாஞ்சை
தன்னிய ஆன்மா வின்கண்
பிறழ்வுற உளதாம் என்றும்
பிறங்கிய முத்தி யின்பால்
நிறைவுற எங்கும் ஆகி
நிற்கையாம் கேட்கை யாலென்
றெறிமழு மலர்க்கை முக்கண்
இறையரு ணூலி யம்பும்.

இ-ள்: சிவாகமங்கள், ஆன்மா முத்தியின்பால் வியாபக உணர்வுடன் நிற்கும் முறைமையைக் கேட்கையால், பெத்த காலத்திலும் அறிதொழில் வடிவான ஞானம் ஆன்மாவினிடத்தே பிறழ்ச்சியுற உளதாம் என்று கூறும். (எ-று) 57

## குறிப்பு

நியாயன், ஆன்மா அறிவு தோன்றுதற்கு இடமாயுள்ளது. அது மனத்தொடு கூடினல் அறிவுபெறும்; கூடாதாயின் அறிவினைப் பெருது. முத்தியிலும் அறிவிழந்து கல்போற் கிடக்கும் என்ருன். சிவாகமங்கள் ஆன்மா முத்தியில் வியாபக உணர்வுடனிருக்கும்; பெத்தத்தில் அறிவு பிறழ்ச்சியுற உளதாம் என்று கூறும் என்பது பாட்டின் கருத்தாம்.

117. தருமிதன் வியாத்தி காறும்
தருமமும் வியாத்தி எய்தும்
"உரவிய படத்தின் வெண்மை
ஒத்(து)"உயிர் தனையும் என்றும்
விரவுஞா துருத்து வந்தான்
வியாபித்து நிற்கும் என்ரு
அரவணி கடவுள் நூல்கற்
றறைந்தவர் அறைவ ரன்றே.

இ-ள்: சிவாகமங்களைக் கற்றவர், ஒரு ஆடை எவ்வளவு அகலமும் நீளமும் உள்ளதோ அதுவரை அவ்வாடையின் வெண்மை நிறமும் பரவியிருத்தல்போலத், தருமிதன் வியாப்திவரை தருமமும் வியாபித்திருக்கும் என்னும் பிரமாணப்படி, உயிராகிய தருமிதன் வியாப்திவரை அதன் தருமமாகிய ஞாதிருத்வம் (அறியும் தன்மை) வியாபித்து நிற்கும் என்று கூறுவர். (எ-று) 58

118. நித்தனெண் சத்தி போல
நிறைந்துநித் தியமே யாகிக்
கத்துருச் சத்தி ஆவி
கசிவறப் புணர்ந்த தேனும்
மைத்தனி மலம லர்ப்பு
மருவலால் உலகத் தின்கண்
அத்தன தருளை யன்றி
அதுவிளங் குருது மன்னே.

இ-ள்: அழிவற்ற பரமசிவனது சிற்சத்திபோல, உயிரும், நிறைந்து நித்தியமே யாகும் கத்துருச் சத்தியைக் குறைவறக்

கூடியிருப்பினும், ஆணவமல மலர்ச்சியை அது கூடியிருத்தலால், பெத்த நிலையில் முதல்வனுடைய திருவருள் ஞானத்தாலன்றி, அக்கத்துருச் சத்தி விளங்காது. (எ-று) 59

குறிப்பு

கத்துருச்சத்தி - அறிதற்கு முதலாயிருக்கும் ஆன்ம சிற்சத்தி.

அத்தனது அருள் அறிவிப்பது.

119. உரியநல் லாசான் தன்முன்
உறங்குமா ணுக்கன் தன்னை
முரிவிலொண் கோல்கைக் கொண்டு
முறையினின் றுணர்த்து மாபோல்
திரிவிலொண் சுழுத்தி மேய
சீவனை— அனாதி முத்தன்
அரியதன் சத்தி தன்னால்
அறிவுற அறிவிப் பானால்.

இ-ள்: அறிவுறுத்துதற்குரிய நல்லாசிரியன் தன்முன் உறங்கும் மாணுக்கனைப் பிரம்பாகிய கோலைக் கைக்கண் கொண்டு முறையில் நின்று தட்டி துயிலெழச் செய்தல்போல, அநாதி முத்தனாகிய பரமசிவன் சுழுத்தி அவத்தை மேவிய சீவனைத் தனது சத்தியால் அறிவுற அறிவிப்பான். (எ-று) 60

குறிப்பு

இப்பாட்டின் கருத்தினை,

"குரவன் முன்றுயில் கொள்ளுமா ணுக்கனை,
உரிய கோலின் உணர்த்துவன் ஈசனும்
துரிய போகத் துயில்பெறு வான்றனை
அரிய சத்தியி னாலறி விப்பனால்." – 69

என்னும் சதமணிமாலைப் பாட்டினால் அறியலாம்.

120. உண்ணுநன் மருந்து தன்னல்
ஒன்றெரு வலியி லாற்கும்
பண்ணுறும் வலிசார்ந் தாங்குப்
பரன்பெருஞ் சத்தி யோகத்(து)
எண்ணரும் வலிவந் தெய்தும்
இவ்வுயிர் தனக்கிவ் வாற்ருன்
நண்ணுறும் அசடன் என்னும்
நற்பதம் என்று கொள்ளே.

இ-ள்: 'உண்ணுகின்ற நல்ல மருந்தால் வலிமையில்லாதவனுக்கும் வலிமை வந்தாற்போல' இந்த உயிர்க்குப் பரமசிவனது பெரிய சத்தியின் கூட்டுறவால் எண்ணரும் வலிமை வந்து எய்தும்; இதனுல் ஆன்மாவிற்கு அசடன் என்னும் சொல் பொருந்துறும். (எ—று) 61

## குறிப்பு

இப்பாட்டின் கருத்தினை

"மருந்தி னுற்றலின் மிக்க வலிவரும்
அரந்தை நோயுற் றவர்க்கது போலிறை,
பொருந்து சத்தி பொருந்தில் அளவிலா
திருந்த வாற்றல் இசையு முயிர்க்கரோ" 70

என்னும் **சதமணிமாலைப்** பாடலால் உணரலாம்.

உயிர் தன்வினைப்பயன் நுகர்வதன்று என்பான்.

121. அணைந்ததன் வினைப்பே றுண்ப
தன்றுயிர் என்பான் ஆற்றல்
தணந்திட வந்த தாகும்
தன்வினைப் பேறுண் பானென்
றிணங்கிய பதமென் ருேர்க
ஈண்டவன் கூறும் மாற்றம்
பிணங்கிலி இறைவன் நூலுள்
பெற்றவா றியம்ப லுற்ரும்.

இ-ள்: உயிர், தொடர்ந்த தனது வினைப்பயன் உண்பதன்று என்பானது கொள்கை நீங்க வந்ததாகும் பராக்கிய சூத்திரத்திலே தன்வினைப்பேறு உண்பான் (ஸ்வகிருதபுக்) என்ற சொல் என்று கருதுக. அவன் உரைக்கும் உரையைச் சிவாகமத்தில் பெற்றவாறு கூறலுற்றும். (எ-று) 62

122. ஆகிய உடம்பி ஞனே
 ஆவது கருமம் என்ப
 வேர்கெழும் அவ்வு டம்பிற்(கு)
 ஏதுவும் வினை அவ் வாற்றல்
 ஆகிய ஒன்றற் கொன்றிங்(கு)
 அசங்கதம் ஆத லாலே
 நீபகர் கரும மின்றும்
 உண்டெனின் நிகழ்த்தக் கேண்மோ.

இ-ள்: உடம்பினுல் வினை ஈட்டப்படும்; மூலமாகிய அந்த உடம்பிற்குக் காரணமும் வினையாகிறது; இக்காரணத்தால் ஒன்றற்கொன்று காரணமென்பது கூற முடியாததாயுள்ளது; அதனுலே நீ கூறும் வினை இல்லையாம்; உண்டெனின் கூறக் கேட்பாயாக. (எ-று) 63

123. கணிகமாய்ச் சடமே யாங்கா
 லாந்தரங் களிற்ப லன்றுன்
 அணுகுற உதவ வல்ல
 தன்றுகா ணுத தாலே
 நணுகுற வினைப்பே றுண்ப
 தன்றுயிர் நவிலி னென்று
 துணிவொடும் உரைப்பன் அன்னுன்
 சொல்லைநாம் வெல்லச் சொல்வாம்.

இ-ள்: கணம் முதலிய அவயவப் பகுப் புடையவாய்ச் சடமாயுள்ள கால வேறுபாடுகளைப்போல, வினை என்பது காணுத காரணத்தால் இன்ப துன்பமாகிய பயனை உதவவல்ல தன்று;

நவிலில் உயிர் தன் வினைப்பயனைத் தான் நுகர்வதன்று என்று அவன் துணிவொடும் உரைப்பன்; அன்னான் சொல்லை நாம் வெல்லச் சொல்வாம். (எ–று) 64

124. உடலிடை அனாதி ஆன்மா
உண்மைபோல் கருமந் தானும்
அடலுயிர் வரவோ டுற்றே
அனாதியாம்; ஆதி யாயின்
படர்வுறும் உலகின் தோற்றம்
பலவற ஒன்றும்; அத்தால்
கொடுவினை அனாதி அன்னான்
குடும்பமும் அதனோர் தன்மை.

இ-ள்: உடம்பின்கண் அனாதியான உயிர் உளதாதல்போல, வினை தானும் உயிர் வரவோடுற்றே அனாதியாம்; வினை ஆதியாயின் உலகின் தோற்றம் பலவகை ஆகாமல் ஒன்றாகும்; அதனால், வினையும் அனாதி, அவன் குடும்பமும் அவ்வினையின் தன்மையாகும். (எ–று) 65

125. ஆதலின் வினைதான் நித்த
அனாதியாய் இடைய றாமல்
போதரும் விஞ்ஞா னாதி
பொருந்தலான் மாய்வு மின்றிச்
சார்தரு கற்ப கோடி
யுகத்தினும் கரந்தி டாது
தீர்தரா ததனால் நித்த
உருவமும் சேர்ந்து நிற்கும்.

இ-ள்: ஆதலால், வினைதான் நித்தமாகிய அனாதியாய், இடையிலே அற்றுப்போகாமல் போதரும் சிறந்த ஞானம் முதலிய வற்றால் அழிதலும் இன்றி, கற்ப கோடி யுக காலத்தினும் மறைந்து தீராததாம்; அதனால் அது நித்தியமானது. (எ–று) 66

126. அனையது வினையான் மாவால்
ஆற்றுறப் படுவ தாகத்
தனதனு கூல மாய
சங்கரன் ஆணை யாலே
உனலரும் யோனி தோறும்
உயிர்க்குண வாகு மென்று
நனையவிழ் கொன்றை வேணி
நம்பனூல் நவிலு மன்றே.

*இ-ள்: சிவாகமங்கள், அத்தகைய வினை, ஆன்மாவால் இயற்றப்படுவதாகி, தனது அனுகூலம் ஆகிய பரமசிவனது ஆணையாகிய சத்தியாலே, பிறவிதோறும் உயிர்க்கு நுகர்வாகும் என்று கூறும்.* (எ-று) 67

127. மருவுகூ டத்த னாதி
மலவலி தொலைத்தற் காக
வருமல மாமா கந்து
கானாகி மாயை தன்னில்
பரமனு லொடுக்கப் பட்டுப்
பகர்பிர வாக னாதி
கருமம துண்ணும் அந்தக்
கண்ணுத லியக்க வான்மர்.

*இ-ள்: அந்தக் கண்ணுதல் இயக்க, ஆன்மர் கருமமது உண்ணும் என்று கூட்டுக. எத்தகைய கருமமது என்னில்? ஆன்மாவின் முதல் மலவலி தொலைத்தற்காக வரும் ஆகந்துக மலமாய்ப், பிரளய காலத்தில் மாயையில் பரமனால் ஒடுக்கப்பட்டுப் பிரவா கானாதியாய் வரும் கருமம் என்க.* (எ-று) 68

மாவிரதம்

128. மாவிர தாதி வாதம்
மாற்றுற வந்த தாகும்
பாவுறு 'கருத்தன்' என்னும்
பதம்; அவர் பக்கம் ஓதில்

ஓவரு ஞான மேயாம்
உயிர் ; வினை முதலன் றுல்தன்
மேவுறு கைகா லாதி
வினைமுத லாகும் என்பர்.

இ-ள்: பராக்கிய சூத்திரத்திலே கருத்தன் என்று கூறப் பட்ட சொல், மாவிரதர், ஆதி என்றதால் காபாலியர் என்னும் இவர்களுடைய சமயக் கொள்கையை மாற்றுற வந்ததாகும். அவர் சமயக் கொள்கையைக் கூறில், உயிர் என்பது காரிய காரணக் கூட்டரவால் நீங்காமல் வரும் ஞானமேயாம்; அது வினை முதலன்று; தன் உடம்பில் மேவும் கை கால் முதலியனவே வினை முதலாகும் என்பர். (எ—று) 69

குறிப்பு

*மாவிரதர் முதலியவர்களைச் சிவசமவாதி என்றும் கூறுவர்,*

129. வினைமுதல் உயிரே; யாக்கை
வெறுஞ்சடம்; ஆத லன்று;
வனமலி பராரைத் திண்காழ்
மரந்தறிப் புழியெ டுக்கும்
நுனிமலி நவியம் போலும்
நுவன்றஅவ் வுடல மென்று
நினைமதி; உயிரைக் கொள்வான்
என்றுநீ நினைந்து கொள்ளே.

இ-ள்: கைகாலாதி வினை முதலல்ல; உயிரே வினை முதல்; கை காலுக்கு முதலான உடம்பு வெறும் சடப்பொருளே; ஆகையி னால் அது வினைமுதலாதலன்று. அவ்வுடம்பு, காட்டிலேயுள்ள பராரைத் திண்காழ் மரத்தினைத் தறிக்குங் காலத்தில் எடுத்த கோடரி போன்றது என்று கருதுவாய்; உயிரைக் கோடரி ஏந்தும் கருத்தன் என்று நீ நினைந்து கொள்வாயாக. (எ—று) 70

## பாசுபதம்

130. நின்றசிற் றறிஞன் என்று
நிகழ்பதம் மாயை, கன்மம்
என்றிவை யால்சஞ் சாரி
எனப்படும்; ஆண வந்தான்
இன்றுயிர் தனக்கென் றோதும்
இரும்பாசு பதாதி மார்க்கம்
அன்றென வந்த தாகும்
அதனையாம் மொழிந்தொ ழிப்பாம்.

*இ-ள்: பராக்கிய சூத்திரத்தில் ஒன்பதாவதாய் நின்ற சிற்றுணர்வினன் என்ற சொல், உயிர்க்கு ஆணவமலம் என்ப தொன்றில்லை; அது மாயா மலத்தாலும் கன்ம மலத்தாலும் இயங்கும் என்று கூறுகின்ற பாசுபதம் முதலான சமயிகளின் கொள்கையை மறுக்க வந்ததாகும்; அதனை யாம் மறுப்புக் கூறி விலக்குவாம். (எ-று)* 71

131 சித்துறு வியத்தி அங்கெத்
தனையுறும் சிறந்த ஞானம்
அத்தனை யாக கன்மந்
தழைத்திட வொளிரா நிற்கும்
இத்தனு நியத ஆவி
யிடைத்தனி விளக்கி ருட்கண்
வைத்துள பிழம்பிற் கேற்ப
வயங்குதல் போல வன்றே.

*இ-ள்: ஒன்றாகிய விளக்கு இருளிடத்தே வைத்துள ஒளிப் பிழம்பிற்கு ஏற்ப விளங்குதல் போல, இந்த உடம்பில் நியதமாய் வாழும் உயிரிடத்தே அறிவு விளக்கம் எவ்வளவு உண்டோ அவ்வளவிற் சிறந்த ஞானம், கன்மம் தழைத்திட விளங்கும். (எ-று)* 72

132. நிறைந்தவன் என்னும் ஆன்மா
நிகழறி வுடைய னேனும்
சிறந்துள உடம்பின் கண்ணே
திகழ்ந்தனன் கரண சாலத்(து)
அறிந்திடு தகைமை யானே
ஆணவ மலம்ம றைப்ப
மறைந்தனன் அதனால் சொல்வர்
மதிஞர்சிற் றறிஞ னென்றே.

இ-ள்: *வியாபி என்னும் ஆன்மா, நிகழும் அறிவுடையனே னும், மாயையாற்றோன்றிய உடம்பின்கண்ணே விளங்கினவனாய் அந்தக் கரண கூட்டத்தால் அறியும் தகுதியைப் பெற்றிருத்தலால், ஆணவ மலம் தன் சிற்சத்தியை மறைப்ப அறிவு விளக்கமில்லாம லிருத்தலால், அறிஞர் அவனைச் சிற்றுணர்வினன் என்று கூறுவர்.* (எ-று) 73

மீமாஞ்சகன்

133. 'இறையுளன்' எனும்ப தந்தான்
இருவினை உயிர்க்கி சைப்பான்
உறவொரு கருத்த னில்லென்
றுரைக்குமீ மாஞ்ச காதி
பெறும்பத நிலைய கற்றப்
பேசிய தனையர் மார்க்கம்
அறும்முறை தெரிந்து ரைப்பாம்
ஆகமம் அறைந்த வாறே.

இ-ள்: *பராக்கிய சூத்திரத்தில் பத்தாவதாக உள்ள இறையை உள்ளான் (ஈஸ்வர சகிதன்) என்னும் சொல், இரு வினைகளை உயிர்க்குக் கூட்டுவிக்க ஒரு முதல்வன் இல்லை என்று கூறும் மீமாஞ்சகன் முதலானவரது சமயக் கொள்கையை மறுக்கக் கூறியதாம். சிவாகமம் கூறியபடி அவர்தம் சமயக் கொள்கையைக் கூறுவாம்.* (எ-று) 74

## குறிப்பு

*மீமாஞ்சகன் கொள்கையை "வேதம் ஆன்மாவை அறிக என விதித்தலின் ஆன்மாக்கள் பலவாய் நித்தமாய் வியாபகமாய்ப் பிறந்திறந்து வினைகளைச் செய்து வினைப்பயன்களை நுகரும். வினை செய்தவர்க்கு வினையே துறக்கம் முதலிய பயன்களை உதவும். காமியப் பயன்களைக் குறித்து வினைசெய்யின் அவ்வினை அவ்வப் பயன்களை உதவும். காமியம் வேண்டாது, விலக்கியனவும் ஒழித்து வேள்வி செய்யின் அவ்வினை முத்தியை உதவும். இவ்வான்மாக்களுக்கு வேருய்ப் பரமான்மா ஒருவன் உண்டென்பதும், உலகம் தோன்றி அழியும் என்பதும் பொய். உலகம் என்றும் இவ்வாறே நிலைபெறும் என்பதாம்" (அவையடக்கம்) என்ற சிவஞானபாடியத்தால் அறிக.*

134. நிறைந்துள இறைவன் றன்ஞல்
நிகழுயிர் யாக்கை யாதி
பெறும்; தகு வினையால் என்பர்
பெரியவர்; அபரா தத்தோன்
உறும்குறை தனக்குத் தன்னை
ஒறுத்திடான்; அதுபோல் தானே
அறிந்துள வினைக் கடுத்த(து)
அசத்தஞம் ஆன்மா எய்தான்.

**இ-ள்:** *பெரியோர், உயிரானது முதல்வனுல், இருவினைக்குத் தக்கபடி உடம்பு முதலானவற்றைப் பெறும் என்பர். அபராதம் புரிந்தவன் அக்குறைக்குத் தன்னைத் தானே தண்டித்துக் கொள்ளான். அதுபோல, ஆன்மாவும் தன்வினைக்கு அடுத்ததாகிய பயனை அசத்தனுதலின் அடையான்.* (எ-று) 75

135. ஆணவ மலம றைத்த
அறிவுள தாத லாலே
மாணுயிர் சுதந்த ரத்த
தன்றுறு வல்லி யாகிப்
பூணுறும் அபரா தந்தான்
பொருந்துரு வாறு போல
ஊணென வினைதா னேசென்
றுருதுயிர் தன்னை யன்றே.

இ-ள்: மாண்பினையுடைய உயிர், ஆணவமலத்தால் மறைக்கப்பட்ட அறிவினையுடையதாகையால், அது சுதந்தரத்தை உடையதன்று. ஒருவன் செய்த அபராதமாகிய செயல்தானே, தளையாகிச் செய்தானைப் பொருந்துறுவாறு போல, உயிர் செய்த வினைதானே அதனை அடையாது. (எ-று) 76

136. "சார்ந்துள குறைக்குத் தக்க
தண்டமிங் கியற்று நின்ற
வேந்தனில்" வினைப்பே றூட்டும்
வினைமுதல் உயிர்க்குண் டெங்கும்
சேர்ந்துள னாகி எல்லாம்
செய்பவ னாகி முற்றும்
ஓர்ந்தவ னாகிப் பாசம்
உறுதவ னாகி யன்றே.

இ-ள்: ஒருவன் செய்த குற்றத்திற்குத் தக்க தண்டனையை இந்த உலகில் இயற்றுகின்ற அரசனைப்போல, உயிர்க்கு வினைப் பேறு ஊட்டும் வினைமுதல் உண்டு. அவ்வினைமுதல் எங்கும் வியாபியாகி, எல்லாம் செய்பவனாகி, முற்றும் உணர்ந்தவனாகிப் பாசம் உறுதவனாகி உள்ளவனாவான். (எ-று) 77

137. அனையனும் இறைதன் னிச்சை
யால்வலி அடைந்தா னவான்
இனையனும் மலத்தோ டற்றால்
பரிசுத்த னென்னும் ஆன்மா
பனுவலுள் எடுத்தி யம்பப்
பட்டவ னவன். பாசந்
தனையினி அனாதி முத்தன்
தன்னுரைப் படியு ரைப்பாம்.

இ-ள்: மலத்தொகுதி அற்றால் பரிசுத்தன் என்னும் ஆன்மா, யாக்கையின் அயலான் முதலியனவாய இனையனமென்று சிவாகமத்துள் எடுத்தியம்பப் பட்டவனாவான்: அவன் முதல்

வனுடைய இச்சையால் எல்லாவகையான வலிமைகளையும் அடைந்தவனென். இவ்வாறு பசு இலக்கணம் கூறப்பட்டது. இனிமேல் அனாதி முத்தனாகிய சிவபெருமான் அருளிய ஆகமப்படி பாச இலக்கணத்தைக் கூறுவாம். (எ-று) 78

பசுமரபு முற்றும்.
ஆகத் திருவிருத்தம் 137.

## பாச மரபு

### பாசம் ஐந்தெனல்

138. சடமெனப் பட்டுப் பார
தந்திர ஏது வாகிப்
படர்வுறு பாசம் நான்காம்
பரசத்தி யாகிப் பாசத்
தொடர்தனி லுபச ரித்து
மலமெனச் சொல்லும் வண்ணம்
அடைவுறு திரோத சத்தி
அலாவிடத் தென்று கொள்ளே.

இ-ள்: பரமேசுரனது தாதான்மிய சத்தியாகிப் பாசத் தொடர்பொடு கூட்டி உபசார வழக்காய் மலம் என்று கூறுமாறு அடைந்துள்ள திரோதான சத்தி அல்லாத விடத்துப் பாசம் நான்காம். அந்நான்கும் சடம் என்று கூறப்பட்டு ஆன்மாவிற்குப் பாரதந்திர ஏதுவாகிப் படர்வுறும். எனவே, திரோதன சத்தியுடன் மலம் ஐந்தாயின. (எ-று) 1

### குறிப்பு

இந்நூல் 275 ஆம் செய்யுளின்படி ஆணவம், கன்மம், விந்து, மாயை என்பன பாசம் நான்காம். திரோதன சக்தியையும் கூட்டப் பாசம் ஐந்தாம். விந்து என்றது சுத்தமாயையை; மாயை என்றது அசுத்த மாயையை. இரண்டையுங் கூட்டி மாயை என்று கூறின் சடமாகிய பாசம் மூன்றும்.

நிர்வாண தீட்சையில் சீடனின் சிகையில் பாச சூத்திரம் ஒன்று கட்டித் தொங்கவிட்டு, ஓம் ஹாம். போக்த்ருத்வ காரணாய மல பாசாய நம: । என்று ஆணவ மலத்தை இருள் வடிவமாகப் பாவித்தும், ஓம் ஹாம் லௌகீகாதி கர்மபாசேப்ய: சுகதுக்க மோக போக காரணேப்யோ நம: । என்று கன்ம மலத்தை வெண்மை கருமை நிறமாகப் பாவித்தும், ஓம் ஹாம் மாயா பாசாய சரீரேந்திரிய விஷய காரணாய நம: । என்று மாயா மலத்தைப் புகைநிற உருவமாய்ப் பாவித்தும், பின்பு மூன்று பாசங்களுக்கும் அதிபதியான சிவசத்தியை (திரோதான சத்தியை) ஓம் ஹாம் பாசாதிஷ்டாத்யை சிவசத்தியே நம; । என்று அருச்சித்துச் சீடனுடைய உடம்பிலிருந்து கிரகித்துப் பாச சூத்திரத்தில் கூட்டும் முறையை அறிக. (**கிரியாக்ரமஜோதி** – பக். 359)

## ஆணவம்

139. எண்ணரும் உயிர்கள் ஞானக்
கிரியைக ளெலாம்ம றைப்புப்
பண்ணுபல் சத்தி பெற்றொன்
றுகுமா ணவபா சந்தான்
கண்ணுறு படலம் போலக்
கழிபொரு ளாகித் தன்கண்
நண்ணுறும் அநேக சத்தி
நவிலுமப் பந்தத் தீப்போல்.

இ-ள்: ஐந்து பாசத்துள் ஆணவ பாசந்தான், கணக்கற்ற உயிர்களுடைய ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்திகளை யெல்லாம் மறைத்தல் செய்யும் பல சத்திகளைப் பெற்று ஒன்றுகும். அப்பல சத்திகளும் கண்ணுறு படலம் போலக் கழிபொருளாகி ஒன்றுகிய பந்தத்திலிருந்து எழும் பல தீச்சுடர்கள்போலத், தன்கண் (ஆணவத்தில்) நண்ணுறும். (எ-று) 2

140. பொருளதாய்ச் சடமாம் மூலம்
புகன்றிடின் அநேக மென்னில்,
"பரவுறு சடமே யாகிப்
பற்பல வாங்க டம்போல்"

அரிலுற அநித்த மாகும்;
ஆதலால், உயிர்கட் கொன்ருய்த்
திரிவற நித்த மாகி
அநாதியாம் தெரியுங் காலே.

*இ-ள்:* பொருளாய்ச் சடமாயுள்ள ஆணவ மலத்தை அநேகம் என்று புகன்றிடில், பொருளாய்ச் சடமேயாகிப் பற்பலவாம் கடாதிகள்போல, அது அநித்தமாகும்; ஆதலால், அவ்வாணவ மலம், எல்லா உயிர்கட்கும் ஒன்ருய், நித்தமாய், அநாதியாகும் என்க. (எ-று) 3

141. இடைவிட லின்ம கத்தாம்
இருண்மலம் இனைய தாயின்
விடுகுவ திலதாம் நல்ல
விதியினுல் தானெ ரீஇத்தான்
அடைவுறும் முத்தி யாரும்
அடைதலும் வேண்டு மென்னில்
மிடைசெய்கா லாந்தத் தேகும்
வேறுபல் சத்தி மேவும்.

*இ-ள்:* இடையே விடுதலில்லாத பெரிய ஆணவமலம் இவ்விலக்கணங்களோடு கூடியதாயின், உயிரை விடுதல் இல்லையாகும்; ஆணவமலம் நீங்கியே யாரும் முத்தி அடைதல் வேண்டுமென்னில், காலாந்தரத்தில் கழியும் வெவ்வேருன பல சத்திகளை ஆணவமலம் பெற்றுள்ளது. (எ-று) 4

142. அறிவில தாகி ஒன்ருய்
அநாதியாம் ஆண வந்தான்
"நிறைமுளை ஏது வாகும்
நெல்லுமி தவிடு போலப்
பிறவியின் ஏது வாகும்;
பிறங்குசெம் புறுக ளங்கம்
செறிவுறு குளிகை யாற்போம்
செய்கைபோல் தீக்கை யிற்போம்.

*இ-ள் : அறிவில்லாததாகி (சடமாய்) ஒரு பொருளாய் அநாதியாகும் ஆணவமலந்தான், நெல்லின்கண் முளைத்தற்குக் காரணமாயிருக்கும் உமி தவிடுபோல, உயிர்க்குப் பிறவியின் ஏதுவாகும். செம்பிலே உள்ள களிம்பு இரசவாத குளிகையால் போதல் போல, ஆணவமல சத்தி ஞானாசிரியன் செய்யும் தீக்கையால் நீங்கும். (எ-று)* 5

**143.** மந்திர மாதி யாற்போம்
மலிவிட சத்தி போலச்
சிந்துறு காலம் தோன்றத்
தீர்வுறு சத்தி உள்ள(து);
உந்துணர் வினைம றைக்கும்
ஒளிவிழிப் படலம் போன்றப்
பந்தம துறும்பேர் மூடம்
பசுத்துவம் அவித்தை யாதி.

*இ-ள் : மந்திரம் முதலியவற்றாற் போகும் மிக்க விடத்தின் சத்திபோல, நீங்கும் காலத்தில் நீங்கும் சத்தியை உடையது ஆணவமலம். பார்த்து உணரும் உணர்வினை மறைக்கும் விழியின் படலநோய் போன்ற மறைப்பினைச் செய்யும் பந்தமாயுள்ளது அது. அவ்வாணவ மலம் பெறும் பெயர் மூடம், பசுத்துவம், அவித்தை முதலியனவாம். (எ-று)* 6

## கன்மம்

**144.** வாதனை உருவாய்ப் புத்தி
மருவியின் பொடுதுன் பாகிச்
சார்தரு கிரியை யானே
சாதிக்கப் படுவ தாகி
ஏர்தரும் அறம்பா வங்கள்
உருவமாய் நுகர்பே தத்தால்
பேதம துடைய தாகிப்
பிறங்குறும் கன்ம மன்றே.

இ-ள் : கன்ம மலமானது வாதனை உருவமாகிப், புத்தி தத்துவத்தைப்பற்றி நின்று, இன்பமாகிய பயனையும் துன்பமாகிய பயனையும் விளைப்பதாகிக், கிரியா சத்தியால் செய்யப்படுவதாய்ப், புண்ணிய பாவ வடிவாய், ஆன்மா நுகரும் நுகர்ச்சி வேறுபாட்டால் வேறுபாடுடையதாகி விளங்கும் என்க. (எ-று) 7

குறிப்பு

இப்பாட்டில் "பேதம துடையதாகி" என்பதுடன்,

"மாயா வுருவுகள் மருவி யார்த்துத்,
தருசெயன் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி" (சுபக்-129)

என்னும் சித்தியார்ப் பாட்டினை ஒப்புநோக்குக.

145. ஒத்தவ ரேனும் போகம்
உண்பவர் சிலர்து றக்கத்(து)
எய்த்தலில் இன்பம் கொள்வர்
இருள்நர கடைந்து துன்பம்
துய்த்தனர் மெலிவர் சில்லோர்
துய்க்குமிந் நுகர்வு கொன்னே
வைத்தன வல ; இ வற்றின்
காரணம் மதிப்பின் கன்மம்.

இ-ள் : காலம் இடம் குடும்பம் முதலானவற்றால் ஒத்தவராயினும் அவருள் சிலர், உலக போகங்களை உண்பவராயும் துறக்க இன்பம் துய்ப்பவராயும் இருப்பர் ; அவருள் சிலர், இம்மையிலும் துன்பம் துய்த்து மறுமையிலும் நரகத் துன்பத்தைத் துய்த்து மெலிபவராயிருப்பர். இருவகையினரும் இருவகையாய்த் துய்க்கும் துய்ப்பு, காரணமில்லாமல் வந்தன வல்ல ; இவற்றிற்குக் காரணம் அவரவர் வினையே ஆகும். (எ-று) 8

146. உழவுறு தொழிலால் ஒத்தோர்
இருவருள் ஒருவன் பண்டம்
விழைவொடு பெறும் ஒ ருத்தன்
மிடியனும் ; சேவை செய்திங்

கொழுகொரு குணசீ லத்தர்
இருவருள், ஒருவன் பேற்ருல்
அழகுறும்; ஒருவன் இல்லான்
ஆம்; இவற் றேது கன்மம்.

*இ-ள்:* உழவுத் தொழிலால் ஒத்தோர் இருவருள் ஒருவன், பொருள்களை விருப்பத்தோடு அடைவன்; மற்ருெருவன் வறுமையாளனு யிருப்பன்; வேந்தன் முதலானவனிடத்தே தொழும்பு செய்தொழுகும் குணமும் சீலமும் உடைய இருவருள் ஒருவன் பெறும் பேற்ருல் சிறப்புடையவனு யிருப்பன்; மற்ருெருவன் இல்லாதவனு யிருப்பன்; இவற்றிற்கெல்லாம் காரணம் ஆகூழும், போகூழும் ஆகிய கன்மங்களே யாம். (எ-று) 9

147. உடம்பொடு பொறிபு லன்கள்
உருவமோ டுருவி லாமை
அடைந்துள நுகர்வ வாகும்
ஆவிகட் குண்ணற் காகத்
தொடர்ந்துள கருமம் ஆக்கும்
சொல்லுமிக் கரும மின்றேல்
முடங்குரு டூமை யாதி
முற்றுமிங் கில்லா வாகும்.

*இ-ள்:* உயிர்களைத் தொடர்ந்து வருகிற கன்ம மலமானது உயிர்கள் உண்ணும் பொருட்டு உடம்பு, பொறி, புலன்கள், உருவம், உருவிலாமை, புசித்தற்குரிய ஆகுவன இவற்றை யெல்லாம் ஆக்கும்; சொல்லப்படும் இக் கருமம் இல்லையானுல் முடம், குருடு, ஊமை முதலானவை யாவும் இவ்வுலகில் இல்லாதனவாம். (எ-று) 10

148. சஞ்சிதம் பிராரத் தம்பின்
சாற்றுமா காமி யங்கள்
எஞ்சலின் மூன்ரும்; மக்கள்
இமையவ ராதி சாதி,

விஞ்சுதல் குறைத லாகும்
விரவுறும் ஆயுள், நல்ல
அஞ்சுறு தீய, போகம்
அளிப்பது கன்ம மன்றே.

இ-ள் : கன்ம மலமானது சஞ்சிதம் பிராரத்தம் ஆகாமிய மென மூன்றாகும். மக்கள் தேவர் முதலான தாழ்ந்தசாதி உயர்ந்த சாதியையும், அற்பாயுள் தீர்க்காயுள் என்னும் ஆயுளையும், நற்போகம் தீப்போகம் என்னும் போகத்தையும் கொடுப்பது அக்கன்ம மலமாகும். (எ–று) 11

குறிப்பு

"கன்ம நெறி திரிவிதம்நற் சாதியாயுப் போகக் கடனதென வரு மூன்றும்" என்பது 29 சிவப்பிரகாசம்.

149. மருவுறும் மாயை தன்னின்
மதியொடு பிரள யத்தப்
பிரளய காலம் மேவிப்
பெற்றிடும் பசனந் தோற்றத்
துரவிய மதியோ டெய்தும்
உயிர்வினை நுகர்ந்தி டாமல்
ஒருவுவ தென்ப தன்றால்
உரைத்திடில் கரும மன்றே.

இ-ள் : கரும மலமானது பிரளய காலத்திலே புத்தியாகிய தத்துவத்தினோடு மாயை தன்னின் மருவுறும்; அப்பிரளய காலத்தில் அங்ஙனம் மேவித் தோற்ற காலத்திலே புத்தி தத்துவத்தினோடு தோற்றம் எய்தும்; உரைத்திடில் உயிர் வினையை நுகர்ந்திடாமல் நீங்குவதென்பது அன்றாம். (எ–று) 12

குறிப்பு

"மதிகதமாய்ப் புலர்காலை மாயை மேவிப் பொருந்துமிது கன்மமலம் புகலுமாறே" என்பது (28) சிவப்பிரகாசம். வினையை நுகர்ந்தாலன்றி ஒழியாது என்பதனை "நுகர்வால் அந்தம் வரும்" (சுபக் - 129) என்னும் சித்தியாரால் உணரலாம்.

149 ஆம் பாட்டாகிய "மருவுறும்" என்றதன்பின் "ஒடுங்குறு" என்று தொடங்கும் பாட்டு தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூல் நிலயச் சுவடியில் உள்ளது. இப் பாட்டு ஞானியார் மடத்துச் சுவடியில் இல்லை சிவப்பிரகாச விகாசத்தின் மொத்த பாட்டெண் 333 என்று மடத்துப் பிரதி தெரிவிக்கிறது. இந்தப் பாட்டையும் கூட்டின் 334 ஆகும்.
அப்பாட்டு வருமாறு :-

ஒடுங்குறு பொழுது நாசம்
உற்றிடிற் கருமம் பின்னர்த்
தொடங்குவ திலையாந் தோற்றம்
துறப்பிலா மையினவ் வாற்றல்
ஒடுங்குறு பொழுதான் மாவின்
உடைமையாய் மாயை யின்கண்
அடங்கிவந் துதய காலத்
தடைந்திடு மென்ப ருண்மை.

150. உடன்முத லாம வற்றன்
உறும்புரி யட்ட கத்திற்
படும்மதி யிடைஅ ருத்தா
பத்தியான் மேவி இன்பம்
இடர்செய்வா தனைப்ப யங்கள்
எய்துபு பவவித் தாகித்
தொடர்வுறு விதைம ரம்போல்
தொடர்வரும் அநாதி யாகும்.

இ-ள் : உடலாலும் சொல்லாலும் மனத்தாலும் ஈட்டப்பட்டு, சூக்கும உடம்பாகிய புரியட்டகத்தில் புத்தி தத்துவத்தில் அருத்தாபத்திப் பிரமாணத்தால் மேவி, இன்ப துன்பமாகிய பயன்களாய் எய்தி, பிறவிக்கு வித்தாகி, ஒன்றுக்கொன்று காரணமாய்த் தொடரும் விதை மரம்போல் தொடர்ந்து வரும் கன்மமலம் (எ-று)

*13*

## குறிப்பு

கன்மம் அநாதி என்பதை "இருவினை அநாதி" (சுப-129) என்னும் சித்தியாரால் அறியலாம். இப்பாட்டிலுள்ள எல்லாக் கருத்தையும் "உருவதனுக் கேது வாகி நானாபோ கங்களாய் நாசோற் பத்தி, பண்ணி வரும் ஆதலால் அநாதி யாகிப் பலவாகி அணுக்கள் தோறும் படர்வ

தாகி, எண்ணிவரு மனவாச கன்மத்தால் இயற்றும் இயல்பினதாய் மதிகத் மாய் இருபயனும் பாவ, புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப் பொருந்துமிது கன்மமலம் புகலுமாறே" (28) என்னும் சிவப்பிரகாசத்தால் அறியலாம்.

151. ஆக்கவா குதலால் கன்மம்
ஆகுமால் அதிட்டம் என்றும்
சூக்கமாம் ஆத லாலே
சொற்படும் சனக மோடு
போக்கியம் தார கங்கள்
எனும்பெயர் புனையும் என்றும்
தாக்கும்அத் தியான்மி காதி
சாதனம் மூன்று டைத்தே.

இ-ள்: கன்மம் மனம், சொல், உடம்பு என்னும் இவற்றால் ஆக்க ஆகுதலால், அது ஆகுவதே. அது காணப்படாததாய்ச் சூக்குமமாயிருக்கும். அது சனகம் போக்கியம் தாரகம் எனும் பெயர்புனையும். அது அத்தியான்மிகம் அதிமார்க்கம் மந்திரம் என மூன்று சாதனங்களை உடையது. (எ-று) 14

## குறிப்பு

சனகம் காரணமாய் நின்று சரீரம் முதலியவைகளைச் சனிப்பிப்பது; தாரகம் சரீரவடிவாய் நின்று உயிரைத் தாங்கியிருப்பது; போக்கியம் விடயவடிவாய் நின்று அனுபவிக்கப்படுவது. அத்தியான்மிகவினை சிவ பூசனை செய்தலாலும், அதிமார்க்கவினை யோகம் செய்தலாலும், மாந்திர வினை மந்திரம் செபித்தலாலும் வரும், இன்னும் உலகவினை, வைதிகவினை என்னும் இரண்டும் கூட்டி ஐந்தென்பர்.

இங்ஙனம் கூறிப்போந்தவாற்றால் பெறப்பட்டவினை ஈட்டப்படுங்கால் மந்திரம் முதலிய அத்துவாக்களிடமாக முறையானே மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றால் ஈட்டப்பட்டுத் தூல கன்மமாய் ஆகாமிய மெனப் பெயர்பெறும். பின்னர்ப் பக்குவமாங்காறும் சூக்கும கன்மமாய்ப் புத்தி தத்துவத்திடமாக மாயையிற் கிடந்து, சாதி ஆயுப் போகமென்னும் மூன்றற்கும் ஏதுவாகி, முறையே சனகம் தாரகம் போக்கியமென மூவகைத் தாய், அபூர்வம் சஞ்சிதம் புண்ணிய பாவ மென்னும் பரியாயப் பெயர் பெறும். அது பின்னர் பயன்படுங்கால் ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பலதிறப்பட்டுப் பிராரத்தமெனப் பெயர் பெறும் என்றுணர்க; என்பது சூ-2. அதி-2 சிவஞானபாடியம்.

152. பகுசக விசித்தி ரந்தான்
பரிணும விசேடத் தாகும்
தகுமியல் பாகும் ஏதுத்
தான்வினே அதற்கன் றென்னில்
சகமதற் கியல்பின் றென்றும்
தரைநடுங் குறும்நீர் வெப்பாம்
மிகுமழல் வெம்மை குன்றும்
விலங்கொலி மேல்நோக் குங்காண்.

*இ-ள் : பலவான உலகமாகிய விசித்திர காரியமானது பால் தயிரானுற்போல மாயையின் பரிணும விசேடத்தினுலே ஆகும் இயல்பினே உடையதாகும். அதற்குக் காரணந்தான் வினே ; வினே காரண மன்று எனில், இவ்வுலகிற்கு இயல்பாய் நடக்க வேண்டுவ தொன்றும் இல்லேயாம் ; நிலம் உரத்துத் தரிக்காமல் நடுங்கும் ; நீர் தண்ணிதாகாமல் வெப்பமுடையதாம் ; அழல் வெம்மையில்லா ததாம்; குறுக்கே வீசும் காற்று மேல் நோக்கி வீசும். (எ-று) 15*

153. ஆதலால் பூதங் கட்கும்
ஆமிய லில்லே யாயின்
ஓதுமிவ் வுடம்பா திக்கிங்
குண்டுகொல் இயல்பு சொல்லாய்
யாதுகா ரணந்தோன் றுற்ற
தென்னினும் தோன்ரு தேனும்
தீதில்கா ரியத்தான் மானம்
செயப்படும் என்பர் மேலோர்.

*இ-ள் : வினே இல்லே எனின், தரை முதலான பூதங்கட்கும் அது அதற்குள்ள இயல்பு இல்லேயாகும் ; அவைகட்கு இயல்பு இல்லேயாயின், உடம்பு முதலானவற்றிற்கும் இயல்பு உண்டு கொல் ? சொல்வாயாக. எந்தக் காரணம் புலப்படத்தோன்றிலும், அல்லது தோன்ருமலிருந்தாலும், குற்றமில்லாத காரியத்தால் அநுமானித்து அக் காரண உண்மை உணரப்படும் என்பர் மேலோர். (எ-று) 16*

154. சாற்றுமவ் வினையே இந்தச்
சகம்செய்கா ரணமாம் என்னில்
போற்றிய அஃது ணர்ச்சி
பொருந்திலா மையி னதற்கிங்
கேற்றஇவ் வுடல மாதி
இயற்றுவன் ஆரு யிர்க்கெம்
ஆற்றல்வெள் விடையா னென்று
முன்னரே அறைந்தா மன்றே.

*இ-ள்: சொல்லப்படும் இந்த வினை தானே இந்த உலகங்களை யெல்லாம் படைத்துக் காத்து அழித்துச் செயல்செய்யும் காரணமாம் என்னில், வினை சடப்பொருளாதலின் அறிவு பொருந்தாதாம்; அதனால் பேரறிவுப் பொருளாகிய பரமேசுரனே உயிர்கட்குத் தனுகரணபுவன போகங்களை யெல்லாம் படைப்பன் என முன்னரே கூறினும். (எ-று)* 17

## குறிப்பு

*இப்பாட்டின் கருத்தினை*

*"அவ்வவ யோனிதோறும் அவ்வவ வுலகந் தோறும்,*
*செவ்விதி னறிந்து கன்மஞ் சேர்ந்திடா சீவன் சேரா,*
*இவ்வகை தம்மிற் சேர்வும் இறைசெய லானல் செய்த,*
*எவ்வுரு வுந்தங் கன்மால் மாற்றுவ னிறைவன் றானே"*

- சுப. 135

*என்னும் சித்தியாரால் உணர்க.*

## வயிந்துவம்

155. இயம்பினன் கரும பாசம்;
இனிவயிந் துவபா சத்தைப்
பயந்தவிர் பிறைத வழ்ந்து
படமிசைக் கிடந்து றங்கும்
புயங்கம தணிந்த வேணிப்
புனிதன்நூற் படியு ரைப்பின்,
துயங்கலில் விந்துச் சுத்தாத்
துவாவுத வுபாதா னந்தான்.

*இ–ள் : இதுவரை கருமபாசத்தை இயம்பினேன். இனிமேல் வயிந்துவ பாசத்தைச் சிவாகம முறைப்படி உரைத்தால், விந்து என்கின்ற சுத்தமாயை சுத்தாத்துவாவை உதவுவதற்கு முதற் காரணப் பொருளா யிருக்கும். (எ–று)* 18

## குறிப்பு

*விந்து என்பது வயிந்துவமெனத் திரிந்தது. அச்சம் நீங்கிய பிறையானது தவழ்ந்து சென்று படத்தின்மேல் கிடந்து உறங்குவதற்கு இடமாகிய புயங்கம் (பாம்பு); அதனை அணிந்த பரமேசுரன்; அவனுலே சொல்லப்பட்ட சிவாகமம்.*

156. இறைவனுக் கிலய மாதி
பேதமெவ் வுபாதி யான்முன்
அறைதரப் பட்ட தம்ம
அதுவிந்து ; அந்த விந்துக்
குறியுல கத்து மிக்க
குண்டலி எனலா மென்னு
பிறைநுதல் குமுதச் செவ்வாய்ப்
பெண்ணிடத் தவன்நூல் கூறும்.

*இ–ள் : உமாதேவியை இடப்பாகத்திலே உடைய சிவ பெருமான் அருளிய சிவாகமங்கள், முதல்வனுக்கு இலயம், போகம், அதிகாரம் என்னும் பேதம் எந்த உபாதியால் முன் ( பதிமரபில் ) கூறப்பட்டதோ அந்த உபாதிக்குக் காரணமாயிருக்கும் அது சுத்தமாயையாகும்; அந்த விந்துவைக் குண்டலி என்றுங் கூறலாமென்று கூறும். (எ–று)* 19

157. வளந்தரு பரசி வற்கு
மலிபர சத்தி போல
விளங்குறு கின்ற தாதான்
மியமெனப் படா(து) அசித்தாய்
துளங்குபா தான மாகச்
சொல்பரிக் கிரக மாகும்
உளங்கொளும் ஒருகு லாலற்
1 குற்றமண் போல விந்து.

1 *பிரதிபேதம் ' உறுமணற் '*

*இ-ள் :* உலகத்திற்கு வளத்தைத் தருகின்ற பரமசிவனுக்குப் பராசத்திபோலத் தாதான்மியமெனப் படாது, அசித்தாய் உள்ள சுத்த மாயையானது குயவனுக்கு மண்ணைப்போல முதற் காரணப் பொருளாய்க் கூறப்பட்டுப் பரிக்கிரக (வைப்பு) சத்தியாகும். (எ-று) 20

## குறிப்பு

இப்பாட்டின் கருத்தை

"மன்னும் நற்சிவத்திற் சத்தி மதித்திடி னிருவ கைத்தாம்,
பின்னமற் றிருப்ப தொன்று பின்னமா யிருப்ப தொன்று,
மன்னிய சிவத்த பின்னை மாசில்சிற் சத்தியாகும்,
பின்னமாவது சடந்தான் பேர்சொலின் மாயை யன்றே." 22

சிவஞானசித்தியார் : பெருந்திரட்டுச் காண்க.

158. வீறுதன் காரி யத்தில்
வியாபகி யாமவ் விந்துக்
கூறரு மவித்தை சத்தி
குண்டலி குடிலை விந்துப்
பேறின்மா மாயை சத்தப்
பிரமம்வாக் கிறைவி என்ன
வேறுபல் பெயர்கள் கொண்டு
விளங்குமச் சுத்த மாயை.

*இ-ள் :* வீறுபாடுற்ற சுத்தாத்துவா வாகிய காரியம் முற்றும் வியாபகியாய் விளங்கும் விந்துவாகிய சுத்த மாயையானது, அவித்தை, சத்தி, குண்டலி, குடிலை, விந்து, மாமாயை, சத்தப் பிரமம், வாக்கிறைவி என்று பல பெயர்களைக் கொண்டு விளங்கும். (எ-று) 21

## குறிப்பு

"சரியை கிரியை யோகங்களில் நின்றோர்க்குச் சாலோகாதி பத முத்திகளை உண்டாக்கும் வயிந்தவ மென்றும் மாயை என்றும் சிவ மென்றும் விந்துவென்றும் இவை முதன் முப்பத்தொரு பெயரினை யுடைத்து (32-உண்மை) அத்துவிதவென்பா."

சுத்தாத்துவா

159. விந்துமுன் தந்த அத்து
வாமிகு வனம்ப தம்பின்
மந்திரம் கலைகள் தத்து
வம்புவ னங்கள் ஆகும்
முந்துறு மூன்று சொல்; பின்
மூன்றுறு பொருளாம்; அத்தால்
உந்துசொல் பொருளென் றுங்கீ
ருருவுடைத் தந்த விந்து.

*இ-ள்:* சுத்தமாயையானது முன்னே தந்த அத்துவா, எழுத்து சொல் மந்திரம் கலைகள் தத்துவங்கள் புவனங்கள் என ஆறுகும்; அவற்றுள் முன்னே உற்ற மூன்றும் சொல்லுலகமாகும்; பின்னே உற்ற மூன்றும் பொருளுலகமாகும்; அதனல் அந்த விந்து சொல்லும் பொருளும் என்று இரண்டு வகையான உருவத்தை யுடைத்து. (எ—று) 22

*வேறு*

160. வன்னமிகும் அகரமுதல் ஐம்பத் தொன்றும்
மற்றதுமாத் திரிகையென வருமவ் வன்னத்
தின்னலற வரும்வியோம வியாபி யாதி
எண்பத்தொன் றுயர்பதாத் துவாவென் றோர்க
பன்னினது பொருட்குவா சகமாம் அந்தப்
பதங்களது கூட்டத்தாய்ப் பதினென் றுகும்
பின்னமுறு மந்திரம்வாக் கியமாம் பஞ்சப்
பிரமத்தின் முறையின்வரும் காமி காதி.

*இ-ள்:* எழுத்து அகரம் முதல் ஐம்பத் தொன்றுகும்; அது ஒன்று முதலான மாத்திரையை உடையதாய் வரும்; அந்த எழுத்தி லிருந்து வியோம வியாபி முதலான எண்பத்தொன்று என்னும் பதாத்துவா வரும்; பதாத்துவா, பொருளுலகத்திலே பொருளுக் குரிய வாசகமாயிருக்கும். அப்பதங்களின் சேர்க்கையை

யுடையதாய்ப் பதினைன்றாகும் மந்திரம் வரும்; அம்மந்திரம் வாக்கியமாகும்; அம்மந்திரங்களில் பஞ்சப் பிரம மந்திரத்திலிருந்து காமிகம் முதலான சிவாகமம் வரும். (எ-று) 23

161. சாந்தியா தீதமொடு சாந்தி வித்தை
சாற்றரிய பிரதிட்டை நிவிர்த்தி யைந்தும்
போந்துளமா கலைசிவ தத்துவம் அதன்பின்
புகழ்சதா சிவமீசம் சுத்த வித்தை
வாய்ந்தவிவை தத்துவம் வாமாதி யாகி
மன்னும்அனு சிருதாந்தம் புவன மென்ப
ஓர்ந்துரைசெய் இவ்வாறு வழியின் தன்மை
உரைசெய்வன் ஆகமநூல் உரைத்த வாறே.

இ-ள்: சாந்தியாதீத கலையும் சாந்தி கலையும் வித்தியா கலையும் பிரதிட்டா கலையும் எனக் கலைகள் ஐந்தாம்; சிவதத்துவம் (சத்திதத்துவம்) சதாசிவ தத்துவம் ஈசுர தத்துவம் சுத்த வித்தியா தத்துவம் என்பன தத்துவங்களாம்: வாமம் முதல் அனுசிருதாந்தம் அறுபதும் புவனம் என்ப. இனி ஆகம நூல் உரைத்தவாறு அத்துவாக்களின் தன்மையைக் கூறுவேன். (எ-று) 24

## குறிப்பு

வழி - அத்துவா. வாமம் முதலிய புவனம் இருபத்தேழும் வித்தியா கலையிலும், வாமை முதலிய புவனம் பதினெட்டும் சாந்தி கலையிலும் நிவிர்த்தி முதல் அநாசிருதை ஈறுகிய புவனம் பதினைந்தும் சாந்தியாதீத கலையிலும் உள்ளன.

## அத்துவா இயல்பு

162. ஆதிதனில் விமலன்றன் சத்தி தன்னால்
அறிவரிய விந்துவினைக் கலக்கஞ் செய்யப்
போதலுறும் பிரணவம்அப் பிரண வத்தில்
பொருந்திவரும் அகரமுத லாய வெல்லாம்
ஏதமறு காரியமாய்ச் சடமாய் நின்ற
இயல்பினால் கடாதிகள்போல் பலவாம் என்ப
மேதகைய வன்னங்கள் சுரம தோடு
வெஞ்சனமென் றிருவகையாம் விளம்புங் காலே.

*இ-ள்: படைப்பின் தொடக்கத்தில் பரசிவன் தன் தாதான்மிய சத்தியாகிய சிற்சத்தியால் பரிக்கிரக சத்தியாகிய சுத்த மாயையைச் செயற்படுத்த பிரணவம் தோன்றும்; அந்தப் பிரணவத்திலிருந்து அகரம் முதலான எல்லா எழுத்துக்களும் தோன்றும்; அவை குற்றமற்ற காரியமாய்ச் சடமாய் நின்ற இலக்கணத்தினல் கடம் முதலான காரியப்பொருள்கள் போல் பலவாம்; அவ்வெழுத்துக்கள் உயிரென்றும் மெய்யென்றும் இருவகையாம். (எ-று)* *25*

**163. சுரமொடுவெஞ் சனம்தொடர்த லாற்பதங்க ளுண்டாம்**
**சொல்லியவப் பதங்களால் வாக்கியங்க ளுளவாம்**
**வரமுறுமவ் வாக்கியங்க ளாலுலகின் நிறைந்து**
**வழங்குபொருண் மிகவயங்கித் தோன்றுமா தலினல்**
**உரமுறுமம் மாத்திரிகை எலாமுணர்மாத் திரிகை**
**உலகமாத் திரிகையெனப் படுமியல்பு மதனல்**
**சரமொடச ரங்களின்வாக் குருவுதிக்கு மென்று**
**சந்திரசே கரனருள்செய் தந்திரமோ துறுமால்.**

*இ-ள்: உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் தொடர்தலால் பதங்கள் தோன்றும்; அத் தொடர்மொழிகளால் உலகத்திலுள்ள எல்லாப் பொருளுணர்வும் தோன்றும்; ஆதலால், அம்மாத்திரிகை எலாமுணர் மாத்திரிகை, உலக மாத்திரிகை யெனப்படும் இயல்பும் அதனல் தாவர சங்மங்களின் வாக்கின் உரு உதிக்கும் என்று சிவாகமம் செப்பும். (எ-று)* *26*

**164. அக்கரங்கள் நின்றுதொடர்ந் துளவாகும் பதத்தின்**
**அடைவுதனைக் காரணு கமமதனுள் அறிக**
**தொக்கபதங் களினுகும் மந்திரமீண் டுரைப்பில்**
**சுடர்பஞ்சப் பிரமமொடு சடாங்கமென விரண்டாம்**
**தக்கவரும் ஐம்பிரம மந்திரங்கண் மூர்த்தி**
**தத்துவமே பூதமொடு பிண்டமுயர் கலையான்**
**மிக்கவரு பிரமமென ஐவகையாம் அவைதான்**
**விளம்பிலொரோ வொன்றைந்து வகையாய் ஐந்தாம்.**

இ–ள்: எழுத்துக்கள் நின்று தொடர்ந்து உள்ளனவாகும் பதத்தின் அடைவுதனைக் காரணாகம மதனுள் அறிக. தொக்க பதங் களினால் ஆகும் மந்திரம். அம் மந்திரங்களைக் கூறின், பஞ்சப் பிரம மந்திரம் என்றும் சடாங்க மந்திரம் என்றும் இரண்டு வகையா யிருக்கும். ஐம்பிரம மந்திரங்கள், மூர்த்தியும், தத்துவமும், பூதமும், பிண்டமும், கலாப்பிரமமும் என ஐவகை யாகும்; விளம்பில் ஒவ் வொன்று ஐந்துவகையாய் ஐந்தாம். (எ–று) 27

குறிப்பு

*அறிய வேண்டிய உண்மைப் பொருளை உணர்த்தி, பிறவிக் கடலைத் தாண்டச் செய்வதே 'மந்திரம்' என்ற சொல்லின் பொருளாகும் என்பதை "மநநம் ஸர்வவே தித்வாம் த்ராணம் ஸம்ஸார ஸாகராத்! மநா த்ராண தர்மித்வாத் மந்த்ர மித்யபி தீயதே!!' (தந்திராவதாரப் படலம்-2) என்னும்* **காமிகாகமத்தால்** *அறிக.*

165. அங்கமுயர் சிவாங்கமொடு பூதாங்கம் வித்தி
யாங்கம்மலி கூடாங்கம் சத்தியாங் கம்பின்
துங்கமுறு சாமானி யாங்கமென ஆறும்
சொல்லினவை ஒவ்வொன்றவ் வாறுகு மென்க
இங்கிவைகள் ஈசான முதற்பிண்டப் பிரமம்
இருஞ்சதா சிவனவத்தா பேதமொடா னனமாம்
ஐங்கலைநல் லுத்தமாங் கம்வதன மிதயம்
அணிகுய்யம் மூர்த்திகளா தலினவைவே றலவே.

இ–ள்: சடாங்க மந்திரமானது சிவாங்கம், பூதாங்கம், வித்தியாங்கம், கூடாங்கம், சத்தியாங்கம், சாமானியாங்கம் என ஆறாகும்.

இங்கு முதற்கண் கூறிய பஞ்சப்பிரம மந்திரங்கள் ஈசானம் தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோ ஜாதம் என்று கூறப்பட்டுச் சதாசிவ தேவரின் திருமேனியாகவும் அவத்தா பேத மாகவும், திருமுகங்களாகவும் விளங்கும். ஐந்து பிரிவான அம் மந்திரம் சதாசிவ மூர்த்தியின் உத்தமாங்கம் எனப்படும் சிரம், முகம், இதையம், குஹ்யம், வடிவம் என்னும் ஐந்தாக விளங்கலின் அவை வேறல்ல. (எ–று) 28

## குறிப்பு

*அங்கம் சிவாங்கமெனவும், பூதாங்கமெனவும், வித்தியாங்கமெனவும், கூடாங்கமெனவும், சத்தியாங்கமெனவும், சாமானியாங்கமெனவும் ஆறு ஆகும். உரைப்பின் ஒவ்வொன்றும் அவ்வாறும் என்று கூட்டுக.*

166. செப்பலுறும் அங்கங்கள் தமுளிதயம் சிரமே
சிகைகவ்சம் நேத்திரமத் திரங்களெனும் சிவாங்கம்
அப்பெரிய சதாசிவன்றன் இதயமுத லாய்வந்(து)
அங்கமா தலினுலிம் மனுவேறல் லனவாம்
இப்பலமந் திரங்களினும் தரித்தலிவை சாங்கம்
எனப்பாகு படுமுறையும் ஐந்திருமூன் றெட்டோ(டு)
ஒப்பரிய நவமீரைந் தெனப்படுமக் கரங்கள்
உண்மையும்வா துளம்முதலா மவற்றுணர்ந்து
கொளலே.

இ–ள். மேற்கூறிய அங்கங்களுள் சிவாங்கமானது இருதயம், சிரம், சிகை, கவசம், நேத்திரம், அத்திரம் என்பனவாம். இவை சதாசிவ மூர்த்திக்கு இருதயம் முதலான உறுப்பாதலால் அவற்றைக் குறிக்கும் இந்த மந்திரம் வேறல்லவாம். இத்தகைய பல மந்திரங்களில் மேற்கொள்ளப்பட்ட இவை சாங்கம் எனப் பாகுபடும் முறையும் ஐந்தெழுத்து, ஆறெழுத்து, எட்டெழுத்து, ஒன்பதெழுத்து, பத்தெழுத்து எனக் கூறும் எழுத்துக்களின் உண்மையும் **வாதுளாகமம்** முதலியவற்றிற் காண்க. (எ–று) 29

## குறிப்பு

*பஞ்சாட்சரம், சடாட்சரம், அட்டாட்சரம், நவாட்சரம், தசாட்சரம் என்னும் மந்திரபேதங்களை ஆகமங்களில் உணர்க.*

## மந்திரங்களிற் சிறந்தது

167. மந்திரங்கள் அனைத்தினுக்கும் ஐந்தெழுத்தே மூல
மந்திரமாம்; எழுகோடி மந்திரத்தைந் தெழுத்து
மந்திரம்மிக் குயர்ந்ததயன் அரிமுதல்வா னவருள்
மதிமுடியோன் போலஅவன் றனக்கிணையுண் டாயின்

மந்திரமைந் தெழுத்துநிகர் நின்றதுள தாம்; அம்
மந்திரங்கள் எவற்றினுக்கும் காரணம்ஐந் தெழுத்து
மந்திரம்; இவ் வுலகினுக்குச் சிவனென ஐந்தெழுத்து
மந்திரமே ஆதலினுன் மதித்துரைப்பர் அறிஞர்.

*இ-ள்: மந்திரங்கள் எல்லாவற்றிற்கும் ஐந்தெழுத்து மந்திரமே மூல மந்திரமாகும்; நம: முதலான ஏழு பதங்களை ஈற்றிலே உள்ள மந்திரங்களுள் ஐந்தெழுத்து மந்திரம் மிகவும் உயர்ந்தது' எது போல வெனின்? பிரமன், திருமால் முதலான தேவர்களுள் சிவபெருமான் மிகவும் உயர்ந்திருத்தல்போல; சிவபெருமானுக்கு ஒப்பாக ஒருபொருள் உண்டாயின் ஐந்தெழுத்திற்கு ஒத்த மந்திர மொன்று உள்ளதாம்; எழுகோடி மந்திரம் எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பதும் ஐந்தெழுத்து மந்திரமே; இந்த உலகினுக்கு நிமித்தகாரணமாயிருக்கிற சிவபெருமான் போல; ஐந்தெழுத்து மந்திரம் இவ்வாறு எல்லா மந்திரங்கட்கும் மூலமாயும், காரண மாயும் இருத்தலால், அறிஞர் இதனையே மதித்துப் பேசுவர். (எ-று)* 30

## குறிப்பு

*பஞ்சாட்சர மந்திரத்திற்கு மூலம், வித்தை, சிவம், சைவ சூத்திரம், ஐந்தெழுத்து என்று பெயருண்டு. சிவபெருமான் அநாதியே மும்மலங்க ளில்லாத தூயவனுகை இருத்தலானும் (சுத்தன்), எல்லா மங்கலங்களும் தோன்றுதற்கு இடமாயிருத்தலானும் சிவம் என வழங்கப்பட்டான். அத்தகைய சிவனுக்கு (சிவாய) வணக்கம் என்ற பொருளில் நம: என்னும் சொல்லைச் சேர்த்துச் சிவாய நம: அல்லது நமசிவய என்று வழங்கலாயினர். இந்த ஐந்தெழுத்தே முதல்வனுக்கு நாமம்; அவன் நாமியாவான். இம் மந்திரம் குடிலையில் தோன்றியதால் மூலம் என்றும், உலகிற்கு முதல்வன் நிமித்தகாரணனு யிருத்தல்போல, எல்லா மந்திரங்கட்கும் இது நிமித்தமா யிருத்தலால் நிமித்த காரணம் என்றும் கூறப்படும் நம:, சுவாஹா: வஷட்: ஹூம், வெளஷட், பட், ஸ்வதா என்னும் ஏழு பதங்களை ஈற்றில் (கோடியில்) உள்ள மந்திரங்கட்குச் சத்தகோடி மகாமந்திரம் என்று பெயர்.*

## சிவாகமத் தோற்றம்.

168. பரசிவன்நல் உயிர்களுறும் பயன்பொருட்டு முன்னம்
படைப்பிலொரு தன்முகங்கள் ஆகியமந் திரத்தால்
துரிசகலும் ஆகமங்கள் உதவியதன் பின்னர்ச்
சுத்தமெனும் அத்துவவா சிகளாகி நின்ற

பிரணவரே முதலாய தற்சிவபே தத்தர்
பிறங்குருத்தி ராதியீ ரொன்பதின்மர் தம்மை
நிரதிகர ணத்தரா யருளியெலாம் உணரும்
நிலையிறைமை கொடுத்தவர்க்கு நிகழ்த்தினன்
ஆகமங்கள்

இ-ள்; பரமசிவன், நல்ல ஆன்மாக்கள் அடையும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் பயன்பொருட்டு, முற்பட்ட படைப்பின்கண், தன் முகங்களாகிய ஈசானுதி பஞ்சப்பிரம மந்திரத்தால் குற்றமற்ற ஆகமங்களைக் கொடுத்து, அதன் பின்னர் சுத்தமாயையில் தோன்றிய சுத்தாத்துவாவில் வசிக்கும் பிரணவரே முதலாய சிவபேதத்தராய் விளங்கும் உருத்திரர் முதலான பதினெண்மர் தம்மை நிரதிகரணத்தராய் அருளி, முற்றுணர் நிலையையும், தலைமையையும் கொடுத்து அவர்க்கு அவ்வாகமங்களை யெல்லாம் அருளினன். (எ-று) ருக

குறிப்பு

பாடபேதம் அடி-3 பிரணவமே முதலாய தற்சிவபேதத்தை. அடி 4 நிரதிகரணத்தனய்.

169. சத்தியோ சாதத்தில் காமிகமே முதலாம்
தந்திரம்ஐந் துதயமாம்; மிகும்ஒளிப்பேர் கொடுத்து
வைத்தவா கமமுதலைந் துளவாகும் வாம
வதனத்தில்: விசயமுத லைந்துமகோ ரத்தாம்:
முத்தனுர் புருடத்தில் ஓங்கி ரவுரமே
முதலாகும் ஐந்துவரும்: ஏனையிரு நான்கும்
வத்திரமாம் ஈசானந் தனில்வருமற் றிவையால்
வந்தணையும் ஆகமமும் ஆங்கிருபத் தெட்டாம்.

இ-ள்: பரமசிவன் முகங்களாகிய ஐந்தில் சத்தியோசாத முகத்தில் காமிகம் யோகசம் சிந்தியம் காரணம் அஜிதம் என்னும் ஐந்து ஆகமங்களும்; வாமதேவமுகத்தில் தீப்தம், சூக்குமம் ஸகஸ்ரம், அம்சுமான், சுப்பிரபேதம் என்னும் ஐந்து ஆகமங்களும்; அகோரமுகத்தில் விஜயம், நிசுவாசம், ஸ்வயம்

பூதம், ஆக்நேயம், வீரம் என்னும் ஐந்து ஆகமங்களும்; தத்புருட முகத்தில் ரவுரவம், மகுடம், விமலம். சந்திர ஞானம், முகபிம்பம் என்னும் ஐந்து ஆகமங்களும்; ஈசான முகத்தில் புரோத்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தமம், பாரமேஸ்வரம், கிரணம், வாதுளம் என்னும் எட்டு ஆகமங்களும் வந்தணையும். அவை இருபத்தெட்டாகும் (எ–று) (32)

ஆகமம் கூறுவதும் வைகரி முதலியனவும்

170. சரியைமுத லாயநாற் பாதமோ துறுமத்
தந்திரங்க ளெனவறிக; இனிக்குடிலை மாயை
புரிதருகா ரியமாய வித்தையதிட் டிதமாய்ப்
பொருந்திவை கரிமுதல்நால் உரைவிருத்தி தனையும்
உரைதரிலொண் களமுதலா மிடத்தியங்கு பிராணன்
உருத்தரிக்கப் படுந்தூல எழுத்துடைமை யதனால்
விரைதருமஞ் செவிவிடய மாகிக்கேட் பவர்க்கு
வேளாண்மை செய்வதுவை கரியெனநூ லியம்பும்.

இ–ள்: அச் சிவாகமம் இருபத்தெட்டும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களைக் கூறும் என்க.

இனிக் குடிலை என்னும் சுத்த மாயையினால் செய்யப்படும் காரியமாகிய சுத்தவித்தையின் அதிட்டிதமாய்ப் பொருந்திவரும் வைகரி முலான நான்கு வாக்கையும் உரைப்பின், கண்டம் முதலான இடத்தில் இயங்கும் பிராணன் என்னும் காற்றால் உருத்தரிக்கப்படும் தூல எழுத்துடைமையதனால் விரைந்து கேட்கும் உட்செவிக்கு விடயமாய்க் கேட்பவர்க்கு கேட்டலாகிய வேளாண்மையைச் செய்வது வைகரி என்று சிவாகமம் கூறும். (எ–று) 33

மத்திமை வாக்கு; சூக்குமை வாக்கு.

171. இயங்குமுயிர் விருத்தியில தாய்ப்புத்தி தன்னில்
எழுத்தனுசந் தானமொடு முன்னமுணர் பொருட்குத்
தியங்கலரும் வாசகமாம் மத்திமை; யொண் மயிலின்
சினைப்புனலின் எழுத்துருசந் தானமிலா தகத்தே

பயின்றிடலின் விசேடமறு பொருளுடைய தாகும்
பைசந்தி; நீங்கும்பல் சத்தியுடைத் தாகி
முயங்கலுறும் உணர்விடையே நிற்பதுசூக் குமையும்
முறைபிறழா திவையொன்றற் கொன்றுகா ரணமாம்.

*இ-ள்: பிராணவாயுவின் விருத்தியில்லாததாய்ப் புத்தி தன்னில் எழுத்து தொடர்ந்து விளங்குதலுடனே முன்னே உணர்ந்திருந்த பொருளுக்கு மயக்கமற்ற சொல்லாயிருக்கும் மத்திமை வாக்கு. ஒளிபெற்ற மயில்முட்டையுள் கருப்புனலைப் போல எழுத்தின் வடிவங்கள் தோற்றமில்லாமல் உள்ளேயே பயின்றிடலால் விசேடமில்லாத பொருளுடையதாகும் பைசந்தி வாக்கு; வெளிப்படும் விருத்தி சத்தி நீங்கியதாய் உணர்வுக்குள்ளேயே நிற்பது சூக்குமை வாக்காம். கூறிய முறைபிறழாமல் இவை ஒன்றற்கொன்று காரணமாம். (எ-று)* 34

172. மத்திமையே புறவிருத்தி யல்லவக விருத்தி;
வாக்கியங்கள் சுத்தாத்து வாவிற்சூக் கமமாம்;
அத்துவா மிசிரத்தில் வாக்கியங்கள் தூலம்;
அசுத்தத்தில் வாக்கியங்கள் தூலதர மாமச்
சுத்தமா யையின்விருத்தி யாகியவைங் கலையும்
சுத்தத்திற் புவனவுரு வாகியுறும்; மற்றை
எய்த்தலிலா விரண்டினும் தத்துவம்முதலா மவற்றிற்
கென்றுமா தாரமா யிருக்குமென வறியே.

*இ-ள்: நால்வகை வாக்குள் மத்திமை வாக்கு புறவிருத்தி யல்ல; அகவிருத்தியாகும். வாக்குகள் சுத்தமாயையிற் றோன்றிய சுத்தாத்துவாவில் சூக்குமமா யிருக்கும்; மிசிராத்துவாவில் அவை தூலமா யிருக்கும்; அசுத்தமாயையிற் றோன்றிய அசுத்தாத்துவாவில் தூலதரம் ஆகும். சுத்தமாயையின் விருத்தியாகிய நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை ஆகிய ஐங்கலைகளும் சுத்தமாயையில் புவனவுருவம் ஆகியுறும்; மிசிர மாயை அசுத்தமாயை என்னும் இரண்டினும் அக்கலைகள்*

அம்மாயையிற்றேன்றிய தத்துவம் முதலானவற்றிற்கு ஆதாரமாய் இருக்கும். (எ-று) 35

173. "கீரததி நியாயம்போ லன்றியே கிருத
கீடநியா யம்போல" ஏகதே சத்தின்
நேருமர ஞற்கலக்க மெய்துறுமவ் விந்து
நின்றவதன் கலங்கலே சாந்தியா தீதப்
பேருறுமொண் கலேயம்மா யையின்பரிணு மந்தான்
பெருஞ்சாந்தி முதலாய புவனவுரு வாமிவ்
வேருறுமைங் கலேகளேமேல் புவனுத்து வாவை
விளம்புமிடத் தியம்புமெம் மிறைவனுரைப் படியே.

இ-ள் : அச் சுத்தமாயையானது காரணத்தின் பரிணுமமாகும் பாலாகிய தயிர்போலன்றி, ஏகதேசம் வேறுபடும் நெய்யினி லிருந்து புழுத்தோன்றுதல் போல, பரசிவனுல் செயற்படும்; அச் செயற்பாடே சாந்தியாதீத கலேயாகும். அச் சுத்தமாயையின் பரிணுமமே சாந்தி முதலிய புவன உருவாகும்; இந்த ஐந்துகலே என்னும் புவனங்களே மேலே புவனுத்துவாவை விளம்புமிடத்து சிவாகமம் கூறுமாறு கூறுதும். (எ-று) 36

## குறிப்பு

பாலினுண்டாகிய தயிர்போல முழுவதும் பரிணமித்தலும், நெய்யினுள் உண்டாகிய புழுப்போல ஏகதேசம் பரிணமித்தலுமெனப் பரிணுமம் இருவகைப்படும்.

நிவிர்த்தி முதலிய ஐந்து கலேகளும், சத்திதத்துவத்தில் புவன ரூபமாகிய நிவிர்த்தி முதலிய ஐந்து கலேகளும் வேருயினும் பெயரொற்றுமை பற்றி ஒன்ருக வைத்து ஓதுவர்.

174. அத்தகைய விந்துவின்றன் விருத்தி யாகும்
அரியசிவம் சதாசிவம்நன் மகேசம் சுத்த
வித்தையே யெனுநான்கும் நனிபெரிய ராய
விறலுருத் திரர்தமவாய் நின்று சுத்த

தத்துவமென் பெயர்புனையு மாமா யைக்கும்
தக்கசிவ தத்துவப்பேர் தரித்த லாலே
உயத்தவதன் காரியமாஞ் சத்திக் கொன்றென்
றுபசரித்த லாலதன்பேர் உரைக்கும் நூலே.

இ-ள் : படம் குடிலானற்போல, அத்தகைய சுத்தமாயையின் விருத்தியினல் ஆகும் சிவதத்துவமும் சதாசிவ தத்துவமும் மகேச தத்துவமும் சுத்தவித்தை என்னும் தத்துவமும் ஆகிய நான்கும், இவை மிகப் பெரியவராகிய உருத்திரர் தங்கட்குரியனவாய் நின்று சுத்ததத்துவம் என்னும் பெயரைப் பெறும். சுத்த மாயைக்குச் சிவதத்துவம் என்று ஒரு பெயரிருத்தலால் அதன் காரிய சத்திக்கும் ஒன்றென்று உபசரித்துக் கூறுவதால் இந்த நான்கிற்கும் சிவதத்துவம் என்று ஒரு பெயரைச் சிவாகமம் உரைக்கும். (எ-று) 37

175. சத்திதத் துவமெனவே வேறு பாடு
தரச்சொல்லும் தத்துவப்பிர காசத்து ளீண்டச்
சுத்ததத் துவவுதயம் உரைப்பில் அவ்வைந்
தொழிற்பரமன் உலகாக்கு மிச்சை யால்தன்
சத்திருச் சந்நிதிக்கே தான்கைக் கொள்ளும்
சத்தியாம் விந்துவினைக் கலக்கம் செய்ய
வைத்தவெழில் சாந்திமுதற் புவன நாத
வடிவெனும்முன் பரிணமம் சத்தி யாகும்.

(இ-ள்): தத்துவப்பிரகாசம் என்னும் நூலுள் நான்கு தத்துவத்திற்கு மேலும் சத்தி தத்துவம் என வேருரு தத்துவம் கூறப்படும். இங்கே மேற்கூறிய சுத்ததத்துவங்களின் தோற்றத்தைக் கூறினல், ஐந்து தொழில் செய்வதற்குரிய பரமேசுவரன், உலகங்களைப் படைக்க வேண்டும் என்ற இச்சையால், தாதான்மிய சத்தியின் முன்னதாகத் தன்வசமாய் இருக்கும் பரிக்கிரக சத்தியாகிய விந்துவினைச் செயற்படுத்த, சாந்தி முதலான புவனநாத வடிவெனும் முதற் பரிணமம் சத்தி என்று கூறப்படும். (எ-று) 38

176. நயந்தசிவ தத்துவமாம் நாமம் கொள்ளும்
நாதம்நிர வயவமென நாட்ட லாலாண்
டியைந்துளவிந் திகைமுதலாம் புவன மெல்லாம்
இசைத்தடைத்த இலக்கணையாற் சாந்தி யென்னும்
தயங்குகலை மத்தகத்திற் கூறப்பட்ட
சத்திமுதல் தத்துவங்கள் நான்கும் ஆயின்
உயர்ந்தஅவ யவமுடைய என்ற நூலின்
உட்கிடையென் றறிசதா சிவமேற் சொல்வாம்.

*இ-ள்: சுத்தமாயையின் விருத்தியாகிய நான்கு தத்துவத்துள், முதற்கண்ணதாய் உள்ள சிவதத்துவம் என்ற பெயருள்ள நாத தத்துவம் நிட்களமாதலால் நிரவயவமென (அவயவம் இல்லாத தென, கூறப்படுதலால் ஆண்டு இயைந்துள இந்திகை முதலிய பத்துப் புவனங்களெல்லாம் இலக்கணை விதியினுலே சாந்தி என்னும் கலையின் உச்சியிற் கூறப்பட்டனவேயாகும். சிவதத்துவம் நீங்கலான சத்தி முதலான தத்துவங்களை ஆயின், அவற்றை அவயவ முடையன என்பதே சிவாகமக் கருத்தாம். இனிச் சதாசிவ தத்துவத்தை மேற்கூறுவாம். (எ-று)* 39

177. தன்னைநிகர் சிவஞானக் கிரியா சத்தி
சமநிலைவந் ததிட்டிக்கப் பட்ட விந்து
என்னுமத னிடையிரண்டாம் பரிணு மந்தான்
இருஞ்சதா சிவமெனவே இசைப்பர் நல்லோர்
அன்னலவிவ் வுலகவினை முதலா வார்தம்
அதிட்டானத் தாற்கிரியா சத்தி மிக்க
மன்னியவிந் துவின்மூன்றும் பரிணுமத்தை
மகேசதத் துவமெனவே வகுப்ப ரன்றே.

*இ-ள்: தன்னைநிகர் பரசிவனுல், தனது ஞானசத்தி கிரியா சத்தி என்ற இரண்டு சத்தியும் சமநிலை பெற்றுநிற்க அதிட்டிக்கப்பட்ட விந்துவின் இரண்டாம் பரிணுமத்தை நல்லோர் சதாசிவ தத்துவமெனக் கூறுவர். உலகவினைக்கு நிமித்தகாரணமாயுள்ள பரமசிவன் கிரியாசத்தி மிக்குநிற்கச்*

செய்த அதிட்டானத்தால் விந்துவில் உண்டாகிய மூன்றும் பரிணமத்தை நல்லோர் மகேச தத்துவம் என்று கூறுவர். (எ-று)40

178. அத்தகைய வதுகிரியா சத்தி தன்ஞல்
அதிட்டிதமா தலினகில கருத்தா வாயிற்
றெய்த்தலில்விந் துவின்நான்காம் பரிண மந்தான்
எழுகோடி மந்திரங்கட் கிடமா மாற்றூல்
உய்த்தமுழு துணர்வுதனின் மேவு வோர்கட்
குதவலுறு ஞானசத்தி மிகலாற் சுத்த
வித்தையென ஒருபெரும்பேர் பெற்ற தென்று
விமலனருள் ஆகமங்கள் விளம்பு மன்றே.

இ-ள்: விந்துவின் முன்றும் பரிணமமாய் வந்த மகேச தத்துவ மான அது, கிரியாசத்தி தன்ஞல் அதிட்டிக்கப்பட்டதால் எல்லா உலகங்கட்கும் கருத்தா வாயிற்று. பரமசிவன் ஞானசத்திமிக்கு விந்துவினை அதிட்டிக்க, உண்டாகிய நான்காம் பரிணமந்தானே எழுகோடி மந்திரங்கட்கு இடமாயிருக்கும் முறைமையால், எல்லா வற்றையும் உணரும் உணர்வுதனின் மேவுவோர்கட்கு உதவுகின்ற ஞானசத்தியே மிகலான், சுத்தவித்தை எனக்கூறும் ஒரு பெரும் பெயரைப் பெற்றதென்று சிவாகமம் கூறும். (எ-று) 41

179. விளம்புறும் இங்கிலையசிவ தத்து வங்கள்
விசித்திரமாம் புரங்களெழின் மிக்க மாதர்
துளங்குதுய ரறநனிஅற் புதத்த வாய
துப்புரவு தனுநுகரிந் தியங்க ளென்ன
உளங்கவரு மிவைமுதலா யினபொ ருந்தி
ஒளிர்தருமிங் கிவற்றமைந்த புவனம் முன்னர்
அளந்துரைசெய் திடவிருந்த புவனந் தம்மோ
டறைகுதும்நாம் முதனூலுள் அறைந்த வாறே.

இ-ள்: மேற்கூறிய இவ்வியல்புடைய சிவதத்துங்களானவை விசித்திரமாகிய புவனங்களும், அழகுமிக்க பெண்களும், துன்பம் நீங்க மிகவும் அற்புதத்தவாகிய உண்ணும் பொருள்களும்

உடம்பும் இன்பம் நுகரும் இந்திரியங்களும் என்று கூறும் இவை முதலாயின பொருந்தி விளங்கும். இத்தத்துவங்களில் அடங்கியுள்ள புவனங்களை முன்னர் எண்ணிக்கூறும் புவனங்களுடன் சொல்லுவோம் சிவாகமப்படி. (எ-று) 42

## குறிப்பு

"இவை ஐந்தும், சுத்தமாயையின் விருத்தியாய்த் தம்மை அதிட்டிக்கும் முதல்வனுக்குரிய பெயர்களையுடையவாய் முறையே பத்தும் ஐந்தும் ஒன்றும் எட்டும் ஒன்பதும்மாகிய புவனங்களை யுடையவாய் முதல்வனுக்கு இலயம் போகம் அதிகாரம் என்னும் அவத்தைக் கிடமாதற் பொருட்டும், சிவ தீக்கையான் பசுத்துவம் நீங்கி வாசனாமலமாத்திரம் உடையவராய் இலயிகள் போகிகள் அதிகாரிகளென நிற்கும் ஆன்மாக்கள் விசித்திரமாய்ச் சுத்தமாய் இன்பமயமாகிய போகங்களைத் தாம தாம் இச்சித்தவாறே அனுபவித்தற்பொருட்டும் உளவாயின வென்க." என்னும் (சூ-2; அதி-2) சிவஞானபாடியத்தை ஒப்பு நோக்குக.

180. தூயசிவ தத்துவத்து வழங்கா நின்றோர்
துடக்குமுடம் பிந்தியங்க ளுடைய ரேனும்
மேயசிவன் ஒளியாற்பே ரறிஞ ராவர்
வேறுளர்போல் அஞ்ஞான முடைய ரல்லர்
ஆயிடையூண் இச்சானு சாரி யாகும்
ஆதலால் வினைதரும்ஊண் அன்று மற்றை
மாயையுறு நுகர்வுவினைப் போகம் இச்சை
வழித்தன்று நுகர்ந்தலது மாறா தென்றும்.

இ-ள்: சுத்தமாயையின் விருத்தியாகிய தூய சிவதத்துவ புவனங்களில் வாழ்பவர் உடம்பும் இந்திரியங்களும் உடையவரேனும் பரமசிவனுடைய பேரொளியால் பேரறிஞராவர்; அவர் அசுத்த மாயா புவனங்களில் வாழ்பவர்போல் அஞ்ஞானமுடையரல்லர்; ஆயிடை அவர்கள் ஊண் தாம் தாம் இச்சித்தவாறே நுகர்வதாயிருக்கும். ஆதலால், அவர்கள் ஊண் இருவினைதரும் ஊணன்று. சுத்தமாயை நுகர்வு தவிர, மற்றைய மாயையின் நுகர்வு இருவினை நுகர்வாம்; அவரவர் இச்சையின் வழி நுகர்வதன்று; இருவினை நுகர்வு நுகர்ந்தாலல்லது என்றும் மாளாதாம். (எ-று) 43

181. ஆண்டுமல பாகம்மிக உடையன் யாவன்
அவன்போக தத்துவத்துள் போகி யாவன்
பூண்டமல பாகமுறு தகைமைக் கேற்ற
போகிகளா குவரீச தத்து வத்து
மாண்டசெய லவத்தையினும் பிறரென் றோர்க
மற்றவருள் விளக்கவதி கார சத்தி
ஈண்டுமவற் கீசம்தூ லாதி காரிக்
கிருஞ்சுத்த வித்தைநுகர் பொருள வாகும்.

*இ-ள்: மலபக்குவம் மிகுதியாக உடையவன் எவனோ அவன், சதாசிவதத்துவமாகிய போக தத்துவத்துள் இன்பத்தை நுகர்பவனாயிருப்பன்; மேற்கொண்ட மலபரிபாகம் உறும் தகுதிக்கு ஏற்ற இன்பானுபவம் உடையவராயிருப்பர், ஈசுர தத்துவத்திலே அட்டவித்தியேசுரர் உருத்திரர் முதலான பிறரென்க. அவருள் சூக்கும அதிகாரசத்தி உடையவர்க்கு ஈசுர தத்துவமும், தூல அதிகார சத்தி உடையவர்க்கு சுத்தவித்தையும் நுகர் பொருள ஆகும். (எ-று)* 44

இலயதத்துவத்திற் சேர்ந்தோர் நிலையும்,
அசுத்தமாயையின் திறமும்.

182. நின்றிலய தத்துவத்திற் கூட்டப் பட்டோன்
நிருமலனாய்த் தத்துவா தீதன் போன்று
நன்றபர முத்தனெனப் படுவ னென்னு
நவில்வரறி வனவறிந்தோர் நயந்திவ் வாறு
மின்றிகழும் மாமாயை விதியு ரைத்தாம்
மேலசுத்த மாயைதிறம் விரித்து ரைப்பாம்
கொன்றைமுடி மதியரவின் படத்து நீர்செய்
குளிர்க்கொதுங்கு மிறைவனுரை கொண்டு மாதோ.

*இ-ள்: அறிவன அறிந்தோர் இலயதத்துவத்தில் (சிவ தத்துவம் சத்திதத்துவம்) சேர்ப்பிக்கப்பட்ட உயிர் மலசத்தி யில்லாதவனாய்த் தத்துவங்களைக் கடந்தவன்போன்று அபரமுத்தன்*

என்று கூறப்படுவன் என்று கூறுவர். இவ்வாறு சுத்தமாயைத் திறம் கூறினும். இனிமேல் அசுத்தமாயையின் திறத்தைச் சிவாகமம் கூறும் முறைப்படி விரித்துக் கூறுவாம். (எ-று) 45

அசுத்த மாயை

183. மலினமுறு தத்துவகா ரணமாம் மாயை
மற்றதுதான் சடம்சடமா யநேக மாயின்
தொலைதலுறு கடாதிகள்போ லதனல் ஞாலத்
தோற்றமுரு தாதலினல், ஒன்ருய், நித்த
நிலைமையுறும் அமூர்த்தனு தலினுன் மாவின்
நிலாதுவினை தனதுகா ரியமாம் புத்தித்
தலையுறலின், அதற்கிடமாய் அசுப மாகிச்
சகலரெனப் படுமுயிர்க்குப் பொதுவாய் நிற்கும்.

இ-ள்: கலைமுதல் நிலம் ஈருகிய மலின தத்துவங்கட்குக் காரணமாகியது அசுத்த மாயையாம்; அதுதான் சடமாகும்; அது சடமாய் அநேகம் ஆயின் அழியும் கடம் முதலிய காரியப் பொருள் போல் கருதப்பட்டு அதனல் உலகத் தோற்றம் உண்டாகாது; ஆகையால், அது ஒன்ருய் நித்தியமாயிருக்கும்; உயிர் அமூர்த்தன் ஆதலின் அதனிடத்தே நில்லாமல், இருவினை தனது (அசுத்த மாயை) காரியமாகிய புத்திதத்துவத்தில் இருத்தலால் அதற்கு இடமாய் அசுபம் ஆகி சகலர் எனப்படும் உயிர்க்குப் பொதுவாய் (அசுத்த மாயை) நிற்கும். (எ-று) 46

184. முடிவிலொடுங் குடம்புடைத்தாய்க் கருமி என்ன
மொழியுமுயிர்க குதயத்திற் பருமை நுண்மை
உடன்முதல்வந் தெழுதருகா ரணமாம் மாயை
உரைத்தவது வேதாந்தி யுரைக்கு மாபோல்
கெடலுடைய அநிர்வசனி யன்றுண் டாகிக்
கிளர்பொருடான் பொருளலதிற் கிளைப்ப தின்றும்
அடைவுறுமெவ் வளவைகளும் தருகா லாதி
அகிலமுத வுறுமாயை பொருண்மை யேயாம்.

*இ-ள்:* *இறுதிக் காலத்திலே ஒடுங்கும் உடம்பினை உடையதாய்க் கன்ம மலத்தை உடையவன் என்று கூறப்படும் உயிர்க்குப், பிறப்புக் காலத்திலே பெரிதும் சிறிதுமான (தூல சூக்குமமான) உடல் முதலியன வந்து எழுதருவதற்குக் காரணமாம் மாயையானது வேதாந்தி உரைக்குமாறு போல அநிர்வசனியன்று; ஏனென்றால்? தோன்றும் காரியப்பொருள்தான் பொருள் அல்லாத ஒன்றிலிருந்து தோன்றுவதில்லையாம்; அடையும் எல்லா அளவைகளையும் தரும் காலம் முதலிய உலக மாகிய காரியப்பொருளைத் தரும் மாயையானது (அநிர்வசனி யன்று;) உண்டென்று கூறும் பொருளேயாகும். (எ-று)* 47

## மாயை நுண்மையுள் நுண்மை என்பது

**185. திண்ணியமண் முதலாம்பூ தத்தில் தன்மாத்**
**திரைகள்வற் றிற்கிளராங் கார மென்ன**
**பண்ணதனின் இரும்புத்தி யதனின் மூலப்**
**பகுதியதிற் கலாதிவருக் கங்கண் மற்றிங்**
**கெண்ணுமவை தம்மின்மிகு மாயை சூக்கம்**
**எனப்படுமம் மாயைசிவ ஞானை யுய்க்கும்**
**கண்ணரனந் தேசபரிக் கிரக மாகிக்**
**கலாதிதரும் தன்னொருபாற் பரிணா மித்தே.**

*இ-ள்:* *திண்மையான நிலம் முதலிய பூதங்களைக் காட்டிலும் தன்மாத்திரை நுண்மையாம்; தன்மாத்திரையில் அகங்காரதத்துவம் நுண்மையாம்; அகங்காரத்தில் புத்திதத்துவம் நுண்மையாம்; புத்திதத்துவத்தில் மூலப்பிரகிருதி நுண்மையாம்; மூலப்பிரகிருதியில் கலாதி வருக்கங்கள் நுண்மையாம்; இவற்றைக் காட்டிலும் மாயை நுண்மையாம்; அம் மாயையைச் சிவன் ஆணை (சிற்சத்தி) செலுத்தும்; அது இறைவனிடத்தே பரிக்கிரக சத்தியாயிருந்து ஒருபால் பரிணமித்துக் கலை முதலாம் தத்துவங்களைத் தரும். (எ-று)* 48

## அசுத்த மாயையின் இலக்கணம்

**186.** **புனிதமறும் உலகத்தின் படைத்தல் காத்தல்**
**போக்கலெனு மிவற்றின்கா ரணமா மாயை**
**வனேதலுறும் உபாதான மாதல் தன்ருல்**
**வளர்த்தலால் ஆதார மாத லாற்ருன்**
**நினேதலுறு பரமகா ரணமாய் நின்று**
**நித்தமாய்த் தன்செயலின் வியாபி யாகி**
**வினேதபுத லுறுமளவும் பந்த மாகி**
**விளிதலிடை ஒடுங்குகா ரியத்த தாமே.**

*இ-ள்:* புனிதமில்லாத இவ்வுலகத்தின் படைத்தல் **காத்தல்** போக்கல் எனும் இவற்றிற்குக் காரணமாம் மாயை **யானது உபாதான** காரணமாயிருத்தலானும், ஆதாரமாதலானும் **இவ்வுலகத்திற்குப்** பரமகாரணமாய் நின்று நித்தமாய்த் தன் **காரியத்தில்** வியாபியாகி கன்மமலம் கெடும்வரை உயிர்கட்குப் **பந்தமாகிப் பிரளய** காலத்தில் ஒடுங்கும் காரியங்களே உடையது **(எ-று)** 49

## இதுவும் அது

**187.** **அறைந்தவது நிலேயாமை யசுத்தந் துக்கம்**
**அஞன்மாவென் றிவற்றின்முறை நிலேமை தூய்மை**
**நிறைந்தசுகம் ஆன்மாவென் கின்ற புத்தி**
**நிகழ்த்திமோ கினியாய்ச்சித் திரத்த வாகப்**
**பிறந்தபல சத்தியுடைத் தாகி நின்று**
**பெயரசுத்த மாயையச் சிவங்கி ரந்தி**
**செறிந்தவிவை முதலாய செறியு மென்பர்**
**தெளியவதன் காரியங்கள் செப்பு வாமே.**

*இ-ள்:* மேலே கூறிய மாயையானது, நிலேயாமை **அசுத்தம் துக்கம்** அஞன்மா என்றிவற்றின், முறையே நிலேத்தல் **தூய்மை சுகம்** ஆன்மா என்று மாறுபடக் கருதும் புத்தியை **நிகழ்த்தி,** மோகத்தைச் செய்யும் மோகினியாய்ச் சித்திரத்தை

உடையதாகிப் பிறந்த பல சத்தியுடைத்தாகி நின்று, பெயர், அசுத்தமாயை, சிவங்கிரந்தி முதலியனவாகச் செறியும் என்பர். இனித் தெளிய அதன் காரியங்களைச் சொல்லுவோம். (எ–று) 50

## குறிப்பு

அசுத்த மாயைக்குக் கூறிய இலக்கணங்களை

" உருவாதி சதுர்விதமாய் ஒன்றொன் றெவ்வா
உண்மையதாய் நித்தமாய் ஒன்றாய் என்றும்,
அருவாகிக் கன்மமார் அணுக்கள் யார்க்கும்
ஆவார மாயசித்தாய் அசல மாகி,
விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை யொடுங்க,
வருகாலம் உயிர்களெலாம் மருவிடமாய் மலமாய்
மன்னியிடும் அரனருளான் மாயை தானே " (22)

என்னும் சிவப்பிரகாசப் பாட்டால் அறிக.

### அசுத்தமாயையின் காரியம்

188. அறைதருமம் மாயைகலா திகளை யுடைய(து)
அவற்றினையுற் பத்திமுறை தரவுத்தே சிப்பன்
பெறுகதியிவ் வுலகமெலாங் கடந்தபர சிவன்றான்
பிரளயத்திற் பரிபாக கருமிகடங் கரும
நெறிமுறையின் நுகர்ந்திடக் கலாதிகளாக் குறுவான்
நிகழ்தனது சத்தியியக் குறுமனந்த தேவன்
மறுவறுமொண் சத்திகளால் அவற்குபா தான
மாயைதனைக் கலக்குமென வகுத்தனவா கமங்கள்.

இ-ள்: மேற்கூறப்பட்ட அசுத்தமாயை கலை முதலான காரியங்களைத் தன்பால் உடையது; இவ்வுலகமெலாம் கடந்த பரமசிவன்றான் அக்காரியங்களைத் தோன்றும் முறைப்படிப் படைக்க உத்தேசிப்பன்; பிரளய காலத்தில் பக்குவமடைந்த கன்மமலத்தையுடைய உயிர்கள் தம் கன்மத்தை முறைப்படி நுகர்ந்திட கலைமுதலான தத்துவங்களை ஆக்கவேண்டி நிகழ் தனது (பரமசிவனது) சத்தியினால் இயக்கப்படும் அனந்ததேவன் தன்

சத்திகளால் அவற்கு உபாதான காரணமாய் நிற்கும் மாயையைச் செயற்படுத்தும் எனச் சிவாகமங்கள் வகுத்துக் கூறின. (எ–று) 51

## குறிப்பு

"அருத்திமிகும் கலைகாலம் நியதியுடன் வித்தை அராகமிவை அனந்தரால் மாயைதனி லாகும்" (26) என்பது சிவப்பிரகாசம்.

## காலம் முதலிய ஐந்தும் தோன்றல்; புருடதத்துவம்

189. கலங்கலுறு மதுகிருத கீடநியா யத்தால்
கவின்றதன தேகதே சம்பரிணா மிப்ப
இலங்கமுதல் வரும்காலம் நியதிகலை என்ப
இக்கலையில் இராகமொடு வித்தை யுளவாகும்
பலங்கள்தரும் இவ்வைந்து தத்துவமும் பகரில்
பஞ்சகஞ் சுகங்களெனப் படுமிவற்றை மருவி
உலைந்துதிரி மலினான்மா மிகுபகுதி நுகர்வான்
உத்தியுத்த னாம்பொழுதில் புருடனெனப் படுமே.

இ–ள்: அனந்ததேவ நாயனாரது சத்தியால் செயற் படுத்தப்பட்ட அசுத்தமாயையானது கிருதகீட நியாயத்தாலே தனது ஏகதேசம் பரிணமிப்ப, முதலிலே காலமும் நியதியும் கலையும் வரும் என்ப. இக் கலாதத்துவத்தில் இராகமும் வித்தையும் உளவாகும்; பயன்தரும் இவ்வைந்து தத்துவமும் பகரில் பஞ்சகஞ்சுகங்களெனப்படும். அவிச்சை முதலிய குற்றங்களுடன் கூடிய ஆன்மா, இவற்றை மருவி, பிரகிருதியை நுகரவேண்டி உத்தியுத்தனாம் பொழுதில் புருடன் என்று கூறப்படும். (எ–று) 52

## குறிப்பு

கிருத கீட நியாயம் – நெய்யின் ஒரு பகுதி புழுவாய் பரிணமித்தல் போல்வது. பஞ்ச கஞ்சுகம் – ஐந்து சட்டை. உத்தியுத்தனாதல் – உன் முகனாதல், செயலில் கூடியவனாதல். மலினம் – அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை, சினம் என்னும் ஐந்து.

இப்பாட்டின் பொருளுடன், "இங்ஙனம், கலை முதலிய பஞ்ச கஞ்சுகத்துடன் கூடிப் பொதுமையால் போத்திருத்துவம் எய்தி நின்ற ஆன்மா, பிரகிருதிமாயைப் போக நுகர்ச்சியின் உன் முகத்திற் கேதுவாகிய அவிச்சை முதலிய பஞ்சக் கிலேசமென்னும் பும்ஸ்த்துவ மலமுடையவனாய்ப் புருட தத்துவமென நிற்பன்." (சூ-2. அதி-2) என்னும் **சிவஞான பாடியத்தை** ஒப்பு நோக்குக.

190. **சொல்லியமா யையிற்பகுதி தத்துவம்வந் துதித்துத்**
**தூலமாம் கலையினுல் பகுதி தன்னில்**
**வல்லபர சிவசத்தி சம்பறகத் தானே**
**மல்குபல சத்திபெறு சீகண்ட தேவன்**
**நல்லருளின், வரும்குண தத் துவம்; அதன்கட் புத்தி**
**நணுகுறுமப் புத்தியிடை ஆங்காரம் வருமால்**
**அல்லலறு தைசதவை காரிகபூ தாதி**
**யாங்கார மெனமூன்று வகைப்படுமாங் கதுவே.**

*இ-ள்:* அசுத்த மாயையில், பிரகிருதி மாயை என்னும் தத்துவம் வந்து உதித்து நிற்கத் தூலமாம் கலையினுல், பிரகிருதி மாயையில் பரசிவசத்தியின் சேர்க்கையால் பல சத்திகளைப் பெறும் சீகண்ட உருத்திரரது நல்ல அருளால் குணதத்துவம் வரும்; அதன்கண் புத்திதத்துவம் வரும்; அப் புத்தியிடை அகங்கார தத்துவம் வரும்; அவ் வாங்காரம் தைசதம், வைகாரிகம் பூதாதி என மூன்று வகைப்படும். (எ–று) 53

## குறிப்பு

பகுதி – மூலப் பிரகிருதி. "போக்கிய ரூபமாய் நின்ற தத்துவப் பிரபஞ்சங்கட்கெல்லாம் இது மூல காரணமாதல்பற்றி மூலப்பகுதி என்றும், பிரகிருதி மாயை என்றும், பிரதான மென்றும், மானென்றும், முக்குணங் களும் வியத்தமாய் விளங்காது மயிலண்ட சலத்திற் பஞ்சவன்னம்போலச் சூக்குமமாய் நின்ற அவத்தையுடைமை பற்றி அவ்வியத்தம் என்றும் வழங்கப்படும்" (சூ–2; அதி–2) என்பது **சிவஞானபாடியம்.**

191. **சத்துவமோ டிராசதந்தா மதமெனுமுக் குணங்கள்**
**தகுமுறையின் மிக்கனவவ் வாங்கார மூன்றும்**
**மெத்தொளிசெய் தைசதவாங் காரத்து மனமும்**
**மிளிர்புத்தி யிந்தியமும் வரும்; வைகா ரிகத்தில்**

ஒத்தகரு மேந்தியங்கள் வரும்பூதா திகத்தில்
உறுந்தன்மாத் திரையவற்றின் ஐம்பெரும்பூ தங்கள்
வைத்தமுறை வருமினிய தத்துவங்கட் கெல்லாம்
வழங்குமுறை இலக்கணம்நாம் வகுத்துரைசெய்
குதுமால்.

இ-ள்: அந்தத் தைசதம் வைகாரிகம் பூதாதி என்னும் ஆங்காரம் மூன்றும், முறையே சத்துவ குணம், இராசத குணம், தாமத குணம் என்னும் முக்குணங்கள் மிக்கன. அவற்றுள் தைசத ஆங்காரத்து மனமும் ஞானேந்திரியமும் வரும்; வைகாரிகத்தில் கன்மேந்திரியம் வரும்; பூதாதிகத்தில் தன் மாத்திரை அவற்றில் ஐம்பெரும் பூதங்கள் முறைப்படி வரும்; இனிமேல் அத்தத்துவங்கட் கெல்லாம் வழங்குமுறை இலக்கணத்தை நாம் வகுத்துரை செய்குதும். (எ-று) 54

## தத்துவ இலக்கணம்
### கலை வித்தை

192. ஆணவவன் மலம்மறைக்கு முயிர்க்குவினைப் போகம்
அசம்பவமாம் ஆதலினவ் வினைநுகர்விற் காகப்
பூணும்வினை இயைபாலம் மலமறைப்போ ரிடத்துப்
போக்குபுஞா னக்கிரியை விளக்குமிது கலையாம்
மாணவரு கலைவிளக்கும் அறிவுதொழி லுறுமான்
மாவின்ஒளி ரிந்தியங்கள் கவர்பொருளைப் புத்தி
கோணிலையி னிச்சயிப்ப அப்புத்தி தன்னைக்
கோடற்கு வருகரண மாவதுதான் வித்தை.

இ-ள்: ஆணவம் என்னும் வலிய மலத்தால் மறைக்கப் பட்ட உயிர்க்கு வினை நுகர்ச்சி உண்டாகாது ஆதலால், அவ் வினை நுகர்ச்சிக்காக அவ்வான்மாவிற்கு வினை பூணும் இயல் பால், அவ்வாணவமல மறைப்பு போக்கி, அதன் ஞானசத்தி கிரியாசத்திகளை விளங்கச் செய்யும் தத்துவம் கலையாகும். அக்கலை விளக்கும் அறிவு தொழில்களைப் பெற்ற ஆன்மாவின் ஞானேந்திரியங்கள் கவரும் பொருளைப் புத்தி தத்துவமானது

கொள்ளும் முறையில் கொண்டு நிச்சயிப்ப, அப்புத்தியைக் கொள்வதற்கு வருகருவி வித்தை என்னும் தத்துவமாகும். (எ–று) 55

## இராக தத்துவம்

193. நின்றபரக் கிரகமாம் கேவலசிற் சத்தி
நிகழ்போகக் கிரகமாம் புத்திதனைக் கவர்வ(து)
அன்றெனலில் போகஞா னத்திடையான் மாவிற்(கு)
அருங்கரணம் வித்தையே ஆகுமென அறிக;
பொன்றலுறு மவைராக்கிய மெனப்பேர் கூறும்
புத்திதரு மத்தினுமார் விடையகுணங் களினும்
மன்றவயற் பொருளாகிப் பகுதிதரும் பொருளின்
வளர்தரும்வே ணவாவுயிர்க்கு வழங்குவதே இராகம்.

**இ–ள்:** நிலைபெற்ற மேலான பொருளைக் கிரகிக்கும் ஆன்மாவின் தனித்த சிற்சத்தியானது, போகங்களைக் கிரகிக்கும் புத்தி தத்துவத்தை (உயிரின் புத்தி தத்துவத்தை)க் கவர்வதில்லை என்று கூறப்படுதலால், ஆன்மாவிற்குப் போக ஞானங்களிடையே கருவியாயிருப்பது வித்தை என்னும் தத்துவமே ஆகும் என அறிக; பொன்றும் அவைராக்கிய மெனப்படும் புத்தியின் தருமத்தினும் விடைய குணங்களினும் வேறுயிருந்து மூலப் பிரகிருதி தரும் பொருள்களில் வேட்கையினையும் அவாவினையும் உயிர்க்கு வழங்குவதே இராக தத்துவமாம். (எ–று) 56

### குறிப்பு

ஆன்மாவின் போக ஞானத்திடைக் கருவியாவது வித்தையே என்பதை, "அற்றேல், ஆன்மாவின் ஞான சத்தியே அதற்குக் கருவியாம் என்றூற்படும் இழுக்கென்னையெனின், அற்றன்று; இயல்பானே நிரதிசய வின்பத்தினை நுகர்வதாகிய ஆன்மாவின் ஞானசத்திக்கு, யான் இன்ப முற்றேன் துன்பமுற்றேன் என்று இன்பதுன்பம் முதலிய ஞானங்களை அறிதல் செயற்கையானன்றி ஏலாமையின், ஞானசத்தி கருவியென்பார்க்கும் வித்தையொடு கூடிக் கருவியாமென்றல் வேண்டுமாதலின், ஒரு தலையான் வேண்டப்படும் வித்தையே ஆண்டுக் கருவியெனக் கொள்க." (சூ-2; அதி-2) என்னும் சிவஞானபாடியத்தால் அறிக.

194. புத்தியது தருமமெனும் அவைராக்கி யத்தால்
புகன்றிடுமவ் விராகம்வா தனையுருவாம் வேறு
தத்துவமாய் உயிர்தனக்குப் போகோப காரி
தானகா தென்னையெனில் சாற்றியபுத் திக்கு
வைத்தஅறி(வு) அறியாமை முதற்பகைத்த அனந்த
வாதனைகள் உளஅவைதாம் ஒன்றினையொன் றழிக்க
மெய்த்தவுயிர் நுகர்ச்சிநிலை யின்றாகு மதனல்
வேறாகிப் போகசத்தி விளைப்பதுவே யிராகம்.

*இ-ள்: புத்திதத்துவத்தின் இயல்பு என்று கூறப்படும் தன்மம் முதலான எட்டனுள் இராசத குணத்தால் உண்டாவதாகிய அவைராக்கிய மாகிய அராகமே உயிர்க்குப் போக இச்சையை உண்டாக்குதலால் இங்கு கூறப்படும் இராகதத்துவம் வாசனா ரூபமாகிய வேறு தத்துவமாயிருந்து, உயிர் தனக்குப் போக அனுபவத்தில் உபகாரம் செய்யும் கருவியாகாது; அதனல், அத்தத்துவத்தாற் பயன் என்னை எனின்? மேற்கூறிய புத்திக்கு அறிவு அறியாமை, அறம் பாவம், வைராக்கியம் அவைராக்கியம், செல்வம் வறுமை முதலான மாறுபட்ட அனந்த வாதனைகள் உள்ளன. அவைதாம் ஒன்றனை ஒன்றழிக்க அப்புத்திதத்துவம் கருவியாக உயிர்க்குப் போக நுகர்ச்சிநிலை உண்டாகாதாம்; அதனல், புத்தி தத்துவத்தின் வேறாகி உயிர்க்குப் போக சத்தி விளைப்பதுவே இராக தத்துவமாம். (எ-று)* 57

## விடைய குண விசேடமே அமையும் இராகதத்துவம் வேண்டாம் என்பாரை மறுத்ததும் காலதத்துவமும்.

195. விடையகுண விசேடமே காரணமாம் ஆயின்
வீதரா கிகள்தமக்கு விடையவிருப் பினையிங்
கடைவுதர உதவுரு மையினதுதான் அன்றும்
ஆதலினல் இராகம்வே றாகுமிவை மூன்றில்
தொடருமுயிர் தனக்குமிகை குறையாகி இலவை
துடிமுதலாம் விருத்திகளால் தனுமுதலா மவற்றைக்
கடவுவது காலம்; நுகர் சஞ்சிதா தியைத்தன்
கழிவுநிகழ் வெதிர்வெனுமூ விருத்திகளாற் றருமே.

இ-ள்: உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் முக்குணத்தினின்றும் தோன்றியவாதலின் சத்துவ குணப்பொருள் இன்பவடிவாயும், இராசத குணப்பொருள் துன்பவடிவாயும், தமோகுணப்பொருள் மோகவடிவாயும் நிற்பனவாதலால், இன்ப வடிவாய் நிற்றலும் பெற்றும்; அதுவே (விடையகுண விசேடமே) சிறப்புவகையானும் பொதுவகையானும் இச்சையை நிகழ்த்திப் போகம் நுகர்தற்கேதுவாம்; ஆன்மாவின் இச்சாசத்தியை எழுப்ப அராகதத்துவம் வேண்டாம் எனின், பற்றற்றவர்க்கு விடையகுண விசேடம் விருப்பத்தைத் தராமையால் விருப்பத்தைத் தருதற்கு விடையகுண விசேடம் காரணமாகாது; அதனால் இராகதத்துவம் என்ற வேறொன்று உயிரின் இச்சாசத்தியை விளக்கி வேட்கையையும் அவாவையும் உண்டாக்க வேண்டுமென்க. கலை வித்தை இராகம் என்னும் மூன்றினால் தொழிலும், அறிவும், இச்சையும் விளங்கிப்போக நுகர்ச்சியைத் தொடரும் உயிர்க்கு மிகுதியும் குறைவும் ஆகி, இலவை, துடி முதலான பலவேறு வகைப்பட்ட விருத்திகளால் உடம்பு முதலானவற்றை இயக்கிப் போகவரையறை செய்வது காலதத்துவமாம். அக்காலம் உயிர் நுகரும் சஞ்சிதம் முதலிய வினையை இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் மூன்று விருத்திகளால் தரும். (எ-று) 58

**196. ஆதலினிங் ககாலத்தில் பிறப்பவர்மாய் பவரில்**
**ஆங்கடத்திற் காழிமுத லனபோல எவைக்கும்**
**போதுபிர வர்த்தகமாம் காலமென அறிக**
**பொருட்பிரவர்த் தனைதனக்குப் பொருந்தலுறு வினையே**
**ஏதுவெனில், இவ்வினையுந் தற்காலந் தனிலே**
**இசைந்துவழங் குறலின்வினை அன்றுயிற் கால**
**வாதியொடு நியாயனறை குதல்போலக் காலம்**
**மன்னுகருத் தாவாக நிலையாக வென்னில்.**

இ-ள்: ஆகையால், இங்கே காலதத்துவம் இல்லாத பொழுது பிறப்பவர் மாய்பவர் இல்லை; வனையப்படும் கடத்திற்கு சக்கரம் முதலானவை போல எல்லாப் பொருள்கட்கும் துணைக்

காரணமாயிருந்து பிரவர்த்தகமாகும் (நிகழ்விப்பது) காலம் என் அறிக; பொருள்களின் நிகழ்விற்குப் பொருந்தும் வினையே காரணமாம் எனில், – இவ்வினையும் அக்காலத்தோடு சேர்ந்து காரணப் பொருளாக வழங்குதலால் வினையும் காரணப்பொருளே. அன்றியில் காலவாதியொடு நியாயன் கூறுதல் போலக் காலத்தைக் கருத்தாவாக நித்தியமாகக் கூறின். (எ–று) 59

## குறிப்பு

காலம் என்கின்ற ஒன்று எவர்க்கும் எவைக்கும் கருத்தாவாயிருக்கும் என்பது காலவாதியின் கொள்கை.

'காலமெனும் கடவுளினைக் கழியவுள தேதுமில்ல,
ஆலநிழ லமர்ந்தவரும் அரிபிரமா திகளவரும்,
சீலமுடைச் சிருட்டிமுதற் றிகழ்வனவா கச்சுழற்றித்,
தூலமொடு சூக்குமமாய்த் தொடர்ந்துதொடர்ந் தேவருமால்"

என்னும் (உ–காலவாதம்) பெருந்திரட்டில் காலவாதியின் கூற்றால் அறியலாம். நியாயநூலார் காலத்தை ஒன்று, நித்தியம், விபு என்பர்.

197. இறப்புநிகழ் வெதிர்வெனுமூ வுருவாகும் காலம்
இதுசடமாய்ப் பலவெனலாற் கடாதிகள்போ லநித்தம்
உறப்படுமவ் வநித்தமாங் காலத்திற் கில்லை
உயர்கருத்தா வாதலென முன்னமே யுரைத்தாம்
பிறப்புறலின் மாயையின்கா ரியமாக அழிவு
பெற்றிடுமற் றுயின்மாப் பிரளயத்து நியமம்
பெறப்படுத லெங்கனமிக் காலத்தா லென்னில்
பிறழ்வில்விடை யதற்குரைப்பாம் பிறைமுடிநூற்படியே

இ–ள்: காலமானது இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலமென மூன்று வடிவமாகும். காலம் சடமாய்ப் பலவெனலால், கடம் முதலான பொருள்களைப்போல் அநித்தமாம்; உறப்படும் அவ்வநித்தமாங் காலத்திற்கு வினைமுதலாதல் இல்லையென மேல் "அடைவுறு பகுதி காலம் அணுவினைச் சடங்களென்னப்படுதலின் அறிவனன்றிப் பண்ணுத லறியா வன்றே" (30) என்புழிக் கூறினும்; அக்காலம் அசுத்த மாயையிலிருந்து தோன்றுதலின்

அதன் காரியமாக நின்று அழிதலைப்பெறும்; அற்றாயின் மகாப் பிரளயம் நிகழுங்காலத்து இக்காலத்தால் காலவரையறை பெறப் படுதல் எங்கனமெனில்? அதற்குச் சிவாகமப்படி பிறழ்வில் விடை கூறுவாம். (எ-று) 60

198. இப்பிரள யத்துநிய மங்காலம் தனிலாம்
இயல்பிலது போகங்க ளிடைவருந்து வோர்தம்
எய்ப்பறுதற் பொருட்டொருதன் னிச்சையாற் பரமன்
இயற்றுவனு தலிற்கிரியை யுபசங்கா ரத்தில்
வைப்புறுமக் காலம்வேண் டுதலில்லை இறைவன்
மற்றொன்றும் வேண்டாது படைப்பளித்தல் அழித்தல்
துப்புணர்வை மறைத்தலெனு மிவைபுரிவன் எனவே
சொல்வர்சிவா கமமுழுதும் துணிவொடுகற் றவரே.

இ-ள்: மகாப்பிரளயம் நிகழுங்காலத்திலே அது வரை யறையைக் காலத்தினுல் பெறும் இயல்பை உடையதன்று; முதல்வன் இன்பதுன்ப வடிவான போகங்களிடை வருந்தும் உயிர்களின் இணைப்பு நீங்கும் பொருட்டுத் தன் இச்சை ஒன்றி னுலேயே செய்வன்; ஆதலால், சங்காரத்துடன் கூடிய தொழில் நிகழுமிடத்தே அக் காலம் வேண்டுவ தில்லையாம். சிவாகமம் முழுதும் தெளிவாகக் கற்றவர், முதல்வன் வேறொரு பொருளும் வேண்டாமல் படைத்தல், அளித்தல், அழித்தல், உணர்வை மறைத்தல் என்னும் இச் செயலைச் செய்வன் என்று சொல்வர். (எ-று) 61

199. ஆதலினெண் காலத்தின் அவச்சின்ன மாகி
அவிர்தருதன் சத்திசன் னிதியான்மா யையினுல்
போதுறுசங் கற்பகருத் தாவாகி யனைத்தும்
புரிகுவனெம் பரமனெனப் புகன்றுரைப்பர் பெரியோர்
ஓதலுறுங் கலாதிவிருத் திகளாலுண் போகம்
உண்பதற்கு முயங்குமுயிர்க் கருமபலந் தனக்குச்
சேர்தலுமங் கிடையூறவ் விடையூற்றி னழிவிற்
சென்றுபிர விருத்தமா வதுநியதி யாகும்.

இ-ள்: பரமசிவன் சங்கற்ப கருத்தாவாகித், தன் சத்தி சன்னிதியால், மாயையாகிய முதற்காரணத்தால், காலத்துடன் கூடினவனாகி அனைத்தும் இயற்றுவன் என்று பெரியோர் கூறுவர். கலை, வித்தை, இராகம் என்னும் மூன்றால் தொழில் அறிவு இச்சை விளங்கி உண்ணப்படும் போகத்தை உண்பதற்குச் செல்லும் உயிரினது வினைப்பயனுக்கு, அவ்வினைப் பயனை அவ்வுயிர் உண்ணுதவாறு தோன்றும் இடையூறு, அவ்விடையூறின் அழிவில் சென்று பிரவிருத்திப்பது நியதி தத்துவமாகும். (எ-று) 62

200. ஆற்றியதன் கருமபலத் திச்சையிலான் றனையும்
அதுவலிந்து நுகர்விக்கும்; அந்நியதி யின்றேல்,
"போற்றரச ணுணையற ஒருவர்பலம் ஒருவர்
புசித்தற்போல்" ஒருவர்வினை ஒருவரனு பவிப்பர்;
"வேற்றொருவ ரிவ்வாறு கொளாதவகை நல்கும்
வேந்தாணை என" வினைகள் மிசைவிக்கு மதனால்
மாற்றலுறு தனுகரணு திகள்நியத மாமிவ்
வாற்றினால் நியதிப்பேர் வந்ததுதா னதற்கே.

இ-ள்: உயிர் தான் ஆற்றிய நல்வினைப்பயனில் விருப்பும், தீவினைப்பயனில் வெறுப்பும் உடையதன்றே; நியதி தத்துவமானது ஆற்றியதன் வினைப்பயனில் விருப்ப மில்லாதவனையும் வலித்து உண்பிக்கும்; அத்தகைய நியதி தத்துவம் இல்லையாயின், "காக்கும் அரசனுடைய ஆணை இல்லா தொழிய, ஒருவர் தேடிய பொருளை மற்றொருவர் நுகர்தல் போல" ஒருவர் வினையை மற்றொருவர் அநுபவிப்பர்; "வேறு ஒருவர் இதனைப்போல் கொள்ளாதபடி நல்கும் வேந்தனுடைய ஆணையைப் போல" ஈட்டியார் வினைக்குரிய பயனை ஈட்டியாரையே நுகர்விக்கும் அது; அதனால் தனுகரணாதிகள் வினைக்குத் தக்கவாறு நியதம் ஆகும்; இவ்வாறு நியதி செய்வதால் அத் தத்துவத்திற்கு நியதி என்னும் பெயர் வந்தது. (எ-று) 63

குறிப்பு

நியதி, பால், ஊழ், தெய்வம், விதி என்பன ஒருபொருட் கிளவி.

## முதல்வனது ஆணையே போகத்தை நியமிக்கும் என்பாரை மறுத்தது.

201. போகநிய மித்தல்சிவ சத்தியே தனித்துப்
புரியுமெனில், தனிற்பிறிது நியாமிகைஎன் கின்ற
ஏகசிவ சத்திநிய மிக்கும்நிய தியினல்
என்பரா தலிற்போக நியாமிகைதா னேயென்
ருகுமெனின் மற்றையதத் துவம்போல வதனின்
அகன்றிடுவ ரதுபோக சாதனமா மென்னின்
தேகமுறு தத்துவங்கள் பலவுமிலை யாமிச்
செய்கையால் நியதிசிவ சத்தியின்வே ருமே.

*இ–ள் : உயிர்கட்குப் போகத்தை நியமிப்பது நியதி என்னும் தத்துவமன்று. சிவபெருமானுடைய சத்திதானே தனித்து நின்று உயிர்கட்குப் போகத்தை நியமிக்கும் என்று கூறினல், தன்னலே பிறிதொன்றை நியமித்தல் செய்து நிற்பதென்ற காரணப்பெயர் படைத்த ஒன்ருகிய சிவசத்திதானே நியமிக்கும் நியதி தத்துவத்தினலே உயிர்கட்குப் போக நியமனம் உண்டாகும் என்பர். எப்படியும், உயிர்கட்குப் போகத்தை நியமிப்பது சிவசத்தி ஒன்றே என்று கூறில், அச் சிவசத்தி மற்றைய தத்துவம் போலக் கருதப்பட்டுத் தீக்கையில் அத்துவா சுத்தி செய்யும் பொழுது அதனைத் துறப்பர்; அதுவுமன்றி, சிவசத்தியொன்றே பிறிது நியாமிகையாகாது நேரே போக சாதனமாம் என்னில், உடம்பிலுள்ள தத்துவங்கள் பலவும் வேண்டுவதில்லையாகும். இதனல் நியதி என்னும் தத்துவம் சிவசத்தியின் வேருக உயிர்க்கு வேண்டப்படும் (எ–று).* 64

## நியதி தத்துவம் வேண்டாம்; வினையே போகத்தை நியமிக்கும் என்பாரை மறுத்தது.

202. கருமமே போகநியா மிகையாக வென்னின்
கருமமுழ வாதிகள்போல் தன்பலமாத் திரையே
தருவதா தலினுயிர்க்குத் தனதுபயன் றன்னைச்
சம்பந்தித் திடலறியா தாதலின லதுதான்

வரைதரா நியதிபோல் போகநியா மிகையா
மாறிலதென் ருகமநூல் வகுத்துரைசெய் திடும்; மேல்
பொருவிலா அறிவான்மெய்ப் புலமுணர்ந்த பெரியோர்
புருடதத் துவத்தியல்பு புகன்றபடி உரைப்பாம்.

இ-ள்: வினைப்பயனை ஊட்ட நியதி என்கின்ற தத்துவம் வேண்டாம்; வினையே இன்ப துன்பமாகிய போகத்தை நியமிக்கும் என்று கூறின், வினையானது உழவு முதலான தொழில்கள்போல் தனது பயனைமட்டும் தருவதாதலின், உயிர்க்குத் தான்தரும் பயனைச் சேர்த்திடல் அறியாது; ஆதலினால், அவ்வினை தான் வரையறை தராநின்ற நியதி தத்துவத்தைப்போல போகநியா மிகையாமாறிலதென்று ஆகம நூல் வகுத்துரை செய்திடும்; இனிமேல் ஒப்பற்ற நுண்ணறிவால் உண்மையான நூல்களை உணர்ந்த பெரியோர் புருட தத்துவத்தின் இலக்கணத்தைப் புகன்றபடி புகலுவாம். (எ-று) 65

## குறிப்பு

"அங்ஙனம் நியமித்தற்கு இருவினையே அமையும் நியதி தத்துவம் வேண்டாவெனின், – அற்றன்று; இருவினை போகத்தைப் பயத்தன் மாத்திரையே யன்றி, அப்போகங்கள் கருத்தாவைச் சென்றடைவிக்குமாறு செய்யமாட்டா; அடைவிக்குமெனின், ஒரு கருவியும் வேண்டாது உடம்பு முதலியனவும் வேண்டாது இருவினை தாமே போக நுகர்வித்தல் வேண்டும்; அவையெல்லாம் இருவினைகள் போகம் நுகர்வித்தற்குத் துணைக்கருவியாக வேண்டுமெனின், அவ்வாறே நியதி தத்துவமும் துணைக்கருவியாதல் வேண்டுமாகலின் இருவினைதானே நியமிக்கமாட்டாமை யறிக" என்பது (சூ-2; அதி-2) சிவஞானபாடியம்.

## புருட தத்துவம்

203. இத்தகையால் வருபஞ்ச கஞ்சுகமோ டிணங்கி
இரும்பகுதி சாதநுகர் உத்தியுத்த மாகும்
மைத்தனியா ணவமுதல பந்திக்கப் பட்டு
வருசகல னெனுமான்மா புருடனெனப் படுமால்

அத்தகையா கியபுருட தத்துவங்கூ றியபோல்
அசேதனமன் றதுபுருடத் தன்மைமல முறலான்
தத்துவசா லங்களொடு சாற்றினரப் புருடத்
தன்மைமல மறிற்புருட தத்துவமென் பதுபோம்.

இ–ள்: மேலே கூறியவாறு வருகின்ற கலை முதலிய பஞ்ச கஞ்சுகத்துடன் கூடி மூலப்பிரகிருதியின் போக நுகர்ச்சிக்கண் உன்முகமாகும் ஆணவம் முதலியவற்றுல் கட்டப்பட்டுவரு சகலன் எனும் உயிர் புருடன் என்று கூறப்படுவன். அத்தகைமை பெற்ற புருட தத்துவம் மேற்கூறிய தத்துவங்களைப் போல அசேதனமன்று அது அவிச்சை முதலிய பஞ்சக்கிலேசமென்னும் பும்ஸ்த்துவ மலத்தைப் பெற்றிருத்தலால் தத்துவத் தொகுப்புடன் சேர்த்துக் கூறினர்; பும்ஸ்த்வ மலம் நீங்கினல் புருடதத்துவம் என்று வழங்குவது இல்லையாம். (எ–று) 66

## குறிப்பு

பஞ்சக்கிலேசமாவன; அநித்தத்தை நித்தமென்றும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும், தானல்லாத பொருளைத் தானென்றும் திரியக்காணும் உணர்வாகிய அவிச்சையும், அதுபற்றி அவற்றை யானென மதிக்கும் ஆங்காரமும் அதுபற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கட் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கட் செல்லும் கோபமும் என இவை. இப்பஞ்சக் கிலேசமே பும்ஸ்த்துவ (ஆண்மை) மலம் என்ருேதப்படும். இவ்வவிச்சை முதலியன உடையோர் சகலரேயாகலின், ஏனை விஞ்ஞானகலர் பிரளயாகலர் என்பார். சகலர் போலப் புருடதத்துவமெனப் பெயர் பெறுமாறு இல்லை என்க.

## புருடதத்துவத்தில் புவனங்கள் உள என்பது இலக்கணையே என்றல்.

204. அப்பரிசில் அதிற்புவனங் களைப்பகுதி யிடத்தே
அறைதருவ ரிலக்கணையால் தத்துவங்க ளெவற்றும்
இப்புருடன் நிறைவுறினும் இயல்புறுதீக் கையினில்
இரும்பகுதி சுத்திமேல் விசேடித்து நின்று

செப்பரிய ஒருபுருடத் தன்மைமல சுத்தி
செய்தற்குப் பகுதியின்மேற் செப்புறுவ ரதனை
ஒப்பரிய முதநூல்கற் றுணர்ந்தவர்க ளினியாம்
உயர்பகுதி தத்துவம்நூல் உரைத்தபடி உரைப்பாம்.

*இ-ள்: அத்தன்மையினால், புருடதத்துவ புவனங்களை விட்ட இலக்கணையால் மூலப்பிரகிருதி தத்துவத்தினிடமாகக் கூறுவர். இப்புருடன் தத்துவங்கள் எவற்றும் நிறைவுறினும், தீட்சையிடத்தே, மூலப் பிரகிருதி சுத்திக்குமேல் கலைமுதலானவற்றுடன் விசேடித்து நின்று செப்பரிய ஒரு புருடத்தன்மை மல சுத்திசெய்தற்கு, அதனை மூலப்பிரகிருதிசுத்தியின்மேல் அறிஞர் செப்புவர் இனிமேல் யாம் உயர்ந்த பிரகிருதி தத்துவத்தைச் சிவாகமம் கூறியபடி செப்புவோம். என்றவாறு.* 67

## குறிப்பு

"புருடதத்துவத்தில் புவனங்கள் உளவென்பது 'கங்கையினிடைச் சேரி' என்பது போல ஆகுபெயராய்ப் புருடதத்துவத்தின் அணிமைக்கண் நின்ற பிரகிருதி தத்துவத்தின் உளவென்று பொருள் கோடற்பாற்றென்பது பவுட்கரத்தின் பகுத்தோதிய வாற்றான்" அறிக என்பது (சூ-2; அதி. 2) சிவஞானபாடியம்.

## பகுதி (மூலப்ரகிருதி)

205. மாயையிடை முனமுரைத்த படியுதித்துக் குணதி
மண்முடிவாந் தத்துவமுட் கொண்டுகலை மேவி
ஆயகலை கொடுநூல மாகியுருத் திரனுர்க்
காகியுபா தானமவர் சத்தியாற் கலக்குற்
றேயகுண முதலாய தத்துவங்கள் புருடற்
கின்றுகொடுப் பதுபகுதி தத்துவமா மதனைப்
போயகலு மவ்வியத்த குணவுருவாஞ் செய்கை
பொருந்தலினவ் வியத்தமெனப் புகன்றனர்கற் றவரே.

*இ-ள்: அசுத்த மாயையினிடத்தே முன் கூறியபடித் தோன்றிக் குண தத்துவம் முதல் நிலதத்துவம் ஈறுகிய தத்துவ*

காரியங்களைத் தன்னகத்தே கொண்டு கலாதத்துவத்தைப் பொருந்தி அதனால் தூல உருப்படைத்து சீகண்ட உருத்திரர்க்கு உபாதான காரணமாகி, அவர் சத்தியாற் செயப்பட்டு குணம் முதலிய தத்துவங்களைப் புருடனுக்குக் கொடுப்பது எதுவோ அது பகுதி தத்துவமாம். அப்பகுதி (மூலப்ரகிருதி) யை வெளிப் படாத குணவுருவம் பெற்றிருத்தலின் அவ்வியத்த மெனப் புகன்றனர் கற்றவர் என்றவாறு. 68

குணசம அவத்தை பிரகிருதியன்று என்றது.

206. சாங்கியர்சொல் லுதல்போலக் குணங்கள்நிக ரவத்தைத்
தான்பகுதி யன்றாகும்; மற்றென்னை என்னில்,
ஆங்குவரு குணமுயர்சத் துவமுதலாம் உருவாய்
அநேகமாய் அசேதனமா தலிற்கடா திகள்போல்
ஈங்குவரு காரணமுன் னுடைத்தக்கா ரணந்தான்
இயம்பினிரும் பகுதியெனப் படுமெனநன் கறிமேற்
கோங்குமுகை புரையிளமென் கொங்கையுமை பங்கன்
கூறியவா கமமுறையே குணத்தையெடுத் துரைப்பாம்.

இ–ள்: சாங்கிய மதத்தார் சாற்றுவதுபோல குணங்கள் தம்முட் சமமாய் நின்ற அவத்தையே பகுதிதத்துவம் என்றுகூறின் அஃது அன்றாம்; மற்று காரணம் என்னை எனில், அங்கு கூறப்படும் குணங்கள் சத்துவம் இராசதம் தாமதம் என்னும் உருவாய், பலவாய், அசேதனம் ஆதலின் கடம் முதலிய காரியப் பொருள்போல் கருதப்பட்டு, காரணத்தை முன்உடையன; அக்காரணத்தைக் கூறின் அது பகுதி தத்துவமேயாம் என்பதனை அறி. இதன்மேல் சிவாகம முறைப்படி குணதத்துவத்தைக் கூறுவாம். (எ–று) 69

குண தத்துவம்

207. விலங்கலறு பரமேசன் சத்திபுணர்ப் பானே
மிகுசத்தி பலவுடைய சீகண்ட தேவால்
கலங்கலுறு பகுதியிடைத் தோன்றியமுக்[[ குணத்தின்
கலந்தசம நிலேகுணதத் துவமாகும்;] பலவாய்

உலந்தவறி வினதநித்தம் ஆகுமா தலினுல்
உபாதான மாகாதென் றுபாதான மென்னும்
பலம்கவர வேறுரைத்த தன்றியிலைப் பேதம்
பகுதிகுணங் கட்கதனுல் தத்துவயெண் மிகாதால்

*இ-ள்: முதல்வனது சிற்சத்தியின் புணர்ப்பினுல் மிக்க சத்திகள் பலவுடைய சீகண்டருத்திரரால் தொழிற்பட்ட மூலப் பிரகிருதியிடைத் தோன்றிய முக்குணத்தின் சமநிலையே குணதத்துவமாகும். அது பலவாய் அசேதனமாய் அநித்தமாய் ஆகும் ஆதலினுல் என்றும் உபாதானமாகாது; பகுதியாகிய உபாதானப் பயனைப் பெறும் இக்காரணத்தால் பகுதியையும் குணதத்துவத்தையும் வேருக உரைத்ததன்றி பேதம் வேறில்லை; குணதத்துவத்தை வேருகக் கூறியவதனுல் தத்துவத்தின் எண் மிகாது என்க. (எ-று)* 70

பகுதி குணம் புத்தி இவற்றின் வேறுபாடு.

208. விளங்கலறு குணசமமுள் ளதுபகுதி யாகும்
வியத்தமாய் நின்றகுண சமம்குண தத்துவமாம்
அளந்தறிய வேறுவே றுயகுண விடமம்
அடைந்துளது புத்தியதன் குணவிருத்தி யுரைப்பின்
களங்கமறு தவந்தானம் உவகைபொறை தூய்மை
கல்வியிவை சத்துவத்த; மானம்விறல் முயற்சி
உளங்கொள்மத மிவையிரா சதத்த;அரு ளின்மை
உறக்கம்மிகும் உண்டிகொலை பொய்யிவைதா மதத்த.

*இ-ள்: முக்குணமும் விளங்குதலற்று (அவ்வியத்தம்) தம்முள் சமமாய் நின்ற நிலையினையுடையது மூலப் பிரகிருதி தத்துவமாம்; விளங்கித் (வியத்தம்) தம்முள் சமமாய் நின்ற அவத்தையிற் குணதத்துவமாம்; அறிவதற்கு வெவ்வேருகிய ஏற்றத்தாழ்வான (மிகுதல் குறைதல் பரிணமித்தல்) குணநிலை உடையது புத்திதத்துவமாம். குற்றமற்ற தவமும் தானமும் உவப்பும் பொறுமையும் தூய்மையும் கல்வியும் ஆகிய இவை*

*சத்துவகுணத்தவாம்; மானஉணர்வும் விறலும் முயற்சியும் மதமும் ஆகிய இவை இராசதத்தவாம்; அருளின்மை உறக்கம் பேருண்டி கொலை பொய் இவை தாமதத்தவாம். (எ-று)* 71

## புத்தி தத்துவம்

209. கூறரிய சத்துவந்தான் மிக்கேனை யிரண்டாற்
குறைவிருத்தி யுடையதாய்க் கடமென்று துணிதற்
பேறுளது புத்திதத் துவமதுதன் விருத்தி
பெறும்பாவ விவசாயான் மிகமெனவங் கிரண்டு
வேறுதரும்; அவற்றிற்பா வான்மிகமாந் தருமம்
மிகுஞானம் வயிராகம் செல்வமென நான்காய்
ஏறும்அற விருத்திகளும் இவற்றினெதிர் மறையால்
ஈரிரண்டா கியஅதன்ம விருத்தியுமென் றறியே.

*இ-ள்: சொல்லுதற்கரிய சத்துவகுணந்தான் மிகுந்து ஏனைய இராசததாமத குணங்களால் குறைந்த விருத்தியினையுடையதாய், இது குடம் என்று பெயர் சாதி முதலியன பற்றித் துணிதலாகிய சவிகற்பக் காட்சியின் பேறு புத்திதத்துவத்தால் உள்ளது. அப் புத்தி தத்துவத்தின் விருத்தி பாவான்மிகம் விவசாயான்மிகம் என்று இரண்டு வகையைப் பெறும்; அவற்றுள் பாவான்மிகம் தன்மம் ஞானம் வயிராகம் செல்வம் என்னும் நான்காகச் சொல்லும் அறவிருத்திகளும் இவற்றின் எதிர்மறையாகச் சொல்லும் அதன்மம் அஞ்ஞானம் அவைராகம் அநைஸ்வரியம் (செல்வமின்மை-வறுமை) என்னும் அதன்ம (மற) விருத்திகளும் என்று இரண்டாம் என்றறிக. (எ-று)* 72

210. இத்தருமா தருமமா கியபாவாட் டகங்கள்
எனுமிவற்றுள் தருமமுத லாகியவோர் நான்கும்
சத்துவமாம்; அதன்மமுதல் நான்கிலிரா சதமாம்
சாற்றருமவ் அவைராகம் ஒன்(று); ஏனை மூன்றும்

மைத்தமமாம்; இவைபேத மொடுபெற்ற தாலவ்
வகைபலவாம் அவற்றினையொண் பவுட்கரத்திற் காண்க
மெத்துறலால் இவணுரைத்தா மல்லமினி யேனை
விவசாயான் மிகமெனுமவ் விருத்தியினை யுரைப்பாம்.

இ—ள்: தன்மம் (அறம்), அதன்மம் (மறம்) ஆகிய பாவாட்டகங்கள் என்று கூறும் இவற்றுள் தன்மம், ஞானம் வைராக்கியம் ஐசுவரியம் என்னும் நான்கும் சத்துவ குணத்தால் தோன்றுவன. அதன்ம முதலிய நான்கில் அவைராக்கியம் ஒன்றும் இராசத குணத்தால் தோன்றுவதாம்; ஏனைய அதன்மம் அஞ்ஞானம் அனைசுவரியம் என்னும் மூன்றும் தாமத குணத்தால் தோன்றுவனவாம். இவ்வொவ்வொன்றும் பலவகைப் பேதம் பெற்றதால் அவை பலவாம்; அவற்றினைப் பவுட்கராகமத்திற் காண்க. அவை மிக்கு வருதலால் இவண் உரைத்திலம். இனி இரண்டாவதாகிய விவசாயான்மிகம் என்னும் அவ் விருத்தியினையும் கூறுவாம். (எ—று) 73

211. மிக்கதொரு தடாகாதி யாகியவொண் கிரியை
விவசாயான் மிகமாகும் அவைசமனந் தரத்தில்
தக்கபல னுதவுறு தாமழிவு பெற்றுஞ்
சார்பூர்வ மென்னும்வா தனையுருவாய்ப் புத்திப்
புக்குலகு காலமுட லிவைவேறு படவே
பொருட்பலங்க ணல்குறுஞா ஞதிவா தனையும்
ஒக்கலிவை போலறியப் படுமெனநன் கறிவாய்
உரைத்தனமாற் புத்தியையாங் காரமினி உரைப்பாம்.

இ—ள்: தடாகம் முதலியன இயற்றும் வினை விவசாயான் மிகம் ஆகும். அவை செய்த அக்காலத்திலேயே தனக்குரிய இன்ப துன்பமாகிய பயனை உதவுறாமல், தாம் அழிவுபெற்றும், பூர்வம் என்னும் வாதனை உருவாய்ப் புத்திதத்துவத்தினிடம் புக்கிருந்து, உலகும் காலமும் உடலும் ஆகிய இவை வேறுபடவே (வேறு உலகில் வேறு காலத்தில் வேறு உடம்பில்) பொருளாகிய பயனைக்கொடுக்கும். கிரியாவாதனையாகிய இதனைப் போலவே

ஞானுதி வாதனையும் அறியப்படும். இவ்வாறு புத்திதத்துவத்தைக் கூறிறேம். இனி ஆங்கார தத்துவத்தை உரைப்பாம். (எ-று) 74

## ஆங்கார தத்துவம்

212. ஆங்காரம் சாம்பவம்சீ வனம்கருவ மெனமூன்
றுரும்விருத் திகளுடைய(து); அவற்றைமுறை
யுரைப்பின்
நீங்காத தாளாண்மை உருவாஞ்சாம் பிரம
நிகழ்ச்சிதரு சாம்பவம்; வா யுக்கள்பிர விருத்தி
ஈங்காகுஞ் சீவனம்; அப் புத்திசெயற் கயலாய்
யானெனுமோர் அபிமானம் கவர்வதுதான் கருவம்;
ஆங்கார கருவவிருத் தியிேைடும் புத்தி
யதுவிருத்தி யொடும்பேதம் பவுட்கரமோ துறுமால்.

*இ-ள்:* ஆங்கார தத்துவம் சாம்பவம் சீவனம் கருவம் என மூன்றும் விருத்திகளை உடையது. அவற்றை முறையாகக் கூறின், நீங்காத முயற்சி வடிவாம் சம்பிரம நிகழ்ச்சியைத் தருவது சாம்பவமாகும். வாயுக்களின் பிரவிருத்தியாவது சீவனம்; புத்தியின் செய்கைக்கு வேருய் யான் என்கின்ற அபிமானத்தைக் கொள்வது கருவமாம்; ஆங்கார தத்துவத்தின் கருவ விருத்தியிேைடும் புத்தியது விருத்தியிேைடும் பேதத்தைப் பவுட்கர ஆகமம் ஓதுறும். (எ-று) 75

## மனம்

213. விருத்தியொரு மூன்றுடைய தென்றஆங் காரம்
விளக்கமிகு தைசதா திகளான்மூ வகையாம்
உரைத்தனம்முன் ஆங்கவற்றை உத்தேச காலத்
துணர்கவினி மனமுரைப்பில் இச்சைவடி வாகி
இருத்தலுறு வதுமனமாம்; ஆங்கார புத்தி
எனுமிவற்றின் வேருகும் எனப்படுமம் மனந்தான்
தெரித்தலுறு சங்கற்ப விகற்பமென விரண்டு
திறமுடைத்தத் திறமதனைத் தெரிந்தமுறை யுரைப்பாம்.

இ-ள்: மூன்று விருத்திகளையுடையது என்ற ஆங்கார தத்துவமானது தைசதாதிகளான் மூவகையாம் என்பதை, "அப் புத்தியிடை ஆங்காரம் வருமால் அல்லலறு தைசதவை காரிக பூதாதி யாங்கார மெனமூன்று வகைப்படு மாங்கதுவே" என (இந்நூல் 190) முன்னே உத்தேசமாய்க் கூறிய இடத்தே உணர்க. இனி மனத்தைக் கூறின் இச்சை வடிவாகி இருப்பது மனமாம்; ஆங்கார தத்துவம் புத்தி தத்துவம் என்னும் இவற்றின் வேறு என்று கூறப்படும் மனந்தான் சங்கற்ப விகற்பமென இரண்டு வகையினையுடைத்து அதனைத் தெரிந்தமுறை கூறுவாம். (எ-று) 76

## குறிப்பு

உத்தேச காலத்து உணர்க என்றது, உத்தேச இலக்கண பரீட்சை என்ற மூன்றில் உத்தேசம்பட முன்னே கூறிய இடத்தை. ஈண்டுக் கூறுவது இலக்கணம்.

## சங்கற்பம்

214. சங்கற்பம் அவதான மென்பர்; அது பற்றல்
தாளுகும்; ஆவிபொறி பொருட்புணர்ச்சி பெறினும்
அங்குற்ற திலையாயின் மனமறியப் படாதவ்
வருத்தமென லாலொளிரிந் திரியகோ சரமாய்த்
தங்குற்ற பொருளினைப் புத்திகோ சரமாய்த்
தருவதுசங் கற்பமாம் அஃதுளது மனமென்
றெங்கட்கு மணியனைய மழவிளவே றுடையான்
இனியநூல் எடுத்தியம்பும் இனிவிகற்ப முரைப்பாம்

இ-ள்: சங்கற்பம் என்பதை அறிஞர் அவதானம் என்பர்; அதுபொருளிற் சென்று பற்றுதலாம்; உயிரும், கண் முதலிய பொறியும், பொருளும் கூடினலும், மனம் அங்குற்ற திலையாயின் அப்பொருள் அறிதலைப்பெறாது; இந்திரியங்களுக்குப் புலப்பட்ட பொருளைப் புத்திதத்துவத்திற்குப் புலப்படத்தருவது சங்கற்பமாம்; அச்சங்கற்பத்தையுடையது மனம் என்று சிவாகமம் கூறும். இனி விகற்பம் உரைப்பாம். (எ-று) 77

## குறிப்பு

"மனம், நாட்டின்கண் நிகழ்வனவற்றைச் சென்றறிந்துவந்து வேந்தர்க்குப் புலனாகச்செய்யும் ஒற்றர்போலப் புறவிந்திரியங்களான் அறிந்த விடயத்தை இடையேநின்று பற்றி வாங்கிப் புத்தியின் எதிர்பிம்பமாய்த் தோன்றுமாறு கொண்டுய்க்கும் அகவிந்திரியமாய்க் காகத்தின் கண்மணி போல அகம்புறமாய ஈரிடத்தினும் விரைந்துசெல்லும் சதாகதியுடைத்தாய் நிற்பதாகலின்" (சூ-2; அதி-2) என்பது சிவஞானபாடியம்.

## விகற்ப உணர்வு

215. கொண்டகள கம்பளமாம் இலக்கணமொன் றுடைய
கோவினது பரிசயத்தால், கோவினைநேர் கவயம்
கண்டபொழு திதுவாக வேண்டும்ஆ மாவென்
கருத்ததுதான் விகற்பமஃ துடைத்துமனம் என்பர்;
பண்டுசிலர் மனம்முறையே பொருளைவிளக் குதலால்
பார்த்திடின்நுண் ணுருவாகும் அதான்றுபெரி தென்னில்
ஒண்டரையில் வரைவறவெப் பொழுதினுமெப் பொருளும்
ஒருங்குகவர் தரல்வேண்டு மெனிலதுநன் றன்றால்

(இ-ள்) கழுத்திலே அலைதாடி யிருப்பது இலக்கணம் என்று அறிந்துகொண்ட பசுவினைப் பலகாலம் கண்டறிந்த பழக்கத்தால், பசுவினை ஒத்த காட்டுப் பசுவைக் காட்டில் கண்டபொழுது, இது ஆமா (காட்டுப் பசு) ஆக வேண்டும் என்னும் எண்ணமே விகற்பமாம்; மனம் அதனைப் பெற்றுள்ளது; முன்னே, சிலர் (நியாய நூலார்) மனம் பொறிகளுடன்கூடி முறையே பொருளை விளக்குதலால் (ஒவ்வொன்றாக விளக்குதலால்) கருதின் அதிசூக்குமமாகிய அணுவளவிற்றாய் நிற்பதாம்; அஃதன்று மனம் பெரிதென்னில், வரையறை இல்லாமல் எக்காலத்தினும் எல்லாப் பொருளையும் உணர வேண்டும் என்று கூறுவர். அவர் கொள்கை நன்றன்று. (எ-று) 78

## குறிப்பு

தைசதத்துள் தோன்றியது மனம்; அது, வாயின் மாத்திரையான் நிருவிகற்பமாயறிந்த விடயப் பொருளில் சங்கற்ப விகற்பம் நிகழ்தற்குக்

கருவியாய் நிற்பது. சங்கற்பமாவது இஃது யாதாகற் பாற்றென ஒன்றன் குணங்களைத் தூக்கிச் சிந்தித்துப் பின்னர் முன் அநுபவித்தறிந்த வாதனை பற்றிக் குணங்கள் இன்னவாகலின், இக்குணங்களையுடைய பொருள், குடமாகற்பாற்று ஆடையாகற் பாற்றென ஒன்றனை நினைக்கும் நினைவு. விகற்பமாவது அங்ஙனம் நினைந்த பின்னர், இது குடமோ அன்றோ வென்று எண்ணும் ஐயம்" என்பது (சூ-2; அதி-2) சிவஞானபாடியம்.

216. தத்தரும வசத்தினுல் துணையவாம் நிலையால்
தாமதாம் குணுபிபவத் தால்மனிதர் தமக்கு
வைத்தமுறை வரும்ஞானே தயமென்க; அணுவே
மனமாயின் அணுத்திரவி யக்கிரக ணந்தான்
இத்தலையில் என்றும்வரும் கிராககத்தின் வியாத்தி
எவ்வளவு கிராகியமும் அவ்வளவே கவரும்
அத்தகைமை பெறஅற்பக் கிரகணமோர் பெரிதாய்
அமைவதையும் உறக்காண்கை யாற்பெரிது மனமே.

இ-ள்: அந்த தரும (இயல்பு) வசத்தினுலும், கருவிகள் துணையவாம் நிலையாலும், தாமதம் முதலிய குணத் தோற்றத்தாலும் மக்களுக்கு முறையாக அறிவு தோன்றுமென்க. அணுவாயிருப்பது மனமாயின் அணுப்பொருள்களைப் (சிறிய பொருள்கள்) பற்றுதலே மனத்திற்கு என்றும் நிகழும். கிரகிக்கும் பொருள் எவ்வளவோ கிரகித்தலும் அவ்வளவே தோன்றும். (மனம் சிறிதாயின் (அணுவாயின்) சிறிய பொருளையே கிரகிக்கும்) ஆனல், மனம் சிறிய பொருளையும் பற்றுகின்றது; பெரிய பொருளையும் பற்றுகின்றது; அதனல் மனம் அணுவன்று பெரிது. (எ-று) 79

## குறிப்பு

இந்நூலாசிரியர் தாம் செய்த பிரபுலிங்கலீலையில் "நேர்ந்த மனமோ ரணுவென்னல் நியாய மன்றென் றம்மனத்திற், போந்த ஆசைப் பெருங் கடலைப் புகட்டும் மகளைக் கண்டுவந்து" (45) (மாயை உற்பத்திகதி) என்று, சாதுர்யமாக மனத்தை அணுவன்று என்று மறுப்புக் கூறியுள்ள நயத்தை உணர்க.

## ஞானேந்திரியம்

217. சாற்றிலுணர் விந்திரியம் சோத்திரமே துவக்குச்
சட்சுமிகு சிங்குவையாக் கிராணமாம்; அவையும்
தோற்றமுறு தைசதவாங் காரத்தாய் விளங்கும்
சுடரத்தி யக்கவிட யத்துவமெய் துறலால்
தேற்றுமவை உண்மையின்கண் உத்திகள்வேண் டாமால்
செவியுடல்கண் தாலுமூக் கெனும்பெயர்க்கோ ளகத்தில்
ஊற்றனவிண் முதலனஐம் பூதங்கொண் டுயிர்கட்
கொலிமுதலை வகைவிடய சாதனமா மவையே.

இ-ள்: ஞானேந்திரியத்தைக் கூறில், சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணம் (செவி மெய் விழி நாக்கு மூக்கு) என்பனவாம். அவ்வைந்தும் தைசத ஆங்காரத்திலிருந்து தோன்றியனவாம்; இவை பிரத்தியட்ச பிரமாணத்திற்குப் (காண்டலளவை) புலனாவதால் இவற்றைப் புலப்படுத்த அநுமான அளவை முதலான உத்திகள் வேண்டுதலில்லையாம். இவை செவியும் உடலும் கண்ணும் நாக்கும் மூக்கும் என்னும் கோளகத்தில் (தங்குமிடம்) உற்றனவாய் சூக்கும பூதமாகிய வான் முதலான ஐம்பூதங்களையும் கொண்டு ஒலிமுதல் ஐவகை விடயங்களை உணர்வதற்குக் கருவியாம். (எ-று) 80

218. தொலைதலுறு மணமுடைச்சந் தனத்திற்கு நிம்பத்
துவமெனயா தேதற்கபி வெஞ்சகமதனுக் கதுதான்
விலகலறு சாத்தியமா தலினாற்சாத் தாபி
வெஞ்சகமாம் செவிசத்த குணமுடைவிண் வடிவாம்
அலைதலற இணையனவென் றேனையவும் அறியிவ்
வாற்றாலாங் காரிசங்க ளல்லபூ தங்கள்
புலமுறுமிந் திரியங்க ளென்றுரைசெய் கிற்பில்
புனிதனா கப்படியே புகன்றதனை யொழிப்பாம்

இ-ள்: சில காரணங்களால் மணமில்லாதுபோன சந்தனக் கட்டைக்கு வேம்பின் தன்மை உண்டென்று சொல்வதற்கு எந்த

விதமான ஏதுவும் இல்லையாம். சந்தனக் கட்டைக்கு வெளிப்படு பொருளாயிருப்பது வேம்பின் மணமன்று; சந்தன மணமே தடையற்ற சாத்தியமாதலால், சந்தனக் கட்டைக்குச் சந்தன மணமே சாத்தாபிவெஞ்சகமாம். அதுபோல செவியானது சத்த குணமுடைய ஆகாய தத்துவத்தின் கூறுயுள்ளது; சந்தனக் கட்டையில் சந்தன மணமே வருதல்போல, ஆகாயத்தின் கூறுகிய செவியில் அதன் ஒலியே கேட்கப்படும். இதனைப் போலவே துவக்கு வாயு தத்துவத்தின் கூறென்றும், சட்சு தேயு தத்துவத்தின் கூறென்றும், சிங்குவை அப்பு தத்துவத்தின் கூறென்றும், ஆக்கிராணம் பிருதிவு தத்துவத்தின் கூறென்றும் அறிவாய்; இக்காரணத்தால் பூதங்களிடமாய்ப் புலமுறும் ஞானேந்திரியங்களானவை ஆங்கார தத்துவத்தில் தோன்றியவை யல்ல என்று மறுப்புக் கூறின், அக் கூற்றைச் சிவாகமப்படிக் கூறி மறுப்பாம். (எ-று) 81

## குறிப்பு

இவ்வாறு கூறுபவர் நியாய நூலார் என்க. ஆங்காரிசம் – ஆங்கார தத்துவத்தில் தோன்றுவது. "இனி நையாயிகர் முதலியோர் ஓசை முதலிய ஐந்தும் ஆகாயம் முதலிய பூதங்களின் குணமாதலால் அவ்வப் பூத குணங்களைத் தெரிவிக்கும் செவி முதலிய இந்திரியம் அவ்வப் பூதகுணங்களிற் றோன்றிய காரியமென்றலே பொருத்த முடைத்தாகலான் ஞானேந்திரியங்கள் பௌதிகமே என்பர். இந்திரியம் பூத காரியமாயின் குடம் முதலியனபோல வடிவுடைத்தாய், வேறோரிந்திரியத்தான் அறியப் படுவதூஉமாமெனப் பட்டு அநவத்தையாய் முடியுமாகலின் அது பொருந்தாமையறிக என்பது சிவஞானபாடியம் (சூ-2; அதி-2)

## கன்மேந்திரியம்

219. இந்திரியம் பவுதிகமா தலினுலங் கவற்றிற்(கு)
இலங்குகடா திகள்போலச் சடவடிவுண் டாகி
நந்துபுற விந்தியங்க ளாற்கவரப் படுதல்
நணுகுறுமங் ஙனமாயின் அநவத்தை தோடம்

வந்தடையும் ; இனிக்கருமேந் திரியங்க ளுரைப்பின்
வாக்குபா தம்பாணி குய்யமொடு குதமாம்
உந்துறுதன் மாத்திரையோ டுறுவசனு திகளை
உயிரிச்சை இசைவால்நின் றுதவலினப் பெயராம்.

*இ-ள் :* சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியங்கள் ஆகாயம் முதலிய பூதங்களின் வடிவாம் என்றால், ஞானேந்திரியங்கள் பூத காரியமாதலால் குடம் முதலியன போலச் சடவடிவுண்டாகி புறவிந்திரியங்களால் கவரப்படுதலை அடையும்; அடையின் அது வேறோரிந்திரியத்தால் அறியப்படுவதுமாமெனப்பட்டு அநவத்தா தோடத்தைப்பெறும்; ஆகையால் ஞானேந்திரியங்கள் ஆங்காரத்தில் தோன்றியவையே; பூதகாரியங்களல்ல, இனிக் கருமேந்திரியங்களைக் கூறின் அவை வாக்கு பாதம் பாணி குய்யம் குதம் என்பனவாம். இவை முறையே தமக்குரிய தன்மாத்திரையுடன் கூடி வசனம் கமனம் தானம் ஆனந்தம் விசர்க்கம் முதலிய தொழில்களை உயிரிச்சையின்படி உதவலின் கன்மேந்திரியம் (தொழிற் கருவி) என்னப்பட்டன. (எ-று) 83

## இதுவும் அது

220. வாயடிகைக் குய்யம்பா யுருவெனும்கோ ளகத்தில்
வான்முதலேம் பூதமா தாரமாக் கொண்டே
ஆயடைவின் உயிரின்வச னுதியாங் கிரியைக்(கு)
அமைந்தசா தனமாகும்; அக்கருமேந் தியங்கண்
மேயவுயிர் வலியினறிந் தியங்கமனு திக்கு
வெறியபத முதலனவா தாரமிலா மையினுல்
வீயுடலி னவற்றின்வினைக் கத்துருத்து வந்தான்
விலங்குற்ற வாதலின்வே றறிந்தியற்ற வலவே.

*இ-ள் :* வாக்கு முதலிய கன்மேந்திரியங்கள் வாய், கால்கள், கைகள், குறி, மலங்கழி உறுப்பு என்னும் இடத்தில் வானம் முதலிய பூதங்களை இடமாகக் கொண்டு முறைப்படி உயிரின் வசனமாகிய செயலுக்குப் பொருந்திய கருவியாகும். உயிர் வலியினால் அறிந்து தொழிற்பட மனம் முதலியவற்றிற்குக் கால்

முதலான ஆதாரங்கள் இல்லாமையினால், உடம்பினிடத்தே அவற்றின் வினைக்கத்துருவந்தான் (கர்த்தாவாயிருப்பது) நீங்கின; ஆதலின் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களைத் தவிர வேறு அறிந்தியற்ற இல்லனவாம். (எ—று) 84

221. கத்துருத் துவமதுபா தாதியிலா துயிரின்
கண்ணதுமன் றுகுமெனக் கழறுவர்கற் றறிந்தோர்
சித்தெனப்பட் டிடுமான்மா வினதிச்சா சத்தி
தீர்ந்தவன்றன் சந்நிதிமாத் திரையான் அக்கிரியா
கத்துருத்துவ முணர்வி லிந்திரிய மெய்தும்
கருதிலெனப் புகல்வதூம் கடப்பாடன் றுகும்
கத்துருத் துவவிசே டணமுடைய தாகும்
கடம்புனலின் சந்நிதிமாத் திரையான் என்றறியே.

இ—ள்: கமனம் முதலிய தொழிற்குக் கர்த்தாவாயிருக்கும் தன்மை பாதம் முதலானவற்றிற்கும் இன்றும்; உயிரினிடத்தும் இன்றுமெனக் கற்றறிந்தவர் கூறுவர். சேதனன் என்று கூறப்படும் உயிரினது இச்சாசத்தி மலமறைப்புத் தீர்ந்து விளங்க அந்த உயிரின் சந்நிதி மாத்திரையானே கமனம் முதலிய கிரியா கத்துருவத்தைச் சடமாகிய இந்திரியம் பெறும் என்று கூறுவதும் முறையன்றாகும். ஏன் எனில், புனலின் சந்நிதி மாத்திரையானே கடமானது கத்துருத்துவ விசேடண முடையதாகவேண்டும்; அங்ஙனம் ஆமாறின்மையால் உயிரின் சந்நிதி மாத்திரையானே கிரியா கத்துருவத்தைச் சடமாகிய இந்திரியம் பெறும் என்றல் பொருந்தாதாம். (எ—று) 85

222. ஆதலினுெண் கமனாதி வெறியவுயி ரினவும்
அனையயிந் தியத்தவும்கோ ளகத்தவுமே யல்ல
ஓதுறிலஞ் சிவசத்தி உபசரிக்கப் பட்டிங்(கு)
உளகலா திகளுடையான் மாமனபற் றொன்றிப்
போதனைய விழிமுதல பலகரணந் தம்மால்
புறப்பொருளை ஆண்டாலோ சித்திடுவ னுண்டுத்
தீதறுமொண் பொருள்ஞான முண்டாகும் அந்தத்
திறங்களினு லோசிக்கப் படுபொருணிச் சயமாம்.

இ–ள் : ஆதலால் நடத்தல் முதலிய தொழில்கள் முற்றிலும் உயிரினுடையவும் அல்ல; இந்திரியங்களுக்கு இடமான கோளகத்தனவும் அல்ல. அதனை விளங்கக் கூறின், சிவ சத்தியால் உபசரிக்கப்பட்டுக் கலாதிகளுடன் கூடிய உயிரானது மனத்தின் பற்றுதலுடன் ஒன்றி, விழி முதலான பல புறக்கருவியால், புறப்பொருளை ஆலோசித்து உணரத் தொடங்குவன். அப்பொழுது புறப்பொருள்களை அறியும் அறிவு உண்டாகும். அக்கூறுபாட்டால் ஆலோசிக்கப்படும் பொருள் நிச்சயமாகும். (எ–று) 86

223. கேவலநேத் திராதியவே ஆலோச ஞதி
கிளக்குறுமவ் விந்தியங்கள் வழங்கலுறு பொருளை
மேவுறுமோர் மனம்சங்கற் பிக்குமிருங் கொடியின்
விழிபோலுட் புறக்கரண மாம்மனம்உய்த் ததனை
ஆவலினோர் ஒளிபுத்தி நிச்சயிக்கு மதனை
ஆங்காரம் உயிர்க்கயலாய் மமகரிக்கும் அதனுல்
ஓவலிலா ஆலோச ஞதிபுத்தி அந்தத்(து)
உறுபொருளின் துணிவாங்கா ரந்தநுகர் வாகும்.

இ–ள் : தனித்த கண் முதலிய ஞானேந்திரியமே பார்த்தறிதல் முதலானவற்றைத் தோற்றுவிக்கும்; அந்த இந்திரியங்கள் அறிந்துதவும் பொருளை மனம் சங்கற்பிக்கும்; காகத்தின் விழி போல புறக்கரணமாகவும் அகக்கரணமாகவும் உள்ள மனம் உய்த்ததனை ஏற்று, புத்தி நிச்சயிக்கும்; புத்தி நிச்சயித்ததை ஆங்காரம் பற்றி மமகரிக்கும் (அபிமானிக்கும்); அதனுலே நேத்திராதியனதந்த ஆலோசஞதி புத்திதத்துவத்தில் முடிவிலே நிச்சயித்தலாய் ஆங்கார முடிவிலே நுகர்தல் உளவாம். (எ–று) 87

## மேற்கூறிய இந்திரியங்கள் செயற்படுமுறையும் தன்மாத்திரையும்.

224. கூறியவித் தத்துவங்கள் முறையேநின் றருத்தம்
கொள்வனவா யினும்சுழலும் கொள்ளிவட்டம் போல
வேறுபெறு தம்மின்முன் பின்பறியா வண்ணம்
விரகினுறு பொருள்கவர்வ வாகுமென அறிவாய்

தேறயினி இயம்பில்தன் மாத்திரைகள் புறவிந்
திரியத்தாற் றுணிகின்ற குணங்களுடை மையினல்
மாறகலத் தியக்கமாம் ஐம்பூதங் கட்கும்
வழுவில்கா ரணமாய்நிற் பனதன்மாத் திரைகள்.

இ-ள்: மேற்கூறிய இத்தத்துவங்கள் முறைப்படி நின்று பொருள்களை அறிந்துகொள்வனவாயினும், "சுழலும் கொள்ளி வட்டம்போல" வெவ்வேருகிய தம்மில் முன்புபின்பு அறியாதவாறு, உற்றபொருள்களை அறிந்துவரும் என அறிவாய். இனித் தெளியத் தன் மாத்திரைகளை இயம்பில், புற விந்திரியத்தால் துணிகின்ற குணங்களுடைமையினல் பிரத்தியக்கமாய் உணரப்படும் ஐம்பூதங் கட்கும் தவருத உபாதான காரணமாய் நிற்பன தன்மாத்திரை களாம். (எ–று) 88

குறிப்பு

அத்தியக்கம் – பிரத்தியட்சம்.

225. சத்தமொடு பரிசமுருச் சுவைகந்தம் அவைகே
சராதியொலி முதற்குணத்தின் விசேடமல என்பர்
சத்தமுத லொரோவொன் றேறியகுணங்கள் மருவித்
தவஙனிநுண் ணியவாயத் தன்மாத்தி ரைகள்
சத்தமுத லியகுணங்கள் இம்முறையாற் பெற்றும்
தகுந்தூல மாகியபூ தங்களின்கா ரணமாம்
சத்தமுத லியவன்றி நையாயி காதி
சாற்றுபர மாணுவல பூதங்கா ரணமே.

இ-ள்: மேலே கூறியதன் மாத்திரைகள் சத்தம், பரிசம் உருவம் சுவை கந்தம் என்னும் அவையாம். இவற்றை ஆகாயம் முதலிய பூதங்களின் ஒலி முதலான குணத்தின் விசேடம் அல்ல என்பர்: அத்தன்மாத்திரைகள் ஒவ்வொன்று சத்தம் முதலிய ஏறிய குணங்களை உடையனவாம், மிகவும் நுண்ணியனவாய் (அதிசூக்குமமாய்), இதனைப் போலவே சத்த முதலிய ஏறிய குணங்களையுடைய தூல பூதங்கட்குக் காரணமாகும். தூல

பூதங்கட்குச் சூக்கும பூதமாகிய சத்தம் முதலியனவன்றி (தன் மாத்திரைகளன்றி) நியாய நூலார் கூறுகின்ற பரமாணுக்கள் காரணம் அல்ல. (எ-று) 89

## குறிப்பு

நியாய நூலார் பிருதிவி யாதி நான்கு பூதங்கட்கும் பிரிதிவி பரமாணுவும், அப்பு பரமாணுவும், தேயு பரமாணுவும் வாயு பரமாணுவும் முறையே காரணம் என்பர், பரமாணுக்கள் இரண்டு கூடித் துவியணுவும் துவியணுகத்திலிருந்து திரியணுவும் அதிலிருந்து சதுரணுவும் சதுரணுவால் அபரதூலமும், அவற்றால் தூலதரமும், அவற்றால் தூலதமமும் தோன்றும் என்பர்.

## மா பூதங்கள்

226. மொழிதருதன் மாத்திரையில் தோன்றிச் சத்த
முதற்குணத்துள் ஓரோவொன்று மிக்கு நின்று
எழின்மிகுவிண் வளியழல்நீர் மண்மா பூதம்
எனப்படும்; விண்ணிற்கொலியே சிறந்த தென்ப;
உழலும்வளி தனக்கிரண் டூறொடு கனற்கிங்
கொளியொடுமூன் றறற்கிரத மொடுநான் கைந்து
வழுவின்மண மொடுதரைக்காம் இவற்றின் பின்னர்
வருவசிறப் பல்லபொதுக் குணங்க ளாகும்.

இ-ள்: தன்மாத்திரையிலிருந்து தோன்றி ஒலி முதலான ஐந்து குணத்துள் ஒவ்வொரு பூதத்திற்கும் ஒவ்வொன்று மிக்கு நின்று விளங்குவன ஆகாயம் காற்று நெருப்பு நீர் நிலம் என்று பெயருடைய மா பூதங்களாம் (தூல பூதங்களாம்). ஆகாயத்திற்கு ஒலியாகிய குணமே சிறந்தது என்ப: காற்றிற்கு ஊறொடு ஒலியாகிய இரண்டும், நெருப்பிற்கு ஒளியொடு ஒலியும் ஊறுமாகிய மூன்றும், நீர்க்கு இரதமொடு ஒளியும் ஒலியும் ஊறுமாகிய நான்கும், தரைக்கு மணமொடு இரதமும் ஒளியும் ஒலியும் ஊறுமாகிய நான்கும் சிறந்தன. மற்றையவை சிறந்தன வல்ல; பொதுக்குணங்களாம். (எ-று) 90

227. உயிர்கட்குக் கமனுதி வழக்கம் யாதொன்
றுண்டாயி னுகுமஃ தொலியில் தோன்றிச்
செயிரற்ற விண்ணுமவ் விசும்பை நாம்வை
சேடிகா திகள்போல் நித்த மென்னும்
பயில்வுற்ற அவர்பகரும் பக்க மெல்லாம்
பவுட்கரா தியில்காண்க பெருகும் கூறின்
நயமுற்றி யுளர்ந்துபுணர்ப் புற்று நிற்றல்
நடைமுதற்குக் காரணமாம் ஊற்றி னுங்கால்.

*இ-ள்: உயிர் வர்க்கங்கட்குப் போக்கு வரவு முதலிய கமனங்கள் எந்தத் தத்துவம் உண்டாயின் நிகழ்வுறுமோ அந்தத் தத்துவம் ஒலி என்னும் தன்மாத்திரையில் தோன்றி நிற்கும் ஆகாய பூதமாகும். அதனை நியாயநூலார் முதலானவர் கூறுவதுபோல நித்தியம் என்னும். அவர் கூறும் கொள்கைகள் எல்லாம் பவுட்கரம் முதலான நூல்களிற் காண்க. இங்கே கூறின் பெருகும். ஊறு என்னும் பரிச தன்மாத்திரையினின்றும் தோன்றிய காற்றென்னும் பூதம் சத்தம் பரிசம் என்னும் இரண்டு குணம் நிறைந்து சலித்துத் திரட்டும் தொழிலையுடையதாகி நடத்தல் இருத்தல் முதலிய தொழிற்குக் காரணமாய் நிற்கும். (எ-று)* 91

228. பேசரிய அவ்வளிதான் உயிர்கள் தோறும்
பிராணுதி யாகவீ ரைம்பாற் ருகும்
தேசுமிகும் உருவதன் மாத்திரையில் தோன்றிச்
செய்யதீப் பாகவியா பாரஞ் சாரும்
ஆசையொடு பெயரியதீப் பாகம் முப்பாற்
றதுவென்க சங்கிரக ணத்தை மேவி
மாசுவையின் வரும்புனல்தான் உலகத் தெல்லா
வத்துவையும் நிறுத்துமென மதித்தி டாயே.

*இ-ள்: அக் காற்ருகிய பூதந்தான் உயிர்கள்தோறும் பிராணன் முதலான பத்துவகையாக இருக்கும். ஒளிமிக்க உருவ தன்மாத்திரையில் தோன்றியது நெருப்பாகிய பூதம்; அது*

பொருள்களைப் பாகஞ் செய்தல் முதலிய தொழிற்பாட்டது. அத்தீயின் பகுப்பு காருகபத்தியம் ஆகவனீயம் தென்றிசையங்கி என முப்பாற்று. சுவை என்னும் தன்மாத்திரையிலிருந்து தோன்றும் நீர் என்னும் பூதந்தான் பொருள்களை நெகிழச் செய்து உலகத்திலே எல்லாப் பொருள்களையும் சீவிக்கச் செய்யும். (எ-று) 92

229. கந்தமுற வருதரைதான் தரிக்கும் எல்லாம்;
காரணத்தில் காரியத்து விசேட மாக
வந்தகுணம் காண்கையால் இப்பூ தங்கள்
மற்றொன்றின் ஒன்றுமுறை வருவ வல்ல
வந்தமுறை வருவவெனில் ஆகா யத்தும்
ஐங்குணங்கள் வரல்வேண்டு மென்று கொள்க
இந்தமுறை கலாதிநிலம் இறுவா யாகும்
யாவும்முத னூன்மரபில் இயம்பி னேமால்.

இ-ள்: கந்தம் என்னும் தன்மாத்திரையிலிருந்து தோன்றிய நிலம் என்னும் பூதந்தான் உரத்து எல்லாப் பொருள்களையும் தாங்கி நிற்கும். காரணத்தில் காரியத்து விசேடமாக வந்த குணம் காண்கையால் இப்பூதங்கள் (ஆகாயத்திலிருந்து காற்றும் காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும்) மற்றொன்றில் ஒன்று முறை வருவனவல்லவாம்; அவ்வாறுதான் வரும் எனின், ஆகாயத்திலும் ஐந்து குணங்கள் வரல்வேண்டு மாதலின் அவ்வாறு கொள்ளுதல் நன்றன்று. இந்த முறை (தோற்ற முறை) கலை ஆதியாய் நிலம் இறுவாயாகவுள்ள தத்துவங்களைச் சிவாகம முறைப்படி இயம்பினோம். (எ-று) 93

சுத்தாத்துவாவின் தொகுப்பு

230. தலைமைபெறும் மலமொடுறும் உயிர்க்குப் போக
சாதனமாம் தத்துவங்கள் சாற்றி யிப்பால்
கலைமருவி ஒழிவருமச் சிவாதி மிக்க
காசினியீ ருயபெருந் தத்து வங்கள்

**நிலைமைபெறு புவனங்கள் தமதெண் சொல்வன்**
**நிகரில்புகர் முகவுரற்கால் நெடுநல் லியானைக்**
**கோலமழவெள் விடைப்பசும்பொற் கொன்றை வேய்ந்த**
**குழகனரு ளாகமங்கள் கொண்டு யானே.**

*இ-ள்: ஆணவ மலத்தொடு உறும் உயிர்க்குப் போக சாதனமாம் தத்துவங்களைச் சொல்லி, இதன்மேல் சாந்தியாதீதை முதலான ஐந்து கலைகளைப் பொருந்தி நீங்காமல் வரும் சிவம் ஆதியாய் நிலம் ஈறான பெரிய தத்துவங்கள் நிலைமைபெறு புவனங்கள் என்னும் இவற்றின் எண்களைச் சிவாகம முறைப்படிக் கூறுவன். (எ-று)* 94

குறிப்பு

*ஒவ்வொரு கலையிலும் உள்ள தத்துவங்கள் புவனங்கள் என்னும் இவற்றின் எண் இனி கூறப்படுகின்றது.*

231. **சாந்தியா தீதகலை தன்னின் மேவு**
**தத்துவங்க ளிரண்டுபுரம் பதினு றென்ப**
**ஏய்ந்தமா சத்தியினும் சதாசி வத்தும்**
**எவ்வெட்டுப் புவனங்க ளிசைந்தி ருக்கும்**
**சாந்தியூ டமைதருதத் துவமி ரண்டு**
**தகும்புவன மிருபத்தைந் தாமி வற்றின்**
**வாய்ந்தநா லிரண்டீச தத்து வத்தின்**
**மற்றவைதாம் வித்தையிடை மருவு மன்றே.**

*இ-ள்: சத்திவடிவாகிய ஐந்து கலைகளில்* **சாந்தியாதீத கலை** *தன்னில் பொருந்தியுள்ள தத்துவங்கள் சத்தி (சிவம்) சதாசிவமென இரண்டாம்; மேற்கூறிய சத்திதத்துவத்தும் சதாசிவதத்துவத்தும் எட்டு எட்டுப் புவனங்கள் பொருந்தியிருக்கும்.* **சாந்திகலை***யில் அமைந்துள்ள தத்துவங்கள் ஈசுர தத்துவம் சுத்தவித்தை என இரண்டாம். இவ்விரண்டிலும் உள்ள புவனம் இருபத்தைந்தாம்: இவற்றில் எட்டு புவனம் ஈசுரதத்துவத்தும் ஏனையவை சுத்தவித்தையினும் மருவும். (எ-று)* 95

## குறிப்பு

*சாந்தியா தீதகலையில் சத்தி, சிவம் என்னும் இரண்டு தத்துவமும் புவனம் பதினைந்தும்; சாந்திகலையில் சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம் என்னும் மூன்று தத்துவமும் புவனம் பதினெட்டும் இருக்கும் என்பது* (சூ-2. அதி-3) **சிவஞானபாடியம்.**

## மிசிராத்துவாவின் தொகுப்பு

232. **சுத்தமுறும் அத்துவாத் தொகுத்து ரைத்தாம்**
**தொகுதிபெறு மிசிராத்து வாவைக் கூறின்**
**வித்தையுறு தத்துவங்க ளேழும் மேவும்**
**வியன்புரங்கள் நாற்பத்தைந் தாகும் மாயா**
**தத்துவமெய் துவவெட்டுக் காலந் தன்னில்**
**சத்தபுரம் நியதியின்முப் புரம்க லைக்கண்**
**வித்தையிடை யிராகத் திடையெவ் வெட்டு**
**வியன்புருடன் றனைமூன்று மேவு மன்றே.**

*இ-ள். இதுவரை சுத்தமாயையின் தோற்றமாகிய சுத்தாத்துவாவைத் தொகுத்துக் கூறினும். இனி மிசிராத்து வாவைத் தொகுத்துக் கூறின், வித்தியாகலையில் மாயை காலம் நியதி கலை வித்தை இராகம் புருடன் என ஏழு தத்துவங்கள் மேவும். புவனங்கள் நாற்பத்தைந்தாகும். எவ்வாறெனின், மாயா தத்துவத்தில் எட்டு புவனமும் காலத்தில் ஏழு புவனமும் நியதியில் மூன்று புவனமும் கலை வித்தை இராகதத்துவத்தில் எவ்வெட்டுப் புவனமும் புருடதத்துவத்தில் மூன்று புவனமும் பொருந்தி யிருக்குமென்க. (எ-று)* 96

233. **தங்கலுறும் ஒழிவிலிரு பத்து மூன்று**
**தத்துவங்கள் பிரதிட்டை தனிற்பு ரங்கள்**
**அங்குறுவ எண்பஃது பகுதிப் பின்னர்**
**அடுத்தகுணம் புத்தியாங் கார மென்னும்**
**இங்கிவையில் எவ்வெட்டு மனமீ ரைந்தாம்**
**இந்தியங்க ளொடுதன்மாத் திரைகள் தம்மின்**
**பங்கின்முறை யொவ்வொன்று பதின ருகும்**
**வான்வளிதீ நீரிடையெவ் வெட்டா மன்றே.**

பிரதிட்டா கலையில் இருபத்துமூன்று தத்துவங்களும் புவனங்கள் எண்பஃதும் உள்ளன.

இ-ள் : பிரதிட்டாகலையில் இருபத்துமூன்று தத்துவங்களும், எண்பது புவனங்களும் தங்கலுறும். பிரகிருதியின் பின்னர் உள்ள குண தத்துவம் புத்திதத்துவம் ஆங்கார தத்துவம் என்னும் இவற்றில் எவ்வெட்டும், மனதத்துவத்தில் பத்தும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களில் பத்து தன்மாத்திரையில் ஐந்து பங்கின் முறை ஒவ்வொன்றாகப் பதினைந்து புவனங்களாம். ஆகாய மண்டலம் காற்றுமண்டலம் தீமண்டலம் நீர்மண்டலம் என்னும் நான்கு மண்டலங்களில் மண்டலத்திற்கு எட்டாக முப்பத்திரண்டு புவனங்களாம். (எ-று) 97

## குறிப்பு

இப்பாட்டின் மூல பாடம் "பங்கின் முறை ஒவ்வொன்று பதினாறாகும்" என்று காணப்படுகின்றது. அப்பொழுது புவனம் எண்பது வராமல் எண்பத்திரண்டு வருகின்றது. 'பங்கின் முறை' என்பதைக் கருதில் 'பதினைந்தாகும்' என்ற பாடமே பொருந்தும். அவ்வாறு பாடமோதினும் புவனங்கள் எண்பத்தொன்று வரும். கந்த தன்மாத்திரையைக் குறைத்துப் 'பதினாலாகும்' எனப்பாடமோதின் எண்பது புவனங்கள் வரும். அங்ஙனம் கொள்ளும் பொழுது தத்துவம் இருபத்து மூன்று வராது. ஆதலின் இப்பாட்டு ஆராய்தற்குரியது.

234. விரிந்தகுண தத்துவத்தி னிடத்து மேவும்
வீரபத் திரபுரமு மென்க; இப்பால்
பரந்தபுகழ் நிவிர்த்திசொலில் தத்து வந்தான்
படியொன்று புவனமறு பஃதென் றோர்க
பொருந்துபுவ னங்களிற் பூலோக மென்னும்
புவனம்நடு உலகெனப்பேர் புணர்ந்து நிற்கும்
திருந்துமஃ தேழுகடல் ஏழு தீபம்
எணில்சிலம்பு நதிமுதலாற் சிறந்த வாகும்.

இ-ள் : குணதத்துவத்தினிடத்து (நிவர்த்தி கலையின் உச்சியில்) வீரபத்திர புவனம் மேவும். இதன்பின் நிவர்த்தி

கலையைக் கூறின் இதன் தத்துவம் நிலமாகிய ஒன்றே. இதிலுள்ள புவனம் அறுபது. இந்த அறுபது புவனங்களில் பூலோகம் என்னும் புவனம் நடு உலகம் என்னும் பெயரைப் பெற்று நிற்கும். 'அப் பூலோகம் ஏழு கடல் ஏழு தீபம் எண்ணில்லாத மலை யாறு முதலானவற்றால் சிறந்ததாகும். (எ-று)
98

235. கூறுமெழு தீபங்கள் சம்புச் சாகம்
குசம்கிரவுஞ் சம்திகழ்சான் மலிகோ மேதம்
வேறுமலி புட்கரமாம் என்பர் மேலோர்
விரியுவரி முதலாய வேலை சூழ
நூறுதசம் நூருதி இரும டங்கா
நுவலப்பட் டிருக்குமென நூலி யம்பும்
மாறுகடல் உவரிபால் தயிர்நெய் இக்கு
மதுவினிய நீரளவு தீபம் ஒக்கும்.

இ-ள் : சொல்லப்படும் ஏழு தீவுகளைச் சம்புத்தீவு சாகத்தீவு குசத்தீவு கிரவுஞ்சத்தீவு சான்மலித்தீவு கோமேதகத்தீவு புட்கரத்தீவு என்று பெயர் கூறுவர். இத்தீவுகள் முறையே இலக்கம் (நூறாயிரம்), இரண்டிலக்கம், நான்கிலக்கம், எட்டிலக்கம், பதினாறிலக்கம், முப்பத்திரண்டிலக்கம், அறுபத்து நான்கிலக்கம் என்னும் யோசனைப் பரப்புடையதாய் அத்துணைப் பரப்புடைய உப்புக்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், மதுக்கடல், சுத்தோதகக்கடல் என்னும் இவை சூழ அமைந்துகிடக்கும். (எ-று) 99

236. உரைப்பருமின் புனல்கடல்சூழ்ந் தம்பொற் பூமி
யொளிர்தருமங் கதனைச்சூழ்ந் துலோகா லோக
பருப்பதமொன் றுறுமதனை யிருள்சூழ்ந் தோங்கும்
பாயிருளைச் சூழ்ந்துகருப் போது வேலை
இருப்பமையும் இணையிலண்ட கடாக மப்பால்
என்களழு தீபத்திற் சம்புத் தீப
வரைப்புநவ கண்டமுடைத் தென்று கொள்க
மற்றவையும் படுபாகு பாடு சொல்வாம்.

இ–ள்': சொல்லுதற்கரிய சுத்தநீர்க் கடலைச் சூழ்ந்து கனக மயமாய் மாணிக்கம் முதலிய பலவேறு வகைப்பட்ட மணிகளை யெல்லாமுடைத்தாய் வயங்குவதாகிய பொன்னிலம் பத்துக்கோடி யோசனையை உடைத்து. அங்கு அதனைச் சூழ்ந்து உலோகா லோகமென்னும் சக்கரவாளகிரி பதினாயிரம் யோசனைப் பரப்புடையதாய் நிற்கும்; அந்த மலையின் புறத்தைச் சூழ்ந்து இருண்மயமாய்த் துன்னிய நிலம் முப்பத்தைந்து கோடியே பத்தொன்பது நூறாயிரத்து நாற்பதினாயிரம் பரப்புடையதா யிருக்கும்; அவ்விருள் நிலத்தைச் சூழ்ந்து பெரும் புறக்கடல் கோடியே இருபத்தேழு நூறாயிரம் யோசனைப் பரப்புடையதா யிருக்கும்; பெரும் புறக்கடலைச் சூழ்ந்தது அண்டச் சுவர் என்க. மேற்கூறிய ஏழு தீவில் சம்புத் தீபமானது ஒன்பது கண்டங்களை உடையது. மற்று அவைபடும் பாகுபாட்டினைக் கூறுவாம். (எ–று) 100

237. சாகமுதல் ஐந்தீபம் எவ்வேழ் பாகம்
சாருமவற் றத்துணைபொற் பாழி யந்த
மாகமருவுறு மேனைப் புட்க ரந்தான்
அன்றிரண்டு கூறுபடும் அதன்கட் கோட்டு
நாகமொரு மானசோத் தரப்பேர் கொண்டு
நணுகலுறும்; வட்டவடி வாகி முன்சொல்
பாகுபடு நாவற்பொற் றீப மேவும்
படிநடுவண் உந்திபோற் பகுதி யாகி

இ–ள்: சாகம் குசம் கிரௌஞ்சம் சான்மலி கோமேதகம் என்னும் ஐந்து தீவுகளும் ஒவ்வொன்று எவ்வேழ் பகுப்புள்ளதா யிருக்கும்; அவற்றுள் ஏழு பொற்பாழி அழகாகப் பொருந்தி யிருக்கும்; ஏனைய புட்கரத்தீவானது இரண்டு கூறாய் விளங்கும். அத்தீவின்கண் சிகரத்தையுடைய மலையொன்று மானசோத்தரப் பேர்கொண்டு வட்டவடிவாக இருக்கும். முன்சொன்ன பாகுபாட்டையுடைய அழகிய நாவலந் தீவானது பூமியின் நடுவண் பூமிதேவிக்குத் தொப்புள் போன்ற பகுதியாகிப் பொருந்தி யிருக்கும். (எ–று) 101

238. அனையதுநூ றுயிரயோ சனையகலம் உடைத்தாய்
அலைபுரட்டும் உவரிசூழ்ந் திடக்கிடக்கு மென்பர்
நனியதன்கண் ஒருபசும்பொன் வடிவுடைமா மேரு
நடுநிற்கும் பொகுட்டனைய உச்சியுடைத் ததுதான்
தனைநிகரும் படிபதினா றுயிரயோ சனைபோய்த்
தாழநிலத் தவ்வளவு தவிர்நூறு யிரயோ
சனையளவு நிவந்தோங்கிப் பதினாறு யிரயோ
சனையளவாம் பராரையொடு தயங்குமென அறியே.

*இ-ள்: அந்த நாவலந்தீவு நூறாயிரம் யோசனை அகலம் உடையதாய் உப்புக்கடல் சூழ்ந்திடக் கிடக்கும் என்பர். அத்தீவின் நடுவே பசும்பொன் நிறமுடைய மகாமேருமலை ஒன்று நிற்கும்; அது தாமரைப் பொகுட்டனைய உச்சியுடைத்து; அது தன்னைத்தானே நிகரும்படி நிலத்தின் கீழ்த்தாழ பதினாறாயிரம் யோசனை போய் அப்பதினாறாயிர யோசனை தவிர்ந்த இலக்க யோசனை உயரம் (எண்பத்து நான்கு நூறாயிரம் யோசனையளவு) உயர்ந்து பதினாறாயிர யோசனைப் பராரையுடையதாய் விளங்கும். (எ-று)* *102*

239. விருத்தவடி வுறுமினிய மேரு உச்சி
விரிவுமுப்பத் தீராயிரயோ சனையு டைத்தவ்
வரைத்தலையின் நடுப்பதினான் காயி ரத்தாய்
மனோவதியென் றொருசிகரம் வயங்கு மென்ப;
உரைத்தவதன் குடதிசையின் வெள்ளி யங்கோ
டொன்றுதிரு மாற்குளதங் நகரின் தென்பால்
மரைத்தவிசின் அயற்கொருபொற் குவடி றைக்கு
மணிச்சிகரம் ஒன்றுவட கிழக்கின் மேவும்.

*இ-ள்: வட்டவடிவமுடைய மேருமலையின் உச்சி முப்பத்தீராயிரம் யோசனைப் பிரிவினை உடையது. அம்மலையின் தலையிடத்தே நடுவில் பதினான்காயிரம் யோசனைப் பரப்புடைத்தாய் மனோவதி என்று பெயருடைய சிகரம் ஒன்று விளங்கும். அதற்கு மேற்கே வெள்ளி போன்ற நிறமுடைய சிகரம் ஒன்று திருமாலுக்கு*

*உரியது ; அதன் தென்பால் பிரமதேவனுக்கு ஒரு சிகரம் உண்டு ; வடகிழக்கிலே இறைக்கு (உருத்திர தேவற்கு) ஒரு மணிச்சிகரம் ஒன்று உள்ளது. (எ-று)* *103*

240. எந்தைவாழ் மணிக்குவடு மலரோ ஞதி
இமையவர்க ளுருத்திரர்பல் கணத்தா ரெல்லாம்
வந்துநா டொறும் வணங்கும் வளத்த தாமம்
மலைத்தலையின் அருகடுக்கின் எண்டி சைக்கண்
இந்திரா தியராமெண் டிசைபு ரப்பார்க்(கு)
எண்குவட்டு நகரங்கள் அவற்றுள் கீழ்பால்
உந்தவா டகமதில்சூழ் தகையான் மேவும்
தனியமரா வதிநகரம் சதம கற்கே.

*இ-ள் : மேற்கூறிய எந்தையாகிய உருத்திர தேவர் வாழும் மணிக்குவடானது மலரோனாதி இமையவர்கள் உருத்திரர்பல் கணத்தாரெல்லாம் வந்து நாள்தோறும் வணங்கும் வளத்தினை உடையது. மேருமலையின் தலைப்பகுதிக்கு அருகாயுள்ள மேகலையில் (சக்கரவாள மேகலையில்) எட்டுத் திசைக்கண்ணும் திக்குப்பாலகராகிய இந்திரன் முதலியோர்க்கு எட்டாகிய குவட்டிலுள்ள நகரங்கள் உள்ளன : அவ்வெட்டுள் கீழ்பால் இந்திரனுக்கு உரியதாயிருப்பது அமராவதி நகரமாம். (எ-று)* *104*

241. மின்திகழ்செம் மணிமதில்சூழ்ந் தவிர ழற்கு
வியநகாதே சோவதிதென் கீழ்ப்பால் மேவும்
தென்றிசையின் மணிமதில்சூழ்ந் தந்த கற்குத்
திகழ்சமுய மினிநகரம் ; தென்மேன் மூலை
மன்றநகர் நீலலோ கிதநல் லிஞ்சி
மருங்குடுத்த கண்ணவதி நிருதிக் காகும் ;
நின்றுநில வுமிழ்பளிக்கு மதில்சூழ் வேலி
நிகழ்சுத்த வதிகுடபால் நீரி றைக்கே.

*இ-ள் : அழல் என்னும் அக்கினி தேவனுக்குத் தென் கீழ்ப்பால் திசையில் தேசோவதி என்னும் நகரம் உள்ளது. இயம*

*தேவனுக்குத் தென்றிசையில் சமுயமினி என்னும் நகரம் உள்ளது. நிருதிதேவனுக்குத் தென்மேற்கு மூலையில் கண்ணவதி என்னும் நகரம் உள்ளது. வருண தேவனுக்கு மேற்றிசையில் சுத்தவதி என்னும் நகரம் உள்ளது. (எ-று)* *105*

242. கந்தவதி எனுநகரைம் மணியி யன்ற
கடிமதில்சூழ்ந் தொலிக்குவட மேற்கின் மேவும்;
நந்துமணி முழுவதும்கொண் டியற்று மிஞ்சி
நகரம்மகோ தயம்வடபால் குபேரற் காகும்;
இந்துமனம் அழியவொளிர் வெள்ளி இஞ்சி
இசைந்தயசோ வதிநகரம் ஈசானற்கு
வந்துமலி வளம்மருவி வடகி ழக்கில்
வயங்குமென ஆகமநூல் வகுக்கு மன்றே.

*இ-ள்: ஒலி என்னும் வாயுதேவனுக்கு வடமேற்றிசையில் கந்தவதி என்னும் நகரம் உள்ளது. குபேரனுக்கு வடக்குத் திசையில் மகோதயம் என்னும் நகரம் உள்ளது. ஈசான தேவற்கு வடகிழக்குத் திக்கில் யசோவதி என்னும் நகரம் உள்ளது. இவ்வாறு ஆகமநூல் கூறும். (எ-று)* *106*

243. செப்பியஅவ் வட்டத்தின் கீழி ருப்பர்
சித்தர்முத லானோரம் மேரு விற்குத்
துப்புறுதற் பொருட்டுநாற் றிசையில் நான்குத்
துணைமலைகள் உளஓரோ வொன்று யர்ச்சி
அப்பகரும் யோசனையாம் அளவில் கூறில்
ஐம்பதினா யிரம்குணபா லாதி வைகும்
ஒப்பறுமந் தரம்கந்த மாத னஞ்சீர்
உறுநீல வரைசுபா ரிசமென் பேரால்.

*இ-ள்: அட்டதிக்குப் பாலர் உள்ள மேகலையின்கீழ் உள்ள மேகலைகளில், சித்தர் முதலாயினோர் இருப்பர். அந்த மகா மேருமலைக்கு வலிமையுறுதற் பொருட்டு நான்கு திசையிலும் நான்கு மலைகள் உள்ளன. ஒவ்வொன்றின் உயரம் ஐம்பதினாயிரம்*

யோசனையாம். கிழக்கு முதலாய் நாற்றிசையிலும் முறையே மந்தரம், கந்தமாதனம், நீலமலை, சுபாரிசம் என்னும் பெயருடன் அவை உள்ளன. (எ-று) 107

244. அம்மலைகள் நிறம்வெண்மை பொன்மை நீலம்
அருணமாம் அவற்றில்முறை கடம்பு சம்பு
மொய்ம்மலரில் அரசுநியக் கோதம் என்னும்
முழுமரம் உத்தரந்தெற்குக் குணக்கு மேற்கில்
செம்மையின்யோ சனையொரா யிரத்த வாகச்
சென்றுயர்ந்து நிற்குமக்கீ லகவ ரைக்கீழ்
வெம்மையில்சித் திராதமாம் வனம்கி ழக்கில்
மேவுமதில் அருணோத மடுவொன் றுண்டால்.

இ-ள்: அம்மலைகளின் நிறம் முறையே வெண்மையும் பொன்மையும் நீலமும் சிவப்புமாம். அவற்றில் முறையே கடம்பு நாவல் அரசு ஆல் வடக்கு தெற்கு கிழக்கு மேற்கில் ஓராயிர யோசனை உயரமுடையதாக உயர்ந்து நிற்கும். அத்துணை மலையின்கீழ் கிழக்குத் திக்கில் (மந்தர மலையடிவாரத்தில்) சைத்திர ரதம் என்னும் உய்யான வனமும் அருணோதகம் என்னும் மடுவும் உள்ளன. (எ-று) 108

245. நண்ணுறுமா னதசரோத வாவித் தென்பால்
நந்தனப்பேர் வனத்து; வயப்பிரசக் கானில்
தண்ணியசி தோதமெனும் மடுக்கு டக்கில்
தங்கலுறும்; உத்தரத்தில் துருதம் என்னும்
எண்ணரிய வனத்தில்மகா கிருத நாம
இலஞ்சியுறும் என்றறிமுன் இயம்பு தெற்கின்
கண்ணுறுமோர் கந்தமா தனத்து நாவற்
கனியொருமா கயப்பெருமை காட்டு மன்றே.

இ-ள்: மேருமலையின் தென்பால், கந்தமாதனத்தின் அடிவாரத்தில் நந்தனம் என்னும் பெயரிய வனமும் மானத சரோத வாவியும் நண்ணுறும். மேல்பால் விபுலமலை அடிவாரத்தில்

வைப்பிராசமென்னும் வனமும் சிதோதகமென்னும் மடுவும் தங்கலுறும்; வடதிசையில் சுபாரிசமென்னும் மலையடிவாரத்தில் துருதம் (துருதிமான்) என்னும் வனத்தில் மகாகிருதம் என்னும் மடுவும் பொருந்தியிருக்கும். முன்னே கூறிய தென்றிசையில் பொருந்தியுள்ள கந்தமாதன மலையில் உள்ள நாவல் மரம். அம்மரத்தின் பழச்சாறு ஒழுகி ஒரு பெரிய தடாகமாய் விளங்கும். (எ-று) 109

246. அக்கனிவாய் ஒழுகிரதம் நாவ லாருய்
அம்மேரு மலையினைச்சூழ்ந் ததனைச் சூழ்ந்த
மிக்கஇலா விருதவரு டம்பொன் னுக
விளைத்தருந்து மவற்றைப்பொன் மேனி யாக்கும்
இக்கனகா சலம்சூழ்ந்த நவகண் டங்கள்
இயம்பில்நடுத் தென்றிசையுத் தரங்கள் தம்மில்
தொக்கமா வருடங்கள் மும்மூன் ருகும்
தோன்றுசிம வரைகளால் இடையீ டெய்தும்.

இ-ள்: மேற்கூறிய நாவல்மரக் கனியிடத்திலிருந்து ஒழுகும் சாறு நாவல் என்னும் ஆருய் அம்மேரு மலையினைச் சூழ்ந்து அதனைச் சூழ்ந்த இலாவிருதவருடம் (மேருவைச் சூழ்ந்த இடம்) பொன்னிறம் பெறும்படிச் செய்து, அச்சாருகிய நீரைப் பருகும் பறவை விலங்கு முதலியனவெல்லாம் பொன்னிறம் பெறுமாறு செய்யும். இந்த மேருமலையைச் சூழ்ந்த ஒன்பது கண்டங்களை இயம்பில் நடுவிலும் தென்றிசையிலும் உத்தர திசையிலும் சேர்ந்து வருடங்கள் (நிலப்பகுப்பு) மும்மூன்ருகும், அவை உச்சியை யுடைய மலைகளால் இடையிடுதலைப் பெறும். (எ-று) 110

247. மேருமலை தன்குணக்கிற் கண்ட மோடு
மேற்றிசையிற் கண்டம்நடுக் கண்டம் மூன்றும்
சீருலவு சதுரவடி வாகு மென்பர்
தென்றிசையுத் தரங்கள்தமின் இவ்வி ரண்டும்
நேருநெடி லெனவேனை இரண்டு வாங்கு
நெடுஞ்சிலைபோன் றிருப்பனவச் சிமவெற் போதின்
ஏருலவு நிடதமலை ஏம கூடம்
இமவான்என் பனதென்கண் டத்த மாதோ.

இ-ள்: மேருமலையின் கிழக்கே உள்ள கண்டமும் மேற்றிசையிற் கண்டமும் நடுக்கண்டமும் ஆகிய மூன்றும் சதுர வடிவாயிருக்கும். தென்றிசை உத்தரதிசை தம்முள் இரண்டிரண்டு நிலப்பரப்பும் ஒத்த நெட்டெழுத்துப்போல, இரண்டு வளைந்த நீண்ட வில்போல இருப்பனவாம். அவற்றுள் தென்கண்டத்தில் உள்ள உச்சியையுடைய மலைகளைக் கூறின் அவை நிடதமும் ஏமகூடமும் இமவானும் என்பனவாம். 111

248. நீலமலை சுவேதவரை சிருங்க வெற்பு
நெடுமேரு வடகண்டம் நிகழ்வ வாகும்
நீலமலை நிடதமலை எனுமி ரண்டும்
நிகழ்த்தில்நூ ருயிரயோ சனைகள் உள்ள
ஏலமலை ஒழிந்தவற் றயுதம் குன்றும்
இவையனைத்தும் இராயிரவோ சனையுயர்ச்சி
மேலகல முடையனவிம் மலைகள் நாப்பண்
விரிநிலம்வே றென்பதினா யிரமா மன்றே.

மேருமலையின் வடகண்டத்தில் நீலமலையும், சுவேதமலையும், சிருங்கமலையும் நிகழ்வனவாகும். அவற்றுள் நீலம், நிடதம் என்னும் இரண்டு மலையும் நூறுயிர யோசனை நீளம் உள்ளன. ஏனையது மேற்கூறிய அளவில் பதினாயிரம் (அயுதம்) குறைவாயிருக்கும். இவ்வெல்லா மலைகளும் இரண்டாயிரயோசனை உயரமும் அகலமும் உடையன. இம்மலைகளின் இடையே உள்ள நிலப்பரப்பு ஒன்பதினாயிரம் யோசனை அளவுள்ளன. (எ-று) 112

249. கிழக்குமேற் காகநீண் டுததி தோய்ந்து
கிடக்கும்நுதி யுளவாமவ் வரைக்குஞ் சேய்மை
வழுக்கிலாப் பத்துநூ றாகித் தெற்கு
வடக்காய்நீண் டுயர்வகலம் அவ்வெண் ணாகி
இழுக்கிலாப் பெருமாலி யங்கி டக்கும்
இருநாலா யிரமாமோ சனைதூ ரத்தில்
ஒழுக்கிலாக் கந்தமா தனமவ் வாறாய்
உயர்ந்தகன்றம் மலைபோலக் கிடக்கு மாதோ.

இ-ள்: மேலே கூறிய மலைகள் கிழக்கு மேற்காக நீண்டு கடலினைத் தோய்ந்து கிடக்கும் நுனியினை உள்வாம். அவ்வரைக்குச் சேய்மையில் ஆயிரம் யோசனை உடையதாகித் தெற்கு வடக்காய் நீண்டு உயர்ச்சியும் அகலமும் அவ்வெண்ணகிப் பெருமாலியமலை கிடக்கும். மேருமலைக்கு எண்ணுயிரம் யோசனை தூரத்தில் கந்தமாதன மலையானது பெருமாலிய மலைபோல தெற்கு வடக்காய் நீண்டு, உயரமும் அகலமும் அந்த அளவினையுடையதாய்க் கிடக்கும். (எ-று) *113*

250. அரிவருடம் கிம்புருட வருடம் பின்னர்
அடுத்தபா ரதவருட மாமிம் மூன்றும்
தெரிவரிய மேருவின்தென் திசைய வாகும்;
திகழிரம் மியவருடம் இரணி யஞ்சீர்க்
குருவருடம் வடபுலத்த; கூறும் ஆறும்
குரைகடலின் காறும்நீண் டோச னைப்பால்
விரிவுசொலின் ஒன்பதின யிரமொவ் வொன்றும்
மேருவைச்சூழ்ந் துறுவதிளா விருத மாமவ்
வரையினுறு குணதுமா லியத்தின் கீழ்பால்
வருடமகல் பத்திரா சுவமா மன்றே.

இ-ள்: அரிவருடம் கிம்புருட வருடம் பாரத வருடம் என்னும் மூன்று நிலப்பரப்பும் மேருமலையின் தென்திசைக் கண்ணவாம். இரம்மிய வருடம் இரணிய வருடம் குருவருடம் என்னும் நிலப்பரப்பு மேருவரையின் வடபுலத்திலுள்ளன. மேற்கூறிய ஆறும் ஒவ்வொன்றும் கடல்வரை நீண்டு ஒன்பதினுயிர யோசனை அளவினையுடையன. மேருமலையைச் சூழ்ந்துள்ளது இளாவிருத வருடமாம்; மேருமலையின் கிழக்கே மாலியவான் என்னும் மலையின் கீழ்பால் பத்திராசுவ வருடமாம். (எ-று) *114*

## குறிப்பு

இப்பாட்டு ஐந்து அடிகளைப் பெற்றுள்ளன.

251. மேற்றிசையிற் கந்தமா தனத்தின் மேற்பால்
மெங்கேது மாலமிவை ஒன்பான் கண்ணும்
ஆற்றல்மிகு குலவரையவ் வேழ்பொ ருந்தும்
அவற்றில்நதி பலவுளவென் றறைவர் நல்லோர்
சாற்றுமரி வருடமுதல் எட்டின் வாழ்வோர்
தக்கபா ரதவருடந் தன்னிற் செய்த
ஊற்றஅற மரபாற்கற் பகத்தின் தெய்வ
உணவுண்டு நெடுநாளங் குறைவ ரன்றே.

*இ–ள்: மேருமலைக்கு மேலைத் திசையில் உள்ள கந்தமாதன மலையின் மேற்பாலுள்ள நிலப்பகுதி கேதுமாலமாம். அவ்வொன்பது வருடத்திலும் இமயமலை யொழிந்த ஏழு மலைகள் பொருந்தும் எட்டு வருடத்தில் நதிகள் பலவுள்ளன என்று நல்லோர் கூறுவார். அரிவருடம் முதலான எட்டில் வாழ்வோர் தகுதிவாய்ந்த பாரத வருடந் தன்னிற் செய்த ஊற்றமான அறங்களால் கற்பக மரந்தரும் தெய்வ உணவினையுண்டு நெடுநாள் அங்கு உறைவர். (எ–று)* *115*

252. ஆண்டுவரும் உகங்களால் ஆற்றப் பட்ட
அவத்தாபே தங்களிலை யாகு மென்பர்
ஈண்டுரைசெய் பாரதகண் டத்தின் வாழ்வார்க்(கு)
எணின்உகங்கட் கடுத்தவுணர் வாயுள் ஆற்றல்
பூண்டவர்கள் உழவாதி தொழிலாற் பெற்ற
புசிப்பருந்து பவராய்முத் தாபம் மேவி
நீண்டதுய ரினராவர் இக்கண் டத்து
நிகழ்த்துமிரு வினைகள்வே றுலகின் உண்பர்.

*இ–ள்: அரிவருடம் முதல் எட்டில் வாழ்பவர்க்கு யுக பேதங்களால் உண்டாகும் அவத்தைகளின் வேறுபாடு இல்லை என்பர். இங்கே கூறப்பட்ட பாரத கண்டத்தின் வாழ்பவர்க்கு எண்ணின், யுகங்கட்கு அடுத்த அறிவும் ஆயுளும் ஆற்றலும் பூண்டவர்கள். உழவு முதலான தொழிலாற் பெற்ற புசிப்பு அருந்துபவராய் ஆதியாத்மிகம் முதலான மூன்று தாபங்களை*

*மேவி, நீண்ட துன்பத்தை உடையவராவார். இக் கண்டத்து நிகழ்த்தும் இருவினைகட்குப் பயனை வேறு உலகில் உண்பர். (எ–று)* *116*

253. எடுத்தபா ரதகண்டம் யாண்ட தென்னின்
இம்மலையி னின்றுதெனு துததி யீருய்ப்
படைத்தநவ ஆயிரத்தா மென்பர் அந்தப்
பாரதத்துள் ஆயிரவோ சனையவ் வோங்கல்
அடுத்தநிலம் விடுத்துவரி யொழிந்த வோரெண்
ணுயிரமும் கொண்டுளதச் சாக ரஞ்சூழ்ந்(து)
உடுத்தநவ தீபங்கள் உளவ வற்றை
உரைத்திடுவன் ஆகமத்து ணுணர்ந்த வன்றே.

*இ–ள்: மேற்கூறிய பாரத கண்டம் யாண்டது என்னில் இமயமலையினின்றும் தெற்கே கடல் ஈறுக உள்ள பூமியாகும். அது ஒன்பது ஆயிர யோசனை அளவு உடையது என்பர். அந்தப் பாரதத்துள் ஆயிர யோசனைப் பரப்பையுடைய இமய மலையின் அளவைக் கழித்த எண்ணுயிரம் யோசனை அளவை யுடையது எஞ்சிய பகுதி. அப்பாரதகண்டத்துள் கடலாற் சூழப்பட்ட ஒன்பது தீபங்கள் (தீவுகள்) உள; அவற்றைச் சிவாகமம் கூறியவாறு கூறுகின்றேன். (எ–று)* *117*

254. இந்திரவண் டைபமலி கசேருத் தீபம்
இலங்கலுறு தாம்பிரவன் னகமாந் தீபம்
சிந்துவிடை யுறுகபர்த்தி மானன் நாகத்
தீபமொடு சந்திரமா னதமென் றீபம்
கந்திருவம் வாருணமே மிக்க கன்னி
யாத்தீபம் எனுமிவற்றுட் கூறு மந்த
அந்தமுறு குமரியலா தனவொவ் வொன்றே
ராயிரவோ சனைவிரிந்த வலய மாமே.

*இ–ள்: இந்திரத் தீவு, கசேருத் தீவு, தாமிரவர்ணித் தீவு, கடலிடத்தேயுள்ள கபர்த்திமானத் தீவு, நாகத் தீவு, சந்திரமானத்*

தீவு, காந்தருவத் தீவு, வாருணத் தீவு, கன்னியாத் தீவு, (குமரித் தீவு) என்னும் இவற்றுள் ஈற்றிற் கூறிய குமரித் தீவல்லாதன ஒவ்வொன்றும், ஓராயிர யோசனை யளவு விரிந்த வட்டமாகும். (எ—று) 118

## குறிப்பு

"இவ்வொன்பதினுள்ளும் குமரிக் கண்டமொன்றே வேதாகம வழக்கமும், சாதிவரம்பும், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களும், காசி முதலிய புண்ணியத் தலங்களு முடைத்தாய்ச் சிறந்தது. ஏனை எட்டுக் கண்டமும் மிலேச்சர் வாழிடங்களாம்" என்பது (சூ. 2 அதி. 8) என்பது சிவஞானபாடியம்.

## குமரித் தீபம்

255. நீட்டமொரு வடிவுடைத்துக் குமரித் தீபம்
நீள்பனிமா மலைதொடங்கிச் சேது வீருய்க்
காட்டலுறு வடதெற்குப் பத்து நூருய்க்
கவின்கனிந்து கிழக்குமேற் கொழுகு நாரி
ஊட்டுகொடு மரநிகர்பா ரதகண் டத்துட்
பொருந்தலுறும் மகேந்திரம்நன் மலையம் சையம்
பாட்டுரைசெய் சுத்திமான் விருக்கம் விந்தம்
பாரியாத் திரமெனும்பேர்க் குலவெற் பன்றே.

இ—ள்: இமயமலை தொடங்கிச் சேது ஈருக வடக்குந் தெற்கும் ஆயிரம் யோசனை அளவில், அழகுமிகுந்து கிழக்கு மேற்கில் நாரிகட்டிய வில்லை நிகர்த்த பாரதகண்டத்துள் நீண்ட ஒன்ருகிய வடிவினையுடையது குமரித் தீபம். ஆண்டு மகேந்திரம், நல்ல மலயம், சையம், சுத்திமான், விருக்கம், விந்தம், பாரியாத் திரம் என்னும் பெயருடைய குலமலைகள் பொருந்தும். (எ—று) 119

256. வேறுலக சாதனமாம் இக்கண் டத்துள்
மெய்த்தவர்கள் பலதவங்கள் விளைப்பர்; வேதம்
கூறுமதம் அறங்கள்பல தானம் செய்வர்
கூறியஇப் பாரதமா வருடந் தன்னில்

ஆறுபல வுளஅவற்றுள் கங்கை யாதி
அறநதிஐம் பதுகோடி அவற்றுள் கோடி
பேறுதரு தீர்த்தங்கள் அவற்றுள் மேன்மை
பெறும்வார ணசிமுதல் அறுபத் தெட்டே.

*இ-ள் :* *வேற்றுலகத்திற் சென்று இன்பம் அனுபவித்தற்குக் கருவியாகிய இக்கண்டத்துள் தவம் செய்வோர் பலவகைத் தவங்களைச் செய்வர்; வேதம் கூறும் சமயத்தைப் பின்பற்றி நின்று அறமும் தானமும் செய்பவர் பலர். குமரி முதலிய தீவுகளை உள்ளடக்கிய பாரதகண்டத்தில் ஆறுகள் பல உள்ளன; அவற்றுள் கங்கை முதலிய அற நதிகள் ஐம்பது கோடி உள்ளன; அவற்றுள் கோடி பேறுதரும் தீர்த்தங்களாம்; அவற்றுள் மேன்மை பெறுவன வாரணசி முதல் அறுபத்தெட்டாம். (எ-று)* *120*

## புவலோகம்

257. இத்தகைமை இயம்புசம்புத் தீபம் சூழ்வுற்(று)
இணையிலண்ட கடாகமள விருக்கும் ஓதை
அத்திகளும் அகல்தீபம் அனைத்தும் முன்னம்
அறைந்தனம்; மே லுலகமினி அளந்து கூறின்
இத்துறையின் மிசைதுருவ மளவா மூவைந்(து)
இலக்கத்தில் புவலோகம் இருக்கும் என்பர்
அத்தலையின் உலகசீ வனமாம் மேகம்
அடுத்திருக்கும் எறிவளிபற் றுக வன்றே.

*இ-ள் :* *இத்தகைமையாக இயம்பப்பட்ட சம்புத் தீபம் சூழ்வுற்றுள்ள, அண்டகடாகம் அளவுள்ள கடல்களும் தீபங்களும் முன்னம் கூறினோம். இனி மேலுலகத்தை அளந்து கூறின், (பூலோகத்தின் மேல், வாயு மண்டலம், மேக மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம், முதலாகத்) துருவ மண்டலம் அளவாகப் பதினைந்து நூறாயிரம் யோசனை உயரம் உடையதாகப் புவலோகம் இருக்கும் என்பர். அவ்வுலகத்திலே உலகம் வாழ்வதற்கு ஏதுவாகிய மேகமானது வாயு மண்டலத்திலுள்ள வாயுவைப் பற்றுக்கோடாகக் கொண்டு பொருந்தியிருக்கும். (எ-று)* *121*

## சுவலோகம்; மகலோகம்

258. சித்தரொடு கந்திருவர் முதலோர் தானம்
செங்கதிரோன் முதலாய கோளி டங்கள்
அத்தலையின் அமைவுறுமங் கதன்மேல் கூறின்
அவ்வளவு குறைகோடி யோச னைக்கண்
மெய்த்தசுவ லோகமுறும்; அதன்கண் வேழ
விருடனன்மெய்த் தேவருடன் மேவும் அப்பால்
வைத்தயிரு கோடியோ சனைக்கண் சாரும்
மகலோகம் அதிலமர்வர் மார்க்கண் டாதி.

*இ-ள்: அப் புவலோகத்தில் சித்தர்கந்திருவர் முதலானவர் வாழிடமும், கதிரவன் முதலான கிரகங்களின் இடமும் அமைந் திருக்கும். இனி அதன்மேல் கூறின் எண்பத்தைந்து நூறுயிரம் யோசனை உயரத்தில் சுவலோகம் இருக்கும்; அதன்கண் இந்திரன் தேவருடன் மேவும்; அதன்மேல் இரண்டுகோடி யோசனை உயரத்தில் மகலோகம் இருக்கும்; அதில் மார்க்கண்டர் முதலிய முனிவர் வாழ்வர். (எ-று)* *122*

### குறிப்பு

*அவ்வளவு குறை கோடி - புவலோகத்தின் அளவு (பதினைந்து இலட்சம்) குறைந்த கோடி; அது எண்பத்தைந்து இலட்சம். வேழ விருடனன் - இந்திரன்.*

259. சாற்றுமதன் மிசைஎண்கோ டியினி ருக்கும்
சனலோகம் அதில்வதிட்டா திகளி ருப்பர்;
ஏற்றவதன் மிசைதவலோ கந்தான் ஓர்பன்
னிருகோடி யோசனைக்க ணிருக்கு மாங்குப்
போற்றுசன காதியோ கிகளி ருப்பர்;
புகன்றவதன் மிசையீரெண் கோடி மீதில்
ஆற்றல்மிகு சத்தியலோ கம்பொ ருந்தும்
ஆயிடைநான் முகக்கடவுள் அமரு மன்றே.

*இ-ள் : மேற்கூறின மகலோகத்தின் மேல் எட்டுக்கோடி உயரத்தில் இருப்பது சன லோகமாம்; அதில் வதிட்டர் முதலிய முனிவரிருப்பவர். ஏற்ற அதன்மேல் தவலோகமானது பன்னிரண்டுகோடி யோசனை அளவுள்ளதாயிருக்கும்; அங்கு சனகாதி யோகிகள் இருப்பர். புகன்ற அதன்மேல் பதினாறு கோடி யோசனை அளவில் சத்தியலோகம் பொருந்தும்; ஆயிடை நான்முகக் கடவுள் வீற்றிருப்பர். (எ-று)* *123*

260. விரிஞ்சன்உல கின்மீது நான்கு கோடி
மேலிருக்கும் மாலுலகம்; அதன தும்பர்
திருந்துமறு கோடியோ சனையி லெங்கள்
சிவலோக மிருக்குமெனத் தெரிந்து கொள்நீ
பொருந்துமதன் மிசைகோடி யோச னைக்கண்
பொருவிலண்ட கடாகமெனப் புகல்வர் நல்லோர்
பரந்தநில மிசைகடா காந்த மாயைம்
பதுகோடி யோசனையிப் பரிசி னுமே.

*இ-ள் : நான்முகன் உலகத்திற்கு மேல் நான்கு கோடி யோசனை உயரத்தில் திருமால் உலகம் இருக்கும். அதன்மேல் ஆறுகோடி யோசனை உயரமுடையதாய்ச் சிவலோகம் இருக்கும் எனத் தெரிந்துகொள் நீ. அதற்குமேல் அண்டச் சுவர் என்னும் அண்டகடாகத்தின் கனம் கோடி யோசனை உயரமுடையது. மேற்கூறிய அளவு முறைப்படி பூவுலகத்திலிருந்து அண்டகடாகம் வரை ஐம்பது கோடி யோசனை ஆகும். (எ-று)* *124*

## பூவுலகின் கீழுலகம்

261. காசினியின் கீழுலகம் கட்டு ரைப்பில்
கடாகஅரு கிற்காலா னலப்பேர் அண்ணல்
ஆசிலுல குறும்கோடி யளவு யர்ந்த
அவன்றனது சுவாலையீ ரைந்து கோடி
தேசுமலி யதன்மிசையோர் ஐந்து கோடி
செழும்புகையங் கவனையர் சேர்வ ரப்பான்
மாசுமலி பாவிகள்தம் பாவம் நான்கு
மடியூட்டும் நரகுலகம் மருவு மன்றே.

இ-ள் : பூவுலகின் கீழே உள்ள உலகங்களைக் கூறினல், கீழேயுள்ள அண்டகடாகத்தின் அருகில் காலாக்கினி உருத்திர ருடைய புவனம் உள்ளது. அப்புவனம் கோடி யோசனை அளவு உயர்ந்தது; அக் காலாக்கினி உருத்திரருடைய சுவாலை அப் புவனத்திற்கு மேல் ஐந்துகோடி யோசனை அளவுள்ளது; செழும் புகை அதன்மேல் ஐந்து கோடி யோசனை அளவுள்ளது. அவ் வண்டத்தில் அவ்வுருத்திரரோடு ஒத்த உருத்திரர்கள் சேர்ந்திருப்பர். அதற்குமேல் குற்றம் மலிந்த பாவிகளின் பாவத்தை ஊட்டுகின்ற நரகம், மாநரகம், இராச நரகம், இராச ராசேச்சுர நரகம் என்னும் நான்குவகை நரகங்கள் நிலை பெற்றிருக்கும். (எ-று) 125

262. நறுமலரோன் புரிமுப்பத் திரண்டி லக்கம்
நரகினில்எண் ணுன்குநா யகமாம்; அந்த
இறைநரகம் முப்பதுகோ டியின்மேல் ஓரீர்
இலக்கயோ சனையவைமேல் அவற்றின் வேந்தாய்
அறைதருகூர் மாண்டபுவ னம்பொ ருந்தும்
அதன்மிசைமுக் கோடிபன்னீ ரிலக்க மீதில்
அறுபதினு யிரமோச னைக்கண் மேவி
அமையுமெழு பாதலமென் றறையும் நூலே.

இ-ள் : நான்முகனல் படைக்கப்பட்ட முப்பத்திரண்டிலக்கம் நரகத்தில் முப்பத்திரண்டு நரகம் நாயகமாகும். அந்த நரக உலகம் முப்பது கோடியின்மேல் இரண்டு இலக்கம் யோசனை (முப்பது கோடியே இரண்டிலக்க யோசனை) உயரமுடையது. மேல் அவற்றின் வேந்தாய் கூர்மாண்ட (கூசுமாண்ட) புவனம் பொருந்தும். அதன்மிசை முக்கோடியே பன்னிரண்டிலக்கத்தின் மேல் அறுபதினுயிரம் யோசனை உயரத்தில் ஏழு பாதாலமும் அமையும். (எ-று) 126

263. உரைத்தஅவை ஒன்பதினு யிரத்தில் ஒவ்வொன்
றுயரமுற யிருந்தவைமுக் கண்ட மாகி
அரக்கருடன் உரகர்தயித் தியரே மேவும்
அவைமிசையங் கவற்றிறைவன் ஆட கேசன்

இருக்குமொரா யிரவோச னைப்பால் என்பர்
இதன்மீது கோடியோ சனைபெ ருத்து
விருத்திசத கோடியக 'னருது வெற்பு
வேலைதீ பம்பலஞ்சேர் ஞாலம் மேவும்

*இ-ள்: ஏழுபாதலமும் ஒவ்வொன்று ஒன்பதினயிரம் யோசனை உயரமும் ஒவ்வொன்று ஓராயிரம் யோசனை மேல்வெளி உயரமும் பெற்றிருக்கும் அவை ஒவ்வொன்றும் முக்கண்டம் ஆகி முதற்கண்டத்தில் சங்கசுருதி முதலான அரக்கரும் இரண்டாம் கண்டத்தில் குடிலன் முதலான உரகவேந்தரும் மூன்ருங் கண்டத்தில் விகடன் முதலான இராக்கதரும் மேவுவர். பாதலம் ஏழிற்குமேல் அவற்றின் தலைவனுகிய ஆடகேசன் ஓராயிர யோசனை உயரமுடைய புவனத்தில் இருப்பன். ஆடகேசுர புவனத்தின்மேல் கோடியோசனை பெருத்து நூறுகோடி யோசனை விரிவினைப் பெற்று மலைகடல் தீபம் முதலானவற்றுடன் பயன் நிறைந்த பூவுலகம் மேவியிருக்கும். (எ-று) 127*

264. அப்படிமுன் புகன்றனமிப் பிரமாண் டத்துள்
ஐம்பதுமேல் இருபுவனம் அறையப் பட்ட
செப்பிடிலிங் குலோகபாலாட் டகங்க டம்மைத்
திருந்தியவண் டத்தின்கீழ்த் திசைதொ டங்கி
வைப்புறுமெண் டிசையையுமிந் திராதி யாக
வருமிருநால் வரும்புரப்பர் வழாதிவ் வாற்ருல்
ஒப்பரிய பவுதிகமாம் பிரமாண் டத்தில்
உறுபுவனம் அறுபஃதும் உரைத்தா மன்றே.

*இ-ள்: இப் பிரம்மாண்டத்தில் ஐம்பத்திரண்டு புவனம் கூறினேம். இனி உலோகபாலாட்டகங்களைக் கூறில் பிரம்மாண்டத்தின் கீழ்த்திசை தொடங்கி எட்டுத்திசையையும் இந்திரன் முதலான எண்மரும் புரப்பர்; மேற்கூறிய ஐம்பத்திரண்டு புவனங்களுடன் எட்டையும் சேர்க்க அறுபது ஆயின; அவற்றைக் கூறினும். (எ-று) 128*

265. அப்பிரமாண் டத்தினுளீ ரைந்து திக்கும்
அருஞ்சதருத் திரகணங்கள் பப்பத் தாக
செப்பும்பா லாட்டகர்தம் முதல்வ ரென்னச்
செல்வமொடு வடிவுபல திறத்த வாகி
ஒப்பிலா வளவிலுருத் திரர்கள் சூழ
உவந்துதத்தம் பெயர்புனைந்த உலகத் தொன்றும்
இப்பரிசில் ஞாலமுறு புவனம் சொற்றும்
ஏனையதத் துவபுவனம் இசைத்தாம் முன்னே.

*இ—ள்: நிலதத்துவமாகிய அந்தப் பிரம்மாண்டத்தில் (பிரமாண்டத்தின் அப்புறத்தே) பத்துத் திசையிலும் நூறு உருத்திரகணங்கள் பத்துப் பத்தாக, எண்மர் முதல்வர் என்னச் செல்வத்துடன் வடிவு பல திறத்தவாகி ஒப்பிலா அளவில்லாத உருத்திரர்கள் சூழ உவந்து தம்தம் பெயர்புனைந்த உலகத்து ஒன்றியிருப்பர். இந்த வகையிலே நிலதத்துவத்தில் உள்ள புவனத்தைக் கூறினும்: ஏனைய தத்துவ புவனத்தை முன்னே கூறினும். (எ—று)* *129*

## குறிப்பு

*இந்தச் சாதாரண புடவிதத்துவமாகிய அண்டத்தின் அப்புறத்தே பத்துத்திசையினும் காவல் பூண்டு வரும் உருத்திரர் ஒவ்வொரு திசைக்கும் பதின்மராக நூற்றுவரும், அண்டத்தின் உள்ளாகக் கீழும் மேலும் அறுவரும் எல்லார்க்கும் மேலாக இருவருமாக நூற்றெட்டு உருத்திரர் உளர். அவரவர் வைகும் புவனங்களும் அவரவர் பெயரானே வழங்கப் படும்." என்பது (சூ-2: அதி-3.) சிவஞானபாடியம்.*

266. சிவமுதல தத்துவங்கள் செறிந்தி ருக்கும்
செழும்புரம்எண் ணிலஅவற்றுட் சிறப்புற் றோங்கும்
புவனமொரு சிலபுகலப் பட்ட வந்த
புவனேசர் பெயராலப் புவன மெல்லாம்
உவமைதவிர் வனபொருள்கள் ஒளிய பூண்கள்
உள்ளனநல் லிசைபாடல் ஆடல் வல்ல
குவிமுலைவெண் டரளநகைக் கோதை மாதர்
குறுகியமென் மேலுயர்வு கொண்ட மாதோ.

இ-ள்: சிவம் முதலான தத்துவங்களில் பொருந்தியுள்ள புவனங்கள் கணக்கற்றன: அவற்றுள் சிறப்புற்றோங்கும் புவனம் ஒருசில புகலப்பட்டன: அந்தப்புவனங்களெல்லாம் அவ்வப் புவனேசர் பெயரால்வழங்கபட்டனவாய் ஒப்பற்ற பொருள்களும் ஒள்ளிய பூண்களும் உள்ளனவாய், நல்ல இசைப்பாடல் ஆடல் வல்ல பெண்களும் பொருந்தியுள்ளனவாய் மேல்மேல் உயர்வு கொண்டனவாய் விளங்கும். (எ-று) 130

## புவனேசரை; வழிபட்டோர் பெறும் பேறு.

267. இயம்பலுறு புவனேச ரென்பர் தம்முள்
யாவரையார் வந்தனைசெய் திடுவர் அன்னார்
வயங்கும்வர புரத்தின்மதி யிரவி காறும்
மருவியப் புவனபோ கங்கண் மாந்தி
நயங்கொளவாந் தரசிருட்டி தன்னின் மீண்டும்
நடுவுலகில் வந்துதித்து நற்கு லத்தில்
உயர்ந்தவளம் நுகர்வரின்பப் புவன தாரம்
உறுதத்து வங்களள வுரைப்ப னன்றே.

இ-ள்: மேற் கூறப்பட்ட புவனேசர் என்பவர் தம்முள் யாவரையாவது எவரேனும் வந்தனை செய்திடுவராயின், வந்தனை செய்த அவர் சிறந்த புவனத்திலே திங்களும் கதிரும் உள்ளவரை பொருந்தியிருந்து அப் புவனத்திலுள்ள போகங்களை நுகர்ந்து அவாந்தர சிருட்டியில் (இடைக்கால சிருட்டியில்) மீண்டும் பூவுலகில் நல்ல குலத்தில் வந்து பிறந்து உயர்ந்த செல்வத்தைப் பெற்று நுகர்வர். இனிப் புவனங்களுக்கு இடமாகிய தத்துவங்களின் அளவினைக் கூறுவேன். (எ-று) 131

## நீட்டலளவை வாய்ப்பாடு

268. தத்தமள வுறவளக்குந் தகைமை யாமத்
தத்துவங்கள் அவ்வளவு சாற்றற் காக
எய்த்தமுறை யோசனையை இங்கி யம்பின்
இன்னுழைவெங் கதிரினெழக் கண்டும் காணு

அத்துகளொண் பரமாணு அஃதெட் டாயின்
ஆமொருவா லாக்கதிர் அங்கஃதெட் டென்ன
வைத்திடுவர் இலீக்கையென அஃதெட் டாயின்
வளரூகம் எனுநாமம் மருவு மன்றே.

இ-ள்: மேற் கூறிய தத்துவங்களெல்லாம் தம்தம் அளவினைப் பொருந்துமாறு அளக்கும் தகுதியைப் பெற்றுள்ளன. அவ்வளவினைக் கூறுதற்காக யோசனை என்னும் அளவிற்குக் கருவியைக் கூறின், இல்லினுள் புழைவழியாகத் தோன்றும் கதிரில் விழிக்கு நன்கு தோற்றமுறாது இயங்கும் (அதிநுட்பமாகத் தோன்றும் நுண்ணியதுகள்) அத்துகள் பரமாணுவாம்; அஃது எட்டாயின் ஒரு வாலாக்கதிராம்; அஃது எட்டாயின் இலீக்கையாம்; அஃது எட்டாயின் ஊகம் என்னும் அளவையாம். (எ-று) 132

269. ஊகமொரு நான்கெவையாம் அஃதெட் டாயின்
ஒருமாணுங் குலம்அஃதோ ரிருபத் தேழேல்
ஆகுமொரு தனுக்கிரகம் என்னும் நாமம்
அத்தமது நான்குதனு அஃதி ரண்டேல்
ஏர்கொளொரு தண்டம்ஆ யிரத்தி ரட்டி
எனினஃதோர் குரோசமஃ திரண்டா மாயின்
ஓர்ககவி யூதியென அஃதி ரண்டேல்
யோசனையா மெனஇறைநூல் உரைக்கு மன்றே.

இ-ள்: ஊகம் நான்கு கொண்டது இயவையாம்; அஃது எட்டாயின் ஒரு மாணங்குலமாம்; அஃது ஒரு இருபத்தேழேல் அது தனுக்கிரகமாம்; அஃது அத்தம் என்னும் பெயர்பெறும்; அத்தம் நான்கு கொண்டது தனு; தனு இரண்டு கொண்டது ஒரு தண்டம்; தண்டம் ஆயிரத்திரட்டி கொண்டது ஓர் குரோசம்; குரோசம் இரண்டு கொண்டது ஓர் கவியூதி; கவியூதி இரண்டு கொண்டது யோசனையாகும் எனச் சிவாகமம் கூறும். (எ-று) 133

## குறிப்பு

அத்தம் என்னும் நீட்டலளவை எட்டுவகையாகும்; மாறுங்குலம் இருபத்து நான்கு கொண்டது ஒரு கிஷ்கு; இருபத்தைந்து கொண்டது பிரஜாபத்தியம்; இருபத்தாறு கொண்டது ஒரு தனுர் முஷ்டி; இருபத்தேழு கொண்டது ஒரு தனுக்கிரகம்; இருபத்தெட்டு கொண்டது ஒரு பிராப்பியம்; இருபத்தொன்பது கொண்டது ஒரு வைதேகம்; முப்பது கொண்டது ஒரு வைப்புல்யம்; முப்பத்தொன்று கொண்டது பிரகீர்ணம் என்பர். இப்பாட்டில் கூறிய தனுக்கிரகம் என்னும் அத்தம் இருபத்தேழு மாறுங்குலம் கொண்டதாம்.

270. சாற்றியயிவ் வோசனையால் தரணி யாதி
தத்துவங்கள் அளவுரைப்பின் நூறு கோடி
தேற்றுதரை யளவைஎவ்வா றென்னில் ஓரேழ்
தீபங்கள் இருபத்தே ழிலக்கம் தம்மேல்
ஏற்றவொரு கோடிஏழ் கடலும் அன்ன
ஏமநிலம் தசகோடி லோகா லோகம்
போற்றுபதி னுயிரயோ சனையாம் அந்தப்
பொருப்பினைச்சூழ் இருள்நிலம்மேற் புகல லுற்றும்.

இ-ள்: மேலே கூறிய யோசனையால் நில தத்துவம் முதலானவற்றின் அளவினைக் கூறின், நான்முக அண்டமாகிய நில அண்டம் நூறு கோடி யோசனை அளவாம். (சம்புத்தீவின் மேருவரை நிற்கும் நடு நில முதல் அண்ட வெளிவரை எத்திசை யினும் ஐம்பது கோடி யோசனை பரப்புடையதாகலின்) அது எவ்வாறென்னில்? நாவலந்தீவு முதலான ஏழ் தீவுகளும் ஒரு கோடியே இருபத்தேழிலக்கம் யோசனை அளவுடையதாம். அத்தீவுகளை அடுத்த உவர்க்கடல் முதலான ஏழ்கடல்களும் மேற் கூறிய ஒரு கோடியே இருபத்தேழிலக்கம் யோசனை அளவுடையதாம். அவற்றை அடுத்து பொன்னிலம் பத்துக்கோடி யோசனை அளவுடையதாம். அதையடுத்து லோகா லோகம் என்னும் சக்கர வாளமலை பதினுயிரம் யோசனை அளவுடையதாம். அம்மலையைச் சார்ந்த இருள் நிலத்தை மேற்கூறுவாம். (எ-று) 134

## குறிப்பு

சக்கரவாள மலை இப்பக்கத்தில் ஒளியும் அப்பக்கத்தில் இருளும் உடைமையால் அஃது உலோகா லோகம் எனப்பெயர் பெற்றதென்க.

271. மேற்படரும் இருணிலம்முப் பத்தைங் கோடி
மேலொருபத் தொன்பதாம் இலக்க மன்றி
நாற்பதினா யிரமுடைய தாகும் அப்பால்
நற்கருப்ப நீருததிக் கடல்க ளேழு
ஏற்புறுமவ் வளவுடைய தென்பர் அப்பால்
இசைத்தவெளி ஒருகோடி எல்லா மெண்ணின்
பாற்பகரின் ஐம்பதினா யிரமேற் கொள்ளேம்
பதுகோடி யோசனையாப் பகர்வ ரன்றே.

இ-ள்: சக்கர வாள மலையை அடுத்த இருள் நிலம் முப்பத்தைந்து கோடியே பத்தொன்பது இலக்கத்து நாற்பதினாயிரம் யோசனை அளவுடையதாயிருக்கும். அப்பால் கருப்பநீர்க்கடல் என்னும் பெரும்புறக்கடல் ஏழுகடல்களுக்கு முன் கூறிய ஒரு கோடியே இருபத்தேழ் இலக்கம் யோசனை அளவைப் பெறும். அப்பால் பிரம்மாண்டத்தின் வெளி (அண்ட கடாகம்) ஒரு கோடி யோசனை அளவாம். இவையெல்லாம் பூலோகத்தின் நடுவண் உள்ள நாவலந் தீவிலிருந்து எண்ணில் (ஒரு பாதியாதலின்) ஐம்பது கோடியே ஐம்பதினாயிரம் அளவாகக் கூறுவர். (எ-று) 135

272. நாவலொடு பெயரியதீ பத்தின் மேரு
நடுவுறலின் ஐம்பதினா யிரமும் போக்கிக்
காவலுறும் அவ்வரைநாற் றிசையும் அண்ட
கடாகமள வோரைம்பான் கோடி என்க
தாவிலதன் கீழ்மேலும் அவ்வெண் ணுமித்
தன்மையால் பிரமாண்ட கோள கந்தான்
ஒவில்சத கோடியாம் பெருங்க டாகத்
துறுபருமை அற்புதயோ சனையா மன்றே.

இ-ள்: நாவலந் தீவில் மேருமலையானது நடுவிலே இருத்தலால் நாவலந் தீவின் அளவு நூறாயிரம் யோசனையுள்

ஐம்பதினுயிரமும் போக்கி அம்மலையின் நாற்றிசையும் அண்ட கடாகம்வரை ஐம்பது கோடி என்க; அதன் கீழ் மேலும் அவ்வெண்ணளவாம்; இவ்வளவுத் தன்மையால் பிரம்மாண்ட கோளகையானது நூறு கோடி யோசனை அளவுள்ளதாம். பெரிய கடாகத்தின் பெருமை பத்துக் கோடியாகும். (எ-று) 136

குறிப்பு

"கோடி பத்தே அற்புதமாகும்" என்பது பிங்கல நிகண்டு. (அற்புதம் — பத்துக் கோடி)

273. இத்தரைசூழ் புவனம்முதல் அவ்வியத்தங் காறும்
இசைந்தவைபப் பத்துமடங் கொன்றின் ஒன்றும்
தத்துவமாம் அவ்வியத்தம் சூழி ராகம்
தான்நூறு மடங்கதுசூழ் தந்து நிற்கும்
வித்தியா தத்துவமா யிரம டங்கவ்
வித்தைசூழ் காலநிய திகளி ரண்டில்
பத்துறுமா யிரமடங்கு நியதி காலம்
பகரிலக்க மடங்கெனநூல் பகரு மன்றே.

இ-ள்: நிலதத்துவத்திலுள்ள புவனங்களிலிருந்து மூலப் பிரகிருதி வரை உள்ளவை ஒன்றின் ஒன்று பத்து பத்து மடங்கு உயர்ந்த அளவுள்ளனவாகும்; மூலப் பிரகிருதியிலிருந்து இராக தத்துவம் வரை நூறு மடங்கு உயர்ந்தது; இராக தத்துவத்தைவிட வித்தியா தத்துவம் ஆயிரம் மடங்கு உயர்ந்தது; வித்தையைவிடக், கால தத்துவமும் நியதி தத்துவமும் பத்தாயிரம் மடங்கு உயர்ந்தவையாகும்; நியதியைவிடக் கால தத்துவம் இலக்கம் மடங்கு உயர்ந்ததாம் எனச் சிவாகமம் கூறும். (எ-று) 137

274. இந்நியதி காலம்சூழ் கலைய தோர்பத்
திலக்கமடங் குளததுசூழ் மாயை நாமம்
பன்னியது கோடிமடங் கதுசூழ் வித்தை
பதின்கோடி அதனைச்சூழ்ந் தீச மென்ன

மன்னியது சதகோடி மடங்கா மென்பர்
மற்றதுசூழ் சதாசிவம்அற் புதம டங்காம்
உன்னியதன் மிசையாக உணர்சி வந்தான்
உரைப்பினளவிறந்ததென உரைக்கும் நூலே.

இ-ள்: மேற் கூறிய நியதி தத்துவம் கால தத்துவங்களைச் சூழ்ந்த கலை என்னும் தத்துவம் பத்திலக்க மடங்கு உயர்ந்ததாம்; அதனைச் சூழ்ந்துள்ள அசுத்தமாயா தத்துவம் கோடி மடங்கு உயர்ந்ததாம்; அதைச் சூழ்ந்துள்ள சுத்தவித்தை என்பது பத்துக் கோடி உயர்ந்ததாம்; அதனைச் சூழ்ந்துள்ள ஈச்சுர தத்துவம் நூறு கோடி மடங்கு உயர்ந்ததாம்; அதனைச் சூழ்ந்துள்ள சதாசிவ தத்துவம் அற்புத (பத்துக் கோடி) மடங்கு உயர்ந்ததாம். அதன் மேலாகக் கருதப்படும் சிவ தத்துவம் அளவிறந்ததாய் வியாபித்திருக்கும். (எ-று) 138

## திரோதாயி இலக்கணம்

275. மூலமலம் எனுநாமம் மொழியப் பட்ட
முடிவிலா ஆணவமும் முறையின் ஊட்டு
சீலமலி தருகரும மலமும் துய்ய
சிவாதிதரு உபாதான விந்து வும்பின்
காலமுத லனவீனும் மாயை தானும்
கட்டுரைக்கப் பட்டனவைந் தாவ தென்ன
ஏலமுனம் உரைசெய்த திரோத சத்தி
இலக்கணம்ஆ கமம்உரைத்தாங் கினியு ரைப்பாம்.

இ-ள்; மூலமலம் என்னும் பெயரால் கூறப்பட்ட அழிவற்ற ஆணவ மலமும், முறைப்படி போகங்களை உண்பிக்கும் ஒழுகலாற்றினையுடைய கன்மமலமும், தூய சிவம் முதலான தத்துவங்களைத் தரும் சுத்தமாயையும், பின்னர் காலம் முதலியனவற்றைத் தரும் அசுத்தமாயையும் ஆகிய இவைகள் நான்கும் கட்டுரைக்கப்பட்டன; ஐந்தாவது என்று முன் கூறப்பட்ட திரோதசத்தியின் இலக்கணத்தைச் சிவாகமம் கூறியவாறு இனிக் கூறுவாம். (எ-று) 139

276. ஓங்குசிவ சத்திக்குப் பாசத் தன்மை
உண்மையெனுர் அனைத்துமளிக் குறுமச் சத்தி
நீங்கலரும் உயிர்ப்பாச தருமம் பற்றி
நின்றுவழங் குறுதலினுல் திரோதம் என்பேர்
தாங்கலுறும் பாசமென உபசா ரத்தால்
சாற்றுவதாய் மூலமல சத்தி நீக்கித்
தேங்கொளிய பராபரமுத் திகள்நல் குற்ற
செயலின்அருட் சத்தியெனத் திகழு மன்றே.

*இ-ள்: உயர்ந்த சிவசத்திக்கு உயிர்களைக் கட்டும் பாசத் தன்மை உண்டு என்று அறிஞர் கூறுர்; அச் சத்தி அனைத்தையும் அளிப்பதாகும்; உயிரினின்றும் நீங்காத ஆணவமல தருமத்தைப் பற்றிநின்று நடைபெறுவதால் திரோதம் என்கின்ற பெயரைத் (திரோதம் – மறைப்பு) தாங்கும். இச்சத்தியையும் பாசம் என்பது உபசார வழக்காம். சிவசத்தியாகிய திரோதசத்தியே, உயிரைத் தளைத்துள்ள ஆணவமல சத்தியை நீக்கி, ஒளிமயமான பராபர முத்தியைத் தரும் செயலினை மேற்கொண்டபொழுது அருட்சத்தி என விளங்கும். (எ–று)* 140

277. பாசமுறை ஐவகையும் பகுத்து ரைக்கப்
பட்டனவால் சிவமுதலொண் படியீ ருகப்
பேசுமவை வருமுறையே சிருட்டி என்பர்
பிரதிலோ மத்தினுன் ஞால மாதி
மாசில்சிவம் ஈருய தத்து வங்கள்
மாயைமா மாயைகளின் உறவொ டுக்கல்
ஈசன்மிகு பிரளயமப் பிரள யத்தை
இறையியற்றும் காரணம்மேல் இயம்ப லுற்ரும்.

*இ-ள்: இப் பாசமரபில் ஐவகைப் பாச இலக்கணங்கள் தனித்தனியாகக் கூறப்பட்டன. சிவதத்துவம் முதலாக நில தத்துவம் இறுதியாகச் சொல்லியவை வருமுறையே வருதல் சிருட்டி என்பர்; பிரதிலோம முறையால் (கீழிருந்து செல்முறை) நிலதத்துவம் முதல் சிவம் ஈருய தத்துவங்கள் அசுத்தமாயையிலும்*

சுத்தமாயையிலும் பொருந்துமாறு ஒடுக்குதல் ஈசத்துவம் மிகுந்த பிரளய காலமாகும். அப்பிரளயத்தை இறைவன் இயற்றுதற்குரிய காரணத்தை இனிக் கூறலுற்ரும். (எ-று) 141

பாசமரபு முற்றும்.

ஆகத் திருவிருத்தம் 277.

## ஐந்தாவது பிரளயவியல்

### பிரளயம் இன்னதற்காக என்பது

278. கடக்கரிய பிரவாகா நாதி யாய
கருமமுர ணெடுபலவாம் கார ணத்தால்
தொடக்குறுமவ் வினைநுகரப் பலபி றப்பில்
தோன்றுபுரி யட்டகத்தால் சுழல்க றங்கொத்(து)
இடர்க்கணுறும் உயிர்களயா வுயிர்ப்பப், பாகம்
இருவினைக ளுற,வுபா தானங் கட்குப்
படைப்புமிகு சத்திதர, பரனல் செய்யப்
படுமென்பர் பிரளயநூல் பலகற் ரேரே.

இ-ள்: பிரளய நூல் பல கற்ரோர் உயிர்கள் இளைப்பாறவும் இருவினைகள் பக்குவம் அடையவும் உபாதான காரணமாய மாயைகளுக்குப் படைக்கும் சத்தி உண்டாகவும் பிரளயம் பரனல் செய்யப்படும் என்பர். எத்தகைய உயிர்களெனின்? பிரவாக அநாதியாய வினை மாறுபாட்டோடு பலவாய் வரும் காரணத்தால் பந்திக்கும் அவ்வினையை நுகர்வதற்குப் பல பிறவியிலே தோன்றும் புரியட்டக உடம்பால் சுழலும் கறங்கினை ஒத்துத் துன்பத்தின்கண் நிற்கும் உயிர்கள். (எ-று) 1

### குறிப்பு

பிரவாகாநாதியாவது இடையரு தொழுகும் நீரோட்டத்தில் முன்வந்த நீரிது பின்வந்த நீரிதுவெனப் பிரித்தறியப்படாதவாறு போல முன்செய்த கன்மமிது பின்செய்த கன்மமிதுவெனப் பிரித்தறிய வாராது பண்டைக் காலந்தொட்டு அவ்வாறு வருவது. பிர + லயம் என்பது பிரளயம் என்ருயிற்று.

## பிரளயத்தின் வகை

279. பிரளயமூன் றதப்பிரள யம்பின் நாப்பண்
பிரளயம்மாப் பிரளயமென் றவற்றுள் நல்லோர்
உரைசெய்பிர மாண்டத் துலக மூன்றும்
ஒடுங்கலதப் பிரளயமாம் குணத்தின் காறும்
ஒருவுறுதல் மத்தியமென் றுணர்க வெல்லாம்
உபசங்கா ரப்படல்மாப் பிரள யங்காண்
தெரிதலுறு சிருட்டிமுனம் தெரிந்தாங் கோர்க
திதியையினி விதியமையச் செப்ப லுற்றும்.

இ-ள்: அதப் பிரளயம் நடுப் பிரளயம் மகாப் பிரளயம் எனப் பிரளயம் மூன்றும். அவற்றுள் பிரம்மாண்டத்திலுள்ள பூவுலகம் கீழுலகம் மேலுலகம் என்பன மட்டும் ஒடுங்குதல் அதப் பிரளயமாம். நிலதத்துவத்திலுள்ள பிரம்மாண்டத்திலிருந்து குணதத்துவம் வரை ஒடுங்குதல் நடுப் (அவாந்தரப்) பிரளயமாம்; எல்லாம் சங்கரிக்கப்படுதல் மகாப் பிரளயமாம். சிருட்டியும் சங்காரம்போல மூன்று வகையாம் என்று தெரிக. இனித் திதியை (காத்தலை) விதியமையச் செப்பலுற்றும். (எ-று) 2

280. வழங்குமுகம் நான்குமிரண் டாயி ரங்கால்
மடங்கிலயற் கொருநாளிவ் வளவு கொண்டு
மொழிந்தவரு டங்களுறு பரார்த்த எண்ணின்
முறையின்மிகு பகுதிமுத லாம வற்றின்
ஒழுங்குபுவ னங்கள்அழி வுறும்முன் நூல்கள்
உரைசெய்த தேயத்தை ஆகு பேரால்
அழிந்திடும்என் கையில்தனுவா திகளே மாயும்
அல்லவற்றிற் கழிவிலையென் றறிந்தா மன்றே.

இ-ள்: வழங்கப்படுகின்ற கிரேதாயுகம் முதலான நான்கு யுகங்களும் இரண்டாயிரம் முறை திரும்பி நடந்தால் (இரண்டாயிரம் சதுர்யுகம் நடந்தால்), அது பிரமதேவனுக்கு ஒரு நாளாகும். இவ்வளவை கொண்ட பிரமன் நாள் முந்நூற்றறுபது கொண்டது பிரமன் யாண்டு. இவ்வாண்டு ஐம்பது

நிகழின் ஒரு பரார்த்தமாகும். அப் பரார்த்த முடிவில் பிரகிருதி தத்துவ புவனம் வரை அழிவுறும். முன் கூறிய இடங்களை ஆகு பெயரால் அழிந்திடும் என்று கூறலின் அப்புவனங்களுக்கு அழிவு நிகழாமல் ஆண்டுள்ள தனுகரணங்களே அழியும் என்க. (எ-று) 3

## கால அளவை

281. சொல்லரிய காலமிரு வகையாம் தூல
 சூக்கமென அவற்றுள்வரு தூல காலம்
மெல்லிமையின் நான்கிலொரு கூறு கூறின்
 விலங்குதுடி துடியிரண்டேல் இலவம் என்பர்
வல்லியஃ திரண்டாயின் நிமிட மாகும்
 மற்றதுமூ வைந்தாயிற் காட்டை காட்டை
புல்லினொரு முப்பான்ஒண் கலையென் றோர்க
 பொருந்துமது பதினைந்தேல் கணமா மன்றே.

இ-ள்: சொல்லுதற் கரிய காலம் தூலம் என்றும் சூக்குமம் என்றும் இருவகையாகும்; அவற்றுள் தூல காலத்தைக் கூறின், இமைக்கும் காலத்தில் நான்கில் ஒருகூறு ஒருதுடியாகும்; துடி இரண்டு கொண்டது இலவம்; இலவம் இரண்டு கொண்டது நிமிடம்; நிமிடம் பதினைந்தாயின் காட்டை; காட்டை முப்பது கொண்டது கலை; கலை பதினைந்து கொண்டது கணமாகும் (எ-று) 4

282. அக்கணமோ ரிரண்டாயின் மூர்த்தம் மூர்த்த
 மதுநான்கு கடிகையஃ திருநான் காகி
ஒக்கிலொரு சாமமஃ தெட்டா மாயின்
 ஒருநாளஙு நாள்பதினைந் தாகு மேலோர்
பக்கமஃ திரண்டாயின் மாதம் மாதம்
 பகரிலிரண் டிருதுவது மூன்று கூடின்
மிக்கயனம் ஆகுமஃ திரண்டா மாயின்
 விலங்குமொரு வருடமென விளம்பும் நூலே.

இ-ள்: மேற்கூறிய கணம் இரண்டாயின் ஒரு மூர்த்தமாகும்; மூர்த்தம் நான்கு கொண்டது கடிகையாகும்; அஃது எட்டாகில் ஒரு சாமம் ஆகும்; சாமம் எட்டாயின் ஒரு நாளாகும்; அந்நாள் பதினைந்தாகுமேல் ஓர் பட்சம் ஆகும்; பட்சமிரண்டாயின் ஒரு மாதமாகும்; மாதம் இரண்டாயின் ஓர் இருதுவாம்; இருது மூன்று கூடின் அயனமாகும்; அயனம் இரண்டாயின் ஒரு வருடமாகும் எனச் சிவாகமம் கூறும். (எ-று) 5

283. இவ்வருட மதில்தெக்க ணுய னந்தான்
இமையவர்கட் கிரவுவடக் கயனம் எல்லாம்
செவ்வியவிவ் விரவுபகல் அளவா லாகும்
தெய்வவரு டங்களால் உகங்கள் செல்லும்
எவ்வமறு கிரேதம்நா லாயி ரத்தின்
எண்ணூறு தெய்வவரு டங்கள் என்பர்
அவ்வருடம் திரேதயுகந் தனக்கிங் கோர்மூ
வாயிரத்து மூவிருநூ ருகு மன்றே.

இ-ள்: இந்த மானிட வருடத்தில் தெக்கணுயனம் தேவர்கட்கு இரவாகும்; உத்தராயனம் பகலாகும்; தேவர்களுக்குரிய இரவுபகல் அளவினுல் தெய்வ வருடங்கள் நிகழும்; தெய்வ வருடத்தால் நான்கு யுகமும் நடக்கும். கிரேதாயுகத்தின் தெய்வ வருடம் நான்காயிரத்து எண்ணூறு ஆகும்; திரேதாயுகத்தின் தெய்வ வருடம் மூவாயிரத்து அறுநூறாகும். (எ-று) 6

## குறிப்பு

மானிட வருடம் 360 கொண்டது தேவவருடம் ஒன்று.

284. அடுத்ததுவா பரமிரா யிரத்து நானூ(று)
அருங்கலியா யிரத்திருநூ ருகு மென்பர்
எடுத்தயுக மொருநான்கும் தொடர்வுற் றீறும்
எழுவாயும் இயைந்துதமுள் இருநா னூறு,

நொடித்தவறு நூறொடு, நானூ, றிரண்டு
நூறுவரு டங்கண்முறை யடுத்து நின்று
தொடுத்தயுக சந்திகளும் யுகங்கள் நான்கும்
தொகின்ஒருநற் றெய்வயுக மாகு மன்றே.

இ-ள்: அடுத்ததாகிய துவாபர யுகம் இரண்டாயிரத்து நானூறு தெய்வ வருடங்கள் ஆகும். கலியுகம் ஆயிரத்து இருநூறுகும் என்பர். யுகம் நான்கும் தொடர்வுற்று முதல் யுகத்தின் அந்தமும், அடுத்த யுகத்தின் ஆதியும் இயைந்து, தம்முள், கிரேதாயுகத்திற்கு எண்ணூறு தெய்வ வருடங்களும், திரேதாயுகத்திற்கு அறுநூறு தெய்வ வருடங்களும், துவாபர யுகத்திற்கு நானூறு தெய்வ வருடங்களும் கலியுகத்திற்கு இருநூறு தெய்வ வருடங்களும் அடுத்து நின்று, யுகசந்திகளும் யுகங்கள் நான்கும் சேரின் அது தெய்வ யுகம் ஆகும். (எ-று) 7

285. இத்தகைய தெய்வயுகம் எழுபத் தொன்றில்
எய்துறும்மன் வந்த மீரேழ்; மன்வந்தம்
பத்துமுறை நூறவைபோம் சிருட்டி கற்பம்
பங்கயனுக் கதுபகலப் பகலின் கண்ணே
செத்துமக பதிகள்பலர் வருவார் பின்னர்ச்
செல்லுமொரா யிரமவர்க்குச் செறியுங் காலம்
வைத்தவது சங்கார கற்பம் ஆகும்
மற்றினைய கற்பமாண் டொருநா ளன்றே.

மேற்கூறிய அளவினையுடைய தெய்வயுகம் எழுபத்தொன்று நிகழ்ந்தால் ஒரு மனுவந்திரம் ஆகும்.

இ-ள்: இத்தகைய தெய்வயுகம் எழுபத்தொன்று நிகழில் ஒரு மனுவின் காலம் முடியும். அம் மனுக்கள் பதினல்வர் முடிவெய்தின் ஆயிரம் சதுர்யுகம் முடியும். அந்த ஆயிரம் சதுர்யுகமும் சிருட்டி கற்பம் எனப்படும். அது பிரமதேவனுக்குப் பகற்காலமாகும். அப் பகற்காலத்திலே இந்திரர் பலர் இறந்து வருவார்கள். பின்னர் ஆயிரம் சதுர்யுகம் நிகழின் அது பிரமதேவனுக்குச் சங்காரகற்பம் ஆகும். சிருட்டிகற்பம் ஆயிரம்

சதுர்யுகமும் சங்காரகற்பம் ஆயிரம் சதுர்யுகமும் சேர்ந்து பிரமதேவனுக்கு ஒரு நாளாம். (எ-று) 8

286. அறைந்திடுநாள் ஒருமுந்நூற் றறுப தாயின்
ஆண்டதுநூ றயன்திதி; அவ்வயன்றன் ஆயுள்
சிறந்தநெடி யவன்றனக்குத் திங்கள்; அன்னான்
திதிவருடம் நூறுமரன் திங்கள்; நல்லோர்
இறைஞ்சுமரன் வருடங்கள் ஈசற் கோர்நாள்;
ஈசன்நிலை சதாசிவற்கு நிமிடம்; அன்னான்
உறைந்ததிதி பரசிவற்குத் துடிய வாகி
ஒடுங்குதல்தோன் றுதலவையென் றுணர்ந்து
கொள்ளே.

இ-ள்: சங்கார கற்பமாகிய ஒருநாள் முந்நூற்றறுபதாயின் அது நான்முகனுக்கு ஒரு யாண்டாகும். அந்த யாண்டு ஒரு நூறு நிகழின் அது நான்முகனுக்குத் திதிக்காலம் ஆகும்; அந்த நான்முகனுக்குரிய ஆயுட் காலமானது திருமாலுக்கு ஓர் திங்களாகும்; அத்திங்கள் பன்னிரண்டு நிகழ்ந்து ஒரு வருடமாய், அவ்வருடம் நூறு நிகழின், அது அரனுக்கு ஒரு திங்களாகும்; அத்தகைய திங்கள் பன்னிரண்டு நிகழ்ந்து ஓர் வருடமாய் அவ்வருடம் நூறு நிகழின் அது மகேசனுக்கு ஓர் நாளாகும்; மகேசனின் திதிக்காலம் சதாசிவனுக்கு நிமிடம் ஆகும்; அச் சதாசிவனின் திதிக்காலம் பரமசிவனுக்குத் துடி என்னும் கால அளவையாய் ஒடுங்குதல் தோன்றுதல் என்பன அக்காலத்தில் நிகழும். (எ-று) 9

## தத்துவ ஒடுக்கம்

287. இப்பரிசு பிரளயகா லம்பு கன்றும்
இசைந்தபெரும் பிரளயத்தில் ஒன்றிலொன்று
செப்புறிலொண் புவிமுதலேம் பூதந் தன்மாத் [யொடுங்கல்
திரையினவை பூதாதி யாங்கா ரத்தில்

பொய்ப்பில்கரு மேந்தியம்வை காரி கத்தில்
புத்தியிந் திரியம்மனம் தைச தத்தில்
அப்பெரிய ஆங்காரம் புத்தி யின்கண்
அதுகுணத்தில் குணம்பகுதி யதில டங்கும்

*இ-ள் : இந்த முறையில் பிரளயம் நிகழும் காலத்தைக் கூறினும். வந்த பிரளய காலத்திலே ஒன்றில் ஒன்ருய் ஒடுங்கும் முறையைக் கூறின், நிலம் முதல் ஐந்து பூதமும் தன்மாத்திரை ஐந்திலும், தன்மாத்திரைகள் பூதாதி ஆங்காரத்திலும், கன்மேந்திரியங்கள் வைகாரிக ஆங்காரத்திலும், ஞானேந்திரியமும் மனமும் தைசத ஆங்காரத்திலும், அப்பெரிய ஆங்காரம் புத்தியிலும், புத்தி குணத்திலும், குணம் பிரகிருதியிலும் அடங்கும். (எ-று)* *10*

288. பகுதியுடன் ராகாதி மாயை யின்பால்
படுமாயை நித்தியமாம் மாயை மீதில்
தகுதிபெறு சுத்தத்த் துவங்கள் விந்துத்
தனினடங்கும் சிவனினதிட் டிக்கப் பட்டு
மிகுதிபெறு மாமாயை பரசி வற்கு
விடயமாந் தன்மையினுல் நித்த மாகும்
தொகுதிபெறு படைப்பினிடை மீண்டும் விந்துத்
தொடங்கியுல கனைத்துமுறை தோன்று மன்றே.

*இ-ள் : மூலப் பிரகிருதியுடன் இராகம் முதலியனவெல்லாம் அசுத்த மாயையின்பால் அடங்கும். இவற்றை அகப்படுத்திய மாயை அழிவற்றதாகும். அசுத்த மாயைக்குமேல் சுத்த தத்துவங்களெல்லாம் சுத்தமாயையில் ஒடுங்கும். பரசிவனுல் அதிட்டிக்கப் பட்டு உயர்வு பெற்றுள்ள மகாமாயையானது அப் பரமசிவனுக்கு விடயமாகும் தன்மையால் அதுவும் அழிவற்றதாகும். சேர்ந்த படைப்புக் காலத்திலே சுத்தமாயையிலிருந்து தொடங்கி ஒடுங்கின முறையே தோன்றும். (எ-று)* *11*

## பிரளயத்தில் முப்பொருள்

289 மாயைபுரு டன்சிவனென் றெருமூ வத்து
மன்னியுறும் பிரளயத்தில் என்னும் முன்னூல்
மாயையெனும் மொழியினுல் மாயை சுத்த
மாயையுமோர் புருடனெனும் மாற்றந் தன்னுல்
மூயமல முடையவுயிர் அனைத்தும் பின்னர்
மொழிந்தசிவ னெனுமொழியால் சிவனும் முத்த
ராயவரும் அறையப்பட் டனரென் றீசன்
ஆகமநூல் பலகண்டோர் அறைவா ரன்றே

*இ-ள்: பிரளய காலத்திலே (ஒடுக்க காலத்திலே) மாயையும், புருடனும், சிவனும் என்னும் மூன்று பொருள் நிலையாயிருக்கும் என்று முதனூல் கூறும். மாயையெனும் மொழியால் சுத்த மாயையும் அசுத்த மாயையும், புருடன் என்னும் சொல்லால் மலமுள்ள உயிர்களனைத்தும், சிவனென்னும் மொழியால் அநாதி முத்தனுகிய சிவனும், ஆதிமுத்தராகிய மலசத்தி நீங்கிச் சிவானுபவமுடைய உயிர்களும் சொல்லப்பட்டன வென்று சிவாகமம் கூறும். (எ-று)* *12*

## பிரளயத்தும் ஐந்தொழில்

290. ஐந்தொழில்கள் பிரளயத்தும் அரனி யற்றும்
அதுபுகலில் போதிக்கப் படுவார் தம்மை
வந்தஅரு ளொடுபோதித் திடுவன் ஆங்கு
மறைப்பவரை மறைப்பன்கன் மிகள்தங் கன்மம்
சந்தமுற பசனஞ்செய் திடுவன் மாயா
சத்திகளை வியத்தியாந் தனுசெய் வன்
முந்துபெறு படைப்பி ........... புபவாய்
முழுதினையும் உள்ளபடி பார்த்தி ருப்பன்

*இ-ள்: அரன் பிரளய காலத்திலும் ஐந்து தொழில்களைச் செய்யும். அதனை எவ்வாறு செய்வனெனக் கூறின், அப்பொழுதும் உணர்த்தத் தக்கவருக்கு உணர்த்துவன் (அருள்); மறைப்பவரை*

மறைப்பன் (திரோபவம்); கன்மமுடையவரின் கன்மத்தைப் பாகம் செய்தும் (அழித்தல்); மாயையின் சத்தியைத் தோன்றுதற்கு அமைத்தும் (படைத்தல்); எல்லாவற்றையும் அந்தந்த நிலையில் நிற்குமாறு நிறுத்தியும் (திதி) இவ்வாறு செய்வன். (எ-று) இப்பாட்டின் வடிவம் திருத்தமாகக் கிடைக்கவில்லை. 13

## குறிப்பு

இப்பாட்டின் கருத்தினை,

"ஒடுங்கிய பொழுதும் பாச மொழிப்பவர்க் கொழித்திட் டன்றி
விடுந்தகை யினரை விட்டு வினையினர் வினைப்பா கஞ்செய்
தடங்கிய மாயா சத்தி தோன்றுதற் கமைத்தி யாவும்
படும்படும் முறையி ருப்பப் பார்த்துளன் பரம னன்றே."

என்னும் சதமணிமாலைப் பாடலால் உணர்க.

**சதரத்னசங்கிரகம் (18)** இந்த ஐந்தினைப் போதயந், ருத்தந், பாசயந், ப்ரகுர்வந், பச்யந் (போதித்துக் கொண்டு, தடுத்துக்கொண்டு, பாகம் செய்துக்கொண்டு, பயன் தருமாறு செய்துக்கொண்டு, பார்த்துக் கொண்டு) இருப்பன் என்று கூறும்.

291. கேவலனெண் சகலனே டமல னென்னக்
கிடந்தமூ வவத்தையுளன் கிளந்த ஆன்மா
மூவகையுள் விகலன்கே வலனும்; பெத்தன்
மொழிசகலன் : அமலனுயர் முத்த னென்பர்
மேவலுறு கேவலனு ணவம றைப்பான்
மிக்கசடன் வியாபகன்நித் தியன சத்தன்
சோர்வில்குணம் கிரியையிலன் கலாதி யில்லன்
சோத்தியன்போத் தியனெனுமிப் பசுவென் றோர்வாய்.

இ-ள்: மேற் கூறிய ஆன்மா, கேவலன் சகலன் அமலன் என்னக் கிடந்த மூன்று அவத்தையுள்ளவன். மூன்று வகை அவத்தையுள் கேவலனாகிய ஆன்மா கலை என்னும் தத்துவம் இல்லாதவன்; சகலனாகிய ஆன்மா பந்தமுடையவனும்; அமலாவத்தையுடைய ஆன்மாவை முத்தன் என்பர், கேவலா

வத்தையில் உள்ள ஆன்மாவிற்குக் கேவலன், ஆணவ மறைப்பன், சடன், வியாபகன், நித்தியன், அசத்தன், குணமும் கிரியையும் இல்லாதவன், கலை முதலிய தத்துவங்களைப் பெருதவன், சோத்தியன், போத்தியன், பசு என்னும் பெயர்கள் உள்ளன. (எ-று) 14

## குறிப்பு

இப்பாட்டின் கருத்தினை,

"நிலைத்த அன்னவன் அவத்தைமூன் றுளனென நிற்கும்
தொலைத்த கேவலன் சகலன்நற் சுத்தனென் றன்றே"

என்றும்,

"நித்தன் இல்லவாம் குணங்தொழி லுடையவன் விகலன்
கத்த னன்மையான் வியாபகன் சேதனன் கருதில்
சுத்தி செய்திடப் படுபவன் உணர்த்துறச் சுடர்வான்
சத்த னென்கிலன் பசுவென விளம்புவர் தக்கார்"

என்றும் வரும் (34, 35) சதமணிமாலைப் பாடலால் அறிக.

292. அறைந்தமிகு மலினனுய் விகாரம் இல்லான்
ஆகியஆன் மாவிற்கு வினைக்க டுப்ப
நிறைந்தசிவன் இச்சையினும் கலைவந் தெய்தும்
நிகழ்த்திடுமத் தனைசிவனுல் முத்திக் காக
உறும்பசுவி னங்குடல மிலையாயின் போகம்
உண்பதா காததனுல் உயர்ந்த வீடு
பெறும்பரிசு மிலையெனும்நூல் மலமு ளர்க்குப்
பின்னுமொரு மலமருவும் பெற்றி சொல்வாம்.

இ-ள்: ஆணவமல அழுக்கோடு கூடியவனுய் விகாரம் இல்லாதவனுகிய உயிர்க்கு அந்த உயிரின் வினைக்குப் பொருந்த பரமேசுரனுடைய இச்சையினுலே ஆகும் கலாதத்துவம் வந்து கூடும். உயிர் பசுத்துவமுடையதாதலின் உயிர்க்குக் கலை முதலான தத்துவங்களாற் சமைந்த உடம்பு இல்லையாயின் போகம் உண்டலும் நிகழாதாம்; போகம் உண்ணுதாயின் உயர்ந்த

*வீட்டின்பத்தைப் பெறும் தன்மையும் இல்லையாம்; மலம் உள்ள உயிர்க்குப் பின்னும் ஒரு மலம் மருவும் பெற்றியைக் கூறுவாம். (எ—று)* 15

293. மாசுமலி உடைதூய்மை மருவு மாறோர்
மாசுறுதல் போல்மலத்தால் மலினன் ஆனோன்
ஆசுமலி மாயையிடை அரனால் சேர்வன்
ஆதலினு ணிலமாகும் மாயை யாதி
காசினியீ ருமவற்றிற் கலந்து நின்று
கண்டுகொள்ளும் போகமே கருதி நிற்பன்
ஏசலுறு போகமிவண் சுகதுக் காதி
இலக்கணத்த தாகுமறி வென்ப ரன்றே.

*இ—ள்: மாசு மிகுந்த உடை தூய்மை பொருந்துமாறு மற்றோர் மாசு (சாணம் உவர்மண்) சேர்த்தல்போல, ஆணவ மலத்தால் அழுக்கினைப் பெற்றவன் அசுத்த மாயையின்கண் முதல்வனால் சேர்க்கப்படுவன்; ஆதலின் உண் நிலமாகும் மாயை முதலாக நிலதத்துவம் ஈறாகிய அவற்றில் கலந்து நின்று அறிந்து கொள்ளும் போகத்தையே கருதி நிற்பன். போகம் என்பது இந்த உலகத்திலே துய்க்கப்பெறும் சுகம் துக்கம் முதலான இலக்கணத்ததாகும் அறி என்பர். (எ—று)* 16

294. செப்பியவிப் போகதனாய் வினைக்கி சைந்து
சிவவுணர்வில் செயப்படுதன் உணர்வு ளானாய்
அப்புருடன் அடைகுவனால் போக சித்திக்
கரியவினைக் கேற்பவே ஆன்மா வானோன்
இப்பெரிய தத்துவமும், அடைவன் கன்மம்
இலாத முத்தா திகளுக்கெய் தாவிவ்வாறு
ஒப்பருமா யையினுணவு விழைந்து தள்ளுற்
றொருமலத்தான் மாயைமய மாகி நிற்பன்.

*இ—ள்: சொல்லப்பட்ட போக நுகர்ச்சிக் குரியவனாய்ச் செயல் செய்வதற்கு ஒருப்பட்டு சிவனுடைய ஞானசத்தியால்*

செயப்படுகின்ற தன் உணர்வு உள்ளவனுய் அப்புருடன் வினையையும் அறிவையும் பெறுவன். ஆன்மாவானேன் போக சித்தியின் பொருட்டுத் தன் அரியவினைக்கேற்ப இந்த மாயையிற் றேன்றிய பெரிய தத்துவத்தைப் பெறுவன். கன்மம் இலாத முத்தர்களுக்கு இவ்வாறு எய்தா. ஆணவமாகிய ஒரு மலத்தான் மாயா போகங்களை நுகரவேண்டி மாயைமயம் ஆகி நிற்பன். (எ–று) 17

295. உண்ணலுறு தன்னையும்நின் றூட்டு கின்ற
ஒருவனையும் போகசா தனமா மென்பர்
நண்ணலுறு விடையமே நச்சி நிற்பன்
நவின்றிடுமிச் சகலனிவன் நாமங் கூறின்
தண்ணியபுன் சஞ்சாரி விடையி போத்தா
சரீரியொடு கேத்திரிகேத் திரியின் பெத்தன்.

இ–ள் : நுகர்கின்ற தன்னையும் நுகர்விக்கின்ற முதல்வனுகிய ஒருவனையும் அறிஞர் போக சாதனமாகக் கூறுவர். கலை முதலான தத்துவங்களுடன் கூடியுள்ளதால் சகலன் என்று பெயர் படைத்த இவனுக்குள்ள ஏனைய பெயர்களையெல்லாம் கூறின் புன்சஞ்சாரி, விடையி, போத்தா. சரீரி, கேத்திரி, கேத்திரியிற் பெத்தன் என்பனவாம். (எ–று) 18

## குறிப்பு

சுவடியில் இப்பாட்டின் வடிவம் மூன்றடியுள்ளதாகவே காணப் படுகின்றது. சகலனின் பெயரை,

"போத்துரு விடயிமைப் புணர்கு டும்பிதான்
கேத்திரி சரீரியென் கின்ற பேரொடு
வாய்த்துள சகலனென் றிசைப்பர் மாயையின்
ஆர்த்துள அணுவினை அறிஞர் தாமரோ" (57)

என்று சதமணிமாலை கூறுகின்றது.

## சகலாவத்தையின் வகை

296. அச்சகலப் பெயரவத்தை முப்பாற் றூகும்
அறைதரின்மேல் நடுக்கீழால்; மேல வத்தை

இச்சகலப் படும்போதில் இந்த ஆன்மா
இருந்துரியா தீதமே துரியம் பின்னர்
மெய்ச்சுழுத்தி சொற்பனஞ்சாக் கிரமென் றைந்து
விதமாகும் அவத்தைகளே மேவி நிற்பன்
வைச்சுநிரைத் துரைசெய்முறை அவற்றின் தன்மை
மதித்துரைப்பன் ஆகமங்கள் வகுத்த வாறே.

இ-ள்: அச் சகலப் பெயரவத்தை மேலாலவத்தை நடு அவத்தை கீழாலவத்தை என மூன்று பகுப்பாயிருக்கும். அவற்றுள் மேலாலவத்தையாவது, இந்த ஆன்மா சகல நிலையிலிருக்கும் பொழுது துரியாதீதம், துரியம், சுழுத்தி, சொற்பனம், சாக்கிரம் என்று ஐந்துவிதமாகும் அவத்தைகளை மேவி நிற்பன்; ஆகமம் கூறிய முறையில் அவற்றின் தன்மையை வரிசையாகக் கருதி உரைப்பேன். (எ-று) 19

சகலாவத்தையில் துரியாதீதமும் துரியமும்

297. ஆயவுயிர் மிகுசனனோன் முகமாம் போதில்
அனந்தேசர் அருளினால் கலக்கம் செய்ய
மாயைதரு பஞ்சகஞ் சுகங்கள் பற்றி
வரில்துரியா தீதனெனப் படுவன் அன்னான்;
மேயவொரு பௌதிகங்கள் உணவி ழைந்து
மிக்ககலை தருபகுதி மேவி நிற்பில்
தீயவுயிர் துரியனெனச் செப்பும் நூல்கள்
தெரிந்துணரத் தகுசுழுத்தித் திறமு ரைப்பாம்.

இ-ள்: உயிரானது பிறவியை நோக்கி வரும்பொழுதில், அனந்ததேவர் தம் திருவருளால் செயற்படுத்த, அசுத்தமாயை தரும் காலம், நியதி, கலை, வித்தை, இராகம் என்னும் ஐந்து கஞ்சுகங்களைப் பற்றி வந்தால் அவ்வுயிர் துரியாதீதன் என்று கூறப்படுவன். உயிர் பௌதிகப் பொருள்களை நுகரவிரும்பிக் கலாதத்துவம் தந்த மூலப் பிரகிருதியை மேவி நிற்பின் அவ்வுயிர் துரியனெனச் சொல்லப்படுவன். இனிச் சுழுத்தியைக் கூறுவாம். (எ-று) 20

## சகலாவத்தையில் சுழுத்தி சொற்பன சாக்கிரம்.

298. பகர்வரிய சீகண்டன் அருளால் மூலப்
பகுதிதரு குணம்புத்தி ஆங்கா ரத்தில்
தொகுபுருடன் சுழுத்தியனும்; ஆங்கா ரத்தில்
தோன்றுமனம் இந்தியங்கள் புலன்கள் துன்னில்
பகர்பெயர்சொற் பனன்என்பர்; புலனில் தோன்றும்
பூதங்கள் புணர்வுறில்சாக் கிரனென் றுகும்
நிகழ்வுதரு மத்தியமாம் அவத்தை தன்னை
நிகழ்த்திடுவென் இனிமுதல்நூல் நிகழ்த்து மாறே.

*இ-ள்: சீகண்ட உருத்திரர் தம் அருளால், மூலப்பிரகிருதி தரும் குணம், புத்தி, ஆங்கார தத்துவத்தில் பொருந்தியுள்ள உயிர் சுழுத்தியவத்தையை உடையவனும். ஆங்காரதத்துவத்தில் தோன்றிய மனம் ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் தன் மாத்திரைகள் பொருந்தில் அவ்வுயிர் சொற்பனனும். தன் மாத்திரையில் தோன்றும் ஐம்பூதங்களுடன் கூடில் அவ்வுயிர் சாக்கிராவத்தை உடையவனும். இனி நடு அவத்தையைக் கூறுவாம். (எ-று)* 21

## சகலாவத்தையில் நடு அவத்தை; அதில் சாக்கிரம்

299. வந்தபுரி யட்டகஞ்சேர் வடிவில் சேர்ந்து
மன்னுமுயிர்த் தம்புலன்கண் மருவித் தத்தம்
இந்திரிய ஞன்நுகர்தற் ......... .........னெ
இயம்பின்நடு அவத்தையது மூன்று கூறும்
சந்தமுறு நனவுகன வொடுசு முத்தித்
தாமெனவா ருயிர்வழியிற் சார்ந்து நின்று
முந்துபுலன் நுகர்வதுசாக் கிரமென் றோதும்
முதல்வன்நூல் இனிக்கனவு மொழிய லுற்றும்.

*இ-ள்: உயிர் புரியட்டக வடிவொடும் கூடித் தம் புலன்களைப் பொருந்தித் தம்தம் இந்திரியத்தால் உலக போகங்களை நுகர்தற் கான நிலை நடு அவத்தையாம். அது சாக்கிரம், சொப்பனம்,*

சுழுத்தியென மூன்று பகுப்பினையுடையது. பொருந்திய உயிரானது விழியாகிய இந்திரியத்துடன் கூடிப் புலன்களை நுகர்வது சாக்கிரம் என்று ஓதும் சிவாகமம். இனிக் கனவினைக் கூறுவாம். (எ–று) 22

### சகல நடு அவத்தையில் கனவும் சுழுத்தியும்.

300. கண்டநிலை மன்னியே கழறும் ஆன்மா
கருங்கொடியின் விழிபோலுட் புறம்பு மாகிக்
கொண்டயிரு வகைப்போகங் குறுகி நிற்கும்
குறிக்குமனம் அதனாலவ் விடைய மெல்லாம்
உண்டிடுதல் கனவாகும்; இதையத் தான்மா
உயிரும்உறு மனமும்மேல் ஒன்ற ஒன்றல்
பண்டைமறை சுழுத்தியெனும்; ஈண்டு நாப்பண்
படுநனவி லைந்தவத்தை பகரக் கேண்மோ.

இ–ள்: உயிர் பொருள்களைக் கண்ட நிலையில் நிலைபெற்று காகத்தின் விழிபோல உள்ளும் புறம்பும் ஆகிக் கொண்ட இரு வகைப் போகங்களையும் குறுகி நிற்கும் மனம், அம்மனத்தால் அவ் விடையமெல்லாம் நுகர்தல் கனவாகும். இதையத்திலே ஆன்மாவும் பிராணவாயுவும் மனமும் சேரப் பொருந்துதல் சுழுத்தியாம்; இங்கே நடு அவத்தையில் தோன்றும் சாக்கிரத்தில் ஐந்தவத்தையைக் கூறக்கேள். (எ–று) 23

### சகல நடு அவத்தையில் ஐந்தவத்தை

301. முன்னமுரை செய்தபடி விடயம் ஆன்மா
முழுதுங்காண் பதுநனவு; மொழிம னத்தான்
மன்னுமுயிர் புத்தியாங் கார மாதி
ம(ருவி)... ......... விடயத்தை நன்றாய்
உன்னியுரை செய்திடுதல் கனவாம்; ஆன்மா
உயிர்புணர்ந்து மனவிகற்ப விருத்தி தன்னால்
பன்னியவவ் வனுபூத விடயம் ஐயப்
புட்டுரைத்தல் சுழுத்தியெனப் பகரும் நூலே.

இ-ள் : முன்னே கூறியவாறு ஆன்மாவானது உலகப் பொருள்களை முற்றிலும் காண்பது நனவாகும்: மனத்தோடு கூடிய உயிரானது புத்தி ஆங்காரம் முதலியவற்றை மருவி விடயத்தை நன்றாய் நினைத்துச் செய்திடுதல் கனவாகும்; ஆன்மா பிராணவாயுவுடன் கூடி மனத்தின் விகற்ப விருத்தியால் உணர்ந்த விடயத்தை ஐயப்பட்டுரைத்தல் சுழுத்தியென நூல்கள் கூறும். (எ-று) 24

## இதுவும் அது

302. கூறுமுயி ரொடுகூடி மனாதி கூடி
கூடாமை யால்விடயம் தோன்றித் தோன்று
வாறமைதல் துரியமாம்; மனாதி கூடா
வகையாலவ் விடயந்தோன் றாதி ருத்தல்
ஈறமைய வருதுரியா தீத மாகும்
இவ்வண்ணம் நடுஅவத்தை இயல்பு ரைத்தாம்
நாறுமலர் இதழிபுனை நம்பன் நூல்கள்
நவின்றமுறை கீழவத்தை நயந்து ரைப்பாம்.

இ-ள் : ஆன்மா உயிர்ப்புடன் கூடி, மனம் முதலானவற்றுடன் கூடி விடயம் நன்கு கூடாமையால் விடயம் தோன்றியும் தோன்றாமலுமிருப்பது துரியமாம்; மனம் முதலானவை பொருந்தாமையால் விடயம் தோன்றாதிருத்தல் ஈற்றிலே கூறப்பட்டுவரும் துரியாதீதமாகும். இவ்வண்ணம் நடு அவத்தை இயல்பு கூறினும்; இனிக் கீழவத்தையின் இயல்பைக் கூறுவாம். (எ-று) 25

303. உடம்பினிடை மருவியா ருயிர்தன் கன்மம்
உண்டுகன்மாந் தரமுண்ணற் கதற்க டுப்ப
அடைந்தவுடல் தொடுபோதில் சாண ளக்கும்
அளவுபோல் முன்னையுடம் பதனை மெல்ல
விடும்பரிசு கீழவத்தை யாகும் என்பர்;
விளம்பியவை வகைத்தாகும் விரிக்கின் முன்னம்
இடங்கொணடு அவத்தையுமுண் டீண்டு மீண்டு
டுண்டிவையது துரியாதி யிரண்டும் உண்டே.
.................

சி. 25-26

இ-ள்: ஆருயிர் ஒரு உடம்பினிடைப் பொருந்தித் தன் கன்மத்தை (பிராரத்த கன்மத்தை) நுகர்ந்து, பின்னர் வேறு கன்மத்தை நுகர்தற்காக அதற்கேற்ற உடம்பினைத் தொடும் பொழுதில், கைச்சாணல் அளக்கும் அளவுமுறைபோல, முன்னை யுடம்பதனை மெல்ல விடும்பரிசு கீழவத்தையாகும் என்பர். அவை ஐவகைத்தாகும், முன்னே கூறிய அவத்தையும் (செய்யுள் - 299) அவற்றுடன் துரியமும், துரியாதீதமும் சேர ஐந்தாகும். (எ-று) 26

304. முன்னமொரு மூவவத்தை முறையு ரைத்தாம்
மொழிந்தபிரா ணாதியித யத்து நிற்ப
உன்னரிய பகுதிமுத லாமவற் றோ(டு)
உந்தியிடை உயிருறுதல் துரிய மாகும்;
பன்னியவை ஆண்டொழிய ஆதா ரத்தில்
பண்டைமலத் தாற்பொதியப் பட்ட ஆன்மா
மன்னுறுதல் சேர்......துரியா தீத மென்பர்
ஆகமநூன் மரபறிய வல்ல நல்லோர்.

இ-ள்: முன்னம் (299) சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்று அவத்தையின் முறையைக் கூறினும்; பிராணன் முதலியவை இருதயத்தானத்தில் நிற்ப மூலப் பிரகிருதி முதலானவைகளுடன் உயிர் உந்தித்தானத்தில் உறுதல் துரியமாகும். மேற்கூறிய கருவிகள் உந்தியோடு தவிர, மூலாதாரத்தில் ஆணவ மலத்தால் மூடப்பட்ட உயிர் மன்னுதல் துரியாதீதமாகும் என்பர் சிவாகமத்தை உணர்ந்த நல்லோர். (எ-று) 27

## முப்பது தத்துவமும் எட்டாதல்

305. சொற்றசக லாவவத்தை முறையாலே உலகம்
தோற்றமுறும் பலவகைய வினைவ சத்தால்
உற்றபுரி யட்டகத்தோ ரியந்தி ரம்போல்
உழன்றுநர கொடுதுறக்கம் உண்பன் ஆன்மா

முற்றுபுரி யட்டகங்கள் மொழியின் முன்சொல்
முப்பதுதத் துவங்களுமெண் வருக்க மாகும்
குற்றமலி பஞ்சகஞ் சுகங்கண். மூலம்,
குணம், கரணம், பொறிகள், புலன் பூதமென்பர்.

*இ-ள்: ஆன்மா, மேலே கூறிய சகலாவத்தை முறையாலே உலகில் பிறக்கும். பிறந்து பலவகைய வினைவசத்தால் பொருந்திய புரியட்டக உடம்பால் இயந்திரம்போல் உழன்று நரகொடு துறக்கம் உண்பன். புரியட்டகத்தைக் கூறின் முன்சொல் முப்பது தத்துவங்களும் எண் வருக்கமாகும். எவ்வாறெனின்? பஞ்ச கஞ்சுகம் 1, மூலப்பிரகிருதி 2, குணதத்துவம் 3, புத்தி ஆங்காரம் மனம் என்னும் கரணம் 4, ஞானப்பொறி 5, கன்மப்பொறி 6, தன்மாத்திரை 7, பூதம் 8 என்பனவாம். (எ-று) 28*

## குறிப்பு

"புரியட்டகம் சூக்கும தேகமும் பரதேகமுமென்று இருவகைத்து. அவற்றுள், தன்மாத்திரை யைந்தும், அந்தக்கரணம் மூன்றுமாகிய எட்டானுமாயது சூக்கும தேகம். இது காலோத்தரத்திற் காண்க. இனிப் பூதமொன்றும், தன்மாத்திரையொன்றும், ஞானேந்திரியமொன்றும், கன்மேந்திரியமொன்றும், அந்தக்கரணமொன்றும், குண தத்துவமொன்றும், மூலப் பகுதியொன்றும், கலாதியொன்றும் என்னும் எண் வகைப்பட்ட முப்பத்தொரு தத்துவங்களானயது (சித்தம் ஒன்று சேர்க்க முப்பத்தொன்று) பரதேகம். பரமெனினும் அதிசூக்குமமெனினும் ஒக்கும்" இது மிருகேந்திரம் முதலியவற்றுட் காண்க.

## சுத்தாவத்தை

306. புகன்றபுரி யட்டகஞ்சேர் புரத்தை நல்லோர்
புரியட்ட தேகமெனப் புகல்வர் பாசம்
அகன்றடையும் அமலஅவத் தையினைச் சொல்லில்
அதனதுகா ரணமாகும் தீக்கை கூறப்
பகர்ந்தவதன் காரணமாம் என்னும் சத்தி
பாதம்உரை செய்குவன்செம் பவளச் செவ்வாய்
வகிர்ந்தவடு மதர்மழைக்கண் மங்கை பங்கன்
வதனங்கள் தரும்முதல்நூல் மரபு கொண்டே.

மேற்கூறிய புரியட்டக புரத்தை நல்லோர் புரியட்டக தேகம் என்று கூறுவர். ஆன்மா பாசம் நீங்கி அடையப்பெறும் அமல அவத்தையினைக் (சுத்தாவத்தையினைக்) கூறின் அதனது காரணமாகும் தீட்சையினைக் கூறுவதற்கு முன், அதன் காரணம் என்னும் சத்திநிபாதத்தைச் சிவாகம முறைப்படிக் கூறுவேன். 29

307. இனையபுரி யட்டகமுற் றுவி யோனி
எண்பத்து நான்குநூ றுயி ரத்தும்
உனவரிய கற்பங்கள் தொறுமுழன் றிட்(டு)
உயங்குகையால் ஒருகாலத் துண்ணு மெல்லா
வினையுமலி பக்குவமுற் றிவற்றி ரண்டு
வினையொப்பில் உயிர்த்துணையாம் விமலன் தன்னோர்
பனுவல்புகல் ஞானசத்தி தனையு யிர்க்குப்
பராபிமுக மாகவருள் பண்ணு மன்றே.

இ-ள்: உயிர் இத்தகைய புரியட்டக உடம்பைப்பெற்று எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிகளிடையே கற்பங்கள் தோறும் உழன்றிட்டு வருந்துகையால், ஒருகால விசேடத்திலே நுகரும் எல்லா வினைகளும் பக்குவமுற்று, இவற்றில் இரண்டு வினை ஒத்தபொழுது உயிர்க்குத் தோன்றாத் துணையாய் விளங்கும் இறைவன் தனது ஒன்றாகிய ஞானசத்தியை மேலான நேர்முகமாக அருளிச் செய்வன். (எ-று) 30

குறிப்பு

இறைவன் தன் ஞானசத்தியை உயிரின் இருவினையொப்பில் பதிய வைத்தலைச் சத்தி நிபாதம் என்பர்.

மலபரிபாகம் இல்லையேல்
திரோதம் அருளாய் மாறாதென்றல்.

308. இருவினைகள் ஒத்தேனை மலந்தான் பாகம்
எய்திலவேல் அவ்விறைவன் சத்தி மாறாய்ப்
பொருவரிய திரோதான சத்தி யாகிப்
போகங்கள் கொடுக்குமெனப் புகல்வர் நல்லோர்

அருவினைகள் ஒத்தன்மாத் திரையே அந்த
அமலசத்தி பாககா ரணமா காதாம்
மருவுமல பரிபாக மதுவும் ஏது
மற்றதற்கென் றுகமநூல் வகுக்கு மன்றே.

இ-ள்: உயிர்க்கு இருவினைமட்டும் ஒத்து ஆணவமலம் பக்குவம் அடைந்திலவேல், அவ்விறைவனுடைய ஞான சத்தி மாறுபாடாகி மறைக்கும் சத்தியாகி உலக போகங்களைக் கொடுக்கும் என நல்லோர் கூறுவர். அரிய இருவினையொத்தல் மட்டும் அந்த அமல சத்தி ஞான சத்தியாதற்குக் காரணம் ஆகாதாம். திரோதான சத்தி ஞான சத்தியாதற்கு ஆணவமல பரிபாகமும் ஏதுவாம் என்று ஆகமநூல் கூறும். (எ-று) 31

309. மலசத்தி யதிகார நிவிர்த்தி யாலம்
மலசத்தி நீங்கலுமிவ் வுலகின் கேளாய்
அலர்வுற்ற சிவஞானக் கிரியா சத்தி
அனந்ததயை விளக்குறுவ னுன்மா விற்கிங்(கு)
இலகுற்ற பரசிவன்சங் கற்பத் தானே
எய்துறுமிவ் வுலகுசிருட் டியினி டத்து
நலமுற்ற வாதனையாம் சரம தேகி
நவிலப்பட் டிடும்பிண்ட ஞானம் கொண்டே.

இ-ள்: மலபரிபாகம் ஏற்பட்டபொழுது ஆணவமல சத்தியை அதிகாரம் செய்யும் திரோதான சத்தியின் அதிகாரம் நிவிர்த்தியாதலால் ஆணவமல சத்தி நீங்கலும் இவ்வுலகிற்குத் துணையாய் உள்ள சிவனது ஞானக் கிரியாசத்தி ஆன்மாவிற்குக் கணக்கற்ற தயையை விளக்குறும், பரசிவனின் சங்கற்பத்தால் உண்டாகும் உலக சிருட்டியினிடத்து நல்வாசனையுடைய கடைசி தேகத்தை எடுத்த உயிர், பிண்ட ஞானம் கொண்டு, பிண்ட ஞானி எனக் கூறப்பட்டிடுவன். (எ-று) 32

குறிப்பு

ஈற்றுத்தேகியே பிண்டஞானி என்று பெயர்பெறுவன் என்பதை

"பாக மாகிய நல்வினைப் பயன்கொடு சுத்தம்,
ஆகு மாமனம் முன்னிடத் தங்கணன் அருளால்,
ஏக மாஞ்சிவ பத்திதோன் றுறுமவன் ஈற்றுத்,
தேக மோடுநற் பிண்டமென் பெயர்கொடு செறியும்"

என்னும் சித்தாந்த சிகாமணிச் செய்யுளால் அறிக.

## பிண்ட ஞானி

310. பிண்டமெனு மவன்றனக்குச் சத்தி பாதப்
பேற்றிலுயிர் உயிரல்பொருள் விவேகம் தோன்றும்
தண்டலிலிவ் விவேகபுத்தி பிண்ட ஞானம்
தானதனை யுளன்பிண்ட ஞானி என்று
கொண்டறிக; ஒருவனிடைச் சத்தி பாதக்
குறியுரைப்பின் முத்திவிருப் புடல்வெ றுப்பும்
மண்டுசிவ பத்தரிடை பத்தி மிக்க
மரபியம்பும் ஆகமத்தின் சிரத்தை மன்னே.

இ-ள்: பிண்டத் தலத்தை உடையவனாகிய உயிர்க்கு முதல்வனுடைய சத்தி பதிந்த பேற்றில் இது உயிர், இது உயிரில் பொருள் என்று பகுத்தறியும் பகுத்தறிவுணர்ச்சி தோன்றும்: உடலிது உயிரிது என்று பகுத்துணரும் விவேக புத்தியே பிண்ட ஞானமாம்; அந்த ஞானத்தையுடையவன் பிண்ட ஞானியாவான். ஒருவனிடத்தில் சிவசத்தி பதிந்த அடையாளத்தைக்கூறின், முத்தி விழைவும் உடல் வெறுப்பும் சிவபத்தரிடத்தே பத்தியும் சிவாகமத்தில் சிரத்தையும் 33

## குறிப்பு

பிண்ட ஞானியின் இயல்பினை

"உற்றிடும் உடலுயிர் உணர்வி வேகமே
பெற்றவன் எவனவன் பிண்ட ஞானி"

என்னும் சித்தாந்த சிகாமணிப் பாடலால் அறிக.

311. இன்னணமொண் மந்தாதி சத்தி பாதத்
திலிங்கத்தால் தீக்கைதனக் கியைந்து ளானும்
என்னவனு மானம்செய் திரும்ப வத்தின்
இகந்தொழிய சத்திநிபா தத்திற் கேற்பச்

சென்னெறிகொள் சத்தியோ நிருவா ணாதி
தீக்கையினைப் பரன்புரிவன் சீடற் கென்க
வன்னிலைகொள் குருசீடர் அருள டக்கத்
தான்கருத்தன் அவர்கூட்டம் அரிய தாலோ

இ-ள்: இவ்வாறு மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்னும் சத்திநிபாதக் குறியால், பிண்டஞானி தீட்சைக்கு உரியவனாகின்றான் என்று அனுமானித்தறிந்து பிறவியில் நீங்க சத்திநிபாதத்திற்கு ஏற்பச் சத்தியோ நிருவாணம் முதலிய தீக்கையைச் சீடனுக்குப் பரமேசுரன் புரிவன். வலிய நிலைமையைக்கொள் குருவின் அருளாலும் சீடனின் பணிவாலும் கருத்தனாயிருக்கும் அவர் கூட்டம் அரியதில் அரியதாம். 34

312. அறிவுதனை அளித்துமலம் அழிக்கும் தீக்கை
அதனாலப் பயன்தா னத்தா லோங்கும்
செறியுநிரா தாரசா தார மென்றத்
தீக்கையிரு கூறுரும்; சேவு கைப்போன்
வெறுநிரதி கரணனாய்த் தீவிரத ரத்தால்
விஞ்ஞான கலர்பிரள யாக லர்க்கு
நெறிமுறைசெய் திடல்நிரா தார தீக்கை
நின்றொழிசா தாரமினி நிகழ்த்து வாமே

இ-ள்: தீட்சையானது அறிவைக்கொடுத்து மலத்தை அழிப்பதாம். தீட்சையின் பயன் சீடன் தன் ஆசானுக்குக் கொடுக்கும் தானத்தால் ஓங்கும். தீக்கையானது நிராதார மென்றும் சாதார மென்றும் இரண்டு கூறுரும். சிவபெருமான் தீவிரதரத்தையுடைய விஞ்ஞானகலர் பிரளயா கலர்க்கு நிரதி கரணனாயிருந்து நெறிமுறை செய்வது நிராதார தீக்கையாகும். ஏனை சாதார தீக்கையை இனிக் கூறுவாம் 35

## குறிப்பு

*தீட்சை என்னும் சொல்லுக்குப் பொருளை*

"அகயிருள் மாயை கருமமிம் மூன்றும் அகற்றியே சுத்தனும் ஆக்கித்
தகநிறுத் திடுதல் கையதாம்; அப்பால் தன்னுயி ராகியே நிகழும்
சுகசிவ உதய மாக்குதல் தீயாம்" (80)

என்னும் சுத்தசாதகத்தால் அறிக.

313. வயங்குகுரு மூர்த்திதனை மருவி நின்று
மந்தசத்தி பாதத்தா ......... லத்தொன்
றியங்கலுறு சகலர்க்குச் செய்யும் தீக்கை
சாதாரம் எனவுணர்க; சாதா ரந்தான்
தியங்கலறு சபீசமொடு புகல்நிற் பீசம்
சின்மயமென் றெருமூன்று திறத்த வாகும்
நயங்கொளவை முறைகரும காண்டம் பத்தி
ஞானகாண் டங்களிடை நவிலு மன்றே.

*இ-ள்: இறைவன் குருவடிவத்தைப் பொருந்தி நின்று மந்தம் மந்ததரம், தீவிரம் தீவிரதரம் என்னும் நால்வகைச் சத்தி நிபாதத்துள் ஒன்றைப் பெற்றுள்ள சகலர்க்குச் செய்யுந் தீக்கை சாதாரமாகும். அத்தீக்கை சபீசம், நிற்பீசம், சின்மயம் என்று மூன்று திறத்ததாம். அவற்றுள் சபீசம் கன்மகாண்டத்திலும், நிற்பீசம் பத்தி காண்டத்திலும், சின்மயம் ஞான காண்டத்திலும் நவிலப்படும். (எ-று)* 36

நிற்பீச தீக்கையின் வகையும்; சத்தியோ நிருவாணமும்

314. சாற்றலுறும் அவற்றுள்நிற் பீச தீக்கைச்
சாற்றியிடில் சத்தியோ நிருவா ணம்பின்
ஏற்றசிர நிருவாண மெனவி ரண்டாம்
இறந்தநனி விரதனும் சீடன் முன்னம்
தோற்றுபல பிறவியிடைச் செய்த தீண்டு
துய்க்கின்ற துணவாகும் வினைக ளெல்லாம்
மாற்றுறுதல் சத்தியோ நிருவா ணப்பேர்
மருவியதென் றுகமங்கள் வகுக்கு மன்றே.

*இ-ள்: மேற்கூறப்பட்ட அவற்றுள் நிற்பீச தீக்கையைச் சாற்றில், அது சத்தியோ நிருவாணம் சிர நிருவாணம் என்று இரண்டாகும்; அவற்றுள், சத்தியோ நிருவாண தீக்கை என்பது மிக அதிகமான விரதத்தையுடையனும் சீடன், முன்னே பிறந்த பல பிறவியிடைச் செய்ததாகிய சஞ்சிதவினையும் இப்பிறவியில்*

நுகர்வதற்குரிய பிராரத்த வினைகளெல்லாமும் ஆகாமிய வினையும் உடனே நீக்குதலாகும். (எ-று) 37

குறிப்பு

*சத்தியோ நிருவாணம் - உடனே பற்றறச் செய்தல்.*

சிர நிருவாண தீக்கை

315. சீடனுறும் சஞ்சிதவா காமி யங்கள்
தீர்ந்துநுகர் வின்போகம் முடிவில் தீர்க்கும்
பீடமைவ தியம்புசிர நிருவா ணப்பேர்
பெற்றதென வறிகவது பேசின் ஆணை
நீடுவமை சுவத்திகா ரோக ணம்பின்
நின்றுகவின் கனிந்துநிகழ் விபூதிப் பட்டம்
ஆடலுறு கலசாபி டேகம் சீர்சான்
றமையிலிங்கா யிதம்சுவா யதமென் றேழாம்.

*இ-ள்: மாணவன் உற்ற சஞ்சித ஆகாமிய வினைகளை மட்டும் தீர்த்து, பிராரத்த வினைப்போகத்தை முடிவில் தீர்க்கும் தகுதியுடன் கூடியது சிர நிருவாண தீக்கையாம் என்று அறிக, அத்தீக்கை ஆணையும், உவமையும், சுவத்திகாரோகணமும். விபூதிப் பட்டமும், கலசாபிடேகமும், இலிங்காயிதமும், சுவாயதமும் என்று ஏழாம். (எ-று)* 38

குறிப்பு

*நுகர்வின் போகம் - பிராரத்த வினைப் போகம்.*

## ஆணை, உவமை, சுவத்திகாரோகணம், கலசாபிடேகம், விபூதிப்பட்டம் என்னும் தீக்கைகள்.

316. குரவனுய ராணையினைக் கடவா வண்ணம்
கொளலாணை : முன்னோர்தம் சமயா சாரம்
பொருவுவமை; சுவத்திகா ரோக ணத்தைப்
புரிந்துமனு நியாசங்கள் புரிதல் கூறில்

பரவரிய சுவத்திகா ரோக ணங்கும்
பத்துநீ ராட்டல்கல சாபி டேகம்
மருவரிய திருநீற்றுப் பட்டம் கட்டல்
வளர்பூதிப் பட்டமென வகுக்கும் நூலே.

இ–ள் : ஆசிரியன் தனது ஆணையினைச்சீடன் கடவாவண்ணம் செய்துகொள்ளுதல் ஆணை என்பதாம். முன்னோர்தம் சமயாசாரத்தைக் கூறி அவர் போல் நீயும் நடந்துகொள் என்பது உவமையாம். சுவத்திகத்தை நிலத்தில் வரைந்து அதன்மேல் சீடனை இருக்கச்செய்து மந்திரத்தால் நியாசம் செய்தல் சுவத்திகாரோகணமாம். கலச நீராட்டுதல் கல்சாபிடேகமாகும்: திருநீற்றுப்பட்டம் கட்டுதல் விபூதிப்பட்ட தீக்கையாம் என நூல்கள் கூறும். (எ–று) 39

இலிங்காயிதமும் இலிங்க சுவாயதமும்

317. அருச்சனைசெய் சிவலிங்கம் ஆசான் பார்ப்பித்
தருளல்லிங் காயிதமாம் ; அதனை மேவத்
தரித்திடுதல் இலிங்கசுவா யதமென் றோர்க ;
சாற்றியவத் தீக்கைபல வாதனையும் நீக்கித்
திருக்ககலும் முத்திதரும் என்ப ரால்இத்
தீக்கைசெயப் பட்டுமொரு சீடன் தன்பால்
இருக்கும்வினை முதலனபோய் இருத வாறிங்
கென்னையெனில் அதற்குவிடை யியம்பக் கேளே.

இ–ள் : வழிபாடுசெய்த சிவலிங்கத்தை ஆசிரியன் தரிசனம் செய்வித்திடுதல் இலிங்காயித தீக்கையாம். அச் சிவலிங்கத்தை மாணவனுக்குப் பொருந்துமாறு அணிதல் இலிங்கசுவாயத தீக்கையாம். இத்தீக்கைகள் பலவகைத் துன்பங்களையும் நீக்கி திருக்குநீங்கிய வீடுபேற்றைத் தரும் என்பர். ஆசிரியனால் மாணவன் தீக்கைசெயப்பட்டும் அவனிடம் வினை முதலியன நீங்கி அழியாமைக்குக் காரணம் என்ன எனில்? அதற்கு விடை கூறக் கேட்பாயாக. (எ–று) 40

318. "மந்திரங்க ளால்வடிவில் ஆல சத்தி
மாய்தல்போல்" பாசவலி மாயும் என்க;
தந்திரங்கொள் தீக்கையில்நன் மந்தி ரத்தால்
தக்கமுளை முதலவித்து வறுப்புற் றுங்கு
வந்திடுந்தோ றுஞ்செய்யப் பவவித் தாகி
வந்தவினை சுடப்பட்ட தாகும் கன்ம
பந்தமது தரப்பட்ட திவ்வு டம்பு
பற்றுவினை உண்டொழித் திடுவ தாமே.

*இ-ள்:* விடந்தீர்க்கும் மந்திரத்தால் உடம்பில் விடசத்தி கெடுதல்போல, தீக்கையால் பாசவலி மாயும் என்க. கிரியைகளை யுடைய தீக்கையில் நல்லமந்திரத்தினலே 'முளை முதலான வற்றுடன்கூடிய விதை வறுக்கப்பட்டாற்போல' இப்பிறவியில் வருந்தோறும் செய்யப் பவவித்தாகி வந்த வினைகளெல்லாம் சுடப்பட்டதாகும். கன்மபந்தத்தால் தரப்பட்டதாகிய இவ்வுடம்பு எடுத்துக்கொண்ட வினை அனுபவித்துத் தீர்க்கப்படுவதாகும். (எ-று) 41

319. பலர்புகழும் தீக்கையால் பாச மெல்லாம்
பரியுமேல் தீக்கைசெயப் பட்டும் யாக்கை
நிலைபெறுதல் எவ்வகையால் என்னில், நேமி
நிலாதுகடம் முடிந்துமுழல் நெறிபோல் மேனி
மலைதலறு தீக்கைவினைப் பின்னும் கன்ம
வாதனையால் நிற்கும்ஒரு பாண்டத்துள்.........
இலகுசுடர் கடமுடைய எங்கு மாகி
இலங்கல்போல் உடன்முடிவில் எங்கும் ஆமால்.

*இ-ள்:* பல அறிஞரும் புகழ்ந்து கூறும் தீக்கையினலே எல்லாப் பாசங்களும் நீங்குமேல், தீக்கை செயப்பட்டும் மாயையாகிய பாசத்தின் காரியமாகிய உடம்பு நிலைபெற்றிருத்தல் எவ்வகையால் எனில், குயவன் சுழற்றும் சக்கரம் குடம் செய்து முடிந்தபின்னரும் நில்லாமல் சுற்றுதல் போல, தீக்கை நடந்த பின்னரும் உடம்பு கன்ம வாசனையால் அழியாது நிற்கும். ஒரு

*பாண்டத்தினுள் வைக்கப்பட்டிருக்கும் சுடர் அக்கடம் உடைய எங்குமாகி விளங்குதல் போல ஆன்மாவும் உடல் முடிந்தபின் எங்கும் ஆம். (வியாபக முடையதாம்) (எ-று)* 42

## முத்தரின் வகை

320. முத்தரொரு மூவகைய ராவர் சீவன்
முத்தருடன் அபரபர முத்த ரென்ன;
வைத்தமுறை சிரநிருவா ணுதி தீக்கை
மருவுதீக் கிதன்சீவ முத்த னென்க;
அத்தகையான் வீரமா யேச னுகும்;
அவனுருவ மறைந்துடம்பி னந்தத் தெய்தி
மெத்துபர முத்தனு மளவும் ஆசான்
விடுத்தருள்செய் விதிமரபு விடாது நிற்பன்.

*இ-ள்: முத்தரானவர் (பற்றற்றவர்) சீவன் முத்தர் அபர முத்தர் பரமுத்தர் என மூவகைய ராவார்; கூறிய முறையின்படி சிர நிருவாணம் முதலிய தீக்கையைப் பெற்றவன் சீவன் முத்தனும்; அவன் வீரமாயேசனும்; அவன் வடிவம் மறைந்து உடம்பின் இறுதியில் எய்தி பரமுத்தனுமளவும் தன் ஆசிரியர் அறியாமையை நீக்கி அருள்செய்த விதிமரபை விடாது நிற்பன். (எ-று)* 43

## ஐவகை யோகமும் அவற்றுள் மந்திர யோகமும்

321. உண்ணும்வினை முடிவளவும் வறைவித் தொப்ப
உடம்பினைக்கொண் டுடம்பிபோல் உற்றி ருப்பன்
அண்ணலவன் அருள்புரியும் யோகம் ஐந்தாம்
அவைமுறைமந் திரயோகம் இலய யோகம்
பண்ணலுறும் அடயோகம் இராச யோகம்
பகருசிவ யோகமெனப் பகரி லைந்து
வண்ணம்முத லனவிதித்த வாசெ பித்தன்
மந்திரயோ கப்பெயர்தான் மருவு மன்றே.

*இ-ள்: மேற்கூறிய சீவன் முத்தன், தான் நுகரக்கடவ வாகிய வினை (பிராரத்தம்) முடியும் வரையும் வறுத்த விதையினை*

ஒப்ப உடம்பினைக்கொண்டு ஏனைய உடம்புடையாரைப்போலவே பொருந்தியிருப்பன். பரமேசுரன் அருளிச் செய்த யோகம் ஐந்து விதமாக இருக்கும்; அவை மந்திர யோகம், இலய யோகம் அட (ஹட) யோகம் இராச யோகம் சிவயோகம் என்பனவாம். மந்திர எழுத்து முதலானவற்றை விதித்த முறை செபித்தல் மந்திர யோகமாம். (எ-று) 44

## குறிப்பு

'ஹ' என்பது சூரியன்; 'ட' என்பது சந்திரன்; இவ்விரண்டன் யோகம் (சேர்க்கை) ஹட (அட) யோகமாம்; சூரியன் பிராணவாயு; சந்திரன் அபானவாயு; இரண்டின் ஐக்கிய லட்சணமாகிய பிராணாயாமமே ஹடயோக மென்க. (ஹடயோகம் பிரதீபிகை. பக். 2) வண்ணம்-எழுத்து.

## இலயயோகமும் அடயோகமும்

322. மனமதனைப் பவனமொடு கூட்டித் தன்மெய்
வளரொளியி லேனும்நா தத்தி லேனும்
முனைமரபில் புகவொடுக்கல் இலய யோகம்;
முத்திரைபந் தங்களான் முயங்கும் வாயுத்
தனைமலைவற் றட்டாங்க வழியில் வென்று
சடாதாரங் களிற்சிவனைச் சார்ந்து நிற்றல்
பனும்முறையிற் படும்அடயோ கப்பெ யர்த்து;
பழுதகன்ற இராசசிவ யோகம் சொல்வாம்.

இ-ள்: மனத்தைப் பிராண வாயுவுடன் கூட்டித், தன் உடம்பிலுள்ள ஒளியிலேனும், ஒலியிலேனும் புக்கிருக்குமாறு ஒடுக்குதல் இலயயோகமாம். முத்திரையாலும், ஒட்டியாணம் முதலிய பந்தனைகளாலும் பிராணவாயுவை மாறுபாடற்று இயமம் முதலான அட்டாங்க வழியினாலே வென்று மூலாதாரம் முதலான ஆறு ஆதாரங்களிலே சிவனைச் சார்ந்து நிற்றல் அடயோகம் என்னும் பெயரையுடையது. இனி இராச யோகத்தையும் சிவ யோகத்தையும் கூறுவாம். (எ-று) 45

## இராசயோகமும் : சிவயோக வகையும்

323. மூவகைய இலக்கியங்க ளிடத்தி லேனும்
முந்துதிரி பதார்த்தஞா னத்தி லேனும்
மேவலுறு மனவிருத்தி விரிந்து நின்று
மெய்ப்பொருளைக் காண்குதலி ராச யோகம்
தேவர்விழை சிவஞானம் சிவமெய்ப் பத்தி
தியானமொடு சிவவிரதம் பூசை என்று
தாவில்சிவ யோகமோர் ஐவ கைத்தாம்
சாற்றுமிவை உயர்ந்தனமென் மேலென் றூரே.

இ-ள் : மூன்று வகையான இலட்சியத்திலேனும் முப்பொருள் ஞானத்திலேனும் மேவும் மனவிருத்தி விரிந்து கருதிநின்று உண்மைப் பொருளைக் காண்பது இராசயோகமாம். சிவஞானமும், சிவபத்தியும், சிவத்தியானமும், சிவவிரதமும், சிவபூசையும் என்று கெடாத சிவயோகம் ஐவகைத்தாம். இந்த ஐந்தும் ஒன்றைவிட ஒன்று மேல்மேல் உயர்ந்தன. (எ-று) 46

### குறிப்பு

திருநாவுக்கரையர் "என்கடன் பணி செய்து கிடப்பதே" எனத் தொகுத்துக் கூறினர். சித்தாந்த சிகாமணி என்னும் அரியநூல் அப்பணி ஐந்தாகும் என்று கூறி, ஒவ்வொன்றையும் இன்னது இன்னது என்று விளக்குவதைக் காண்க.

"மறுவறு பணியோ ரைந்து வகைப்படும் அதனை யும்கேள்"

"வந்துறு தவமே கன்மம் வன்செபம் தியானம் ஞானம்
ஐந்திவை முறையி னாகும்; அருந்தவம் ஈசற் காக
நொந்துட லிளைத்த லாகும்; மற்றுள நோன்பில் நோதல்
முந்துள தவம தென்று மொழிந்திடப் படாது கண்டாய்"

"கண்ணுதல் பூசை செய்கை கருமம்மற் றுள்ள வல்ல
அண்ணறன் பிரண வத்தோ டஞ்செழுத் துருத்தி ராதி
நண்ணுறப் பயிலுந் தன்மை நற்செபம் வேத மாதி
பண்ணுறப் பயின்று நிற்கை பகர்தரு செபமா காதால்"

'சிவமுறு படிவ மாதி சிந்தனை தியான மாகும்
அவமுறும் ஆன்ம சிந்தை யாதிய தியான மாகா

நவமறு சிவாக மத்தின் நற்பொருள் தெரிதல் ஞானம்
பவமுறும் ஒழிந்த நூலின் பயனுணர் வன்று ஞானம்"

என்னும் சித்தாந்த சிகாமணிப் பாடல் சிவயோகத்தைச் சிவப்பணி என்று கூறி அது ஐந்து வகைப்படும் என்று கூறுதலே, இங்கு கூறிய பொருளுடன் ஒப்பிட்டறிக மேன்மேல் உயர்ந்தது என்பதைச் சிவபூசையைவிடச் சிவ விரதமும், அதைவிடச் சிவத்தியானமும், அதைவிடச் சிவபத்தியும், அதை விடச் சிவஞானமும் சிறந்ததென்று கொள்க. அல்லது மந்திரயோகம் முதலியன ஒன்றைவிட ஒன்று சிறந்ததாம் என்றும் கொள்க.

## சிவயோகியின் அவத்தை ஏழு

324. அனையசிவ யோகிதன தவத்தை முன்சொல்
ஐந்தினெடு சகசம்உன் மணிபு ணர்ந்தேழ்
எனஅறைவர் அவற்றுள்விருப் புவர்ப்பு நீங்கி
எப்பதமும் கடந்துதவ விரத ஞகி
உனலரிய முத்தியில்உன் முகனுய் முத்தி
உபாயத்தில் விடாதமைதல் நனவென் றோர்க
கனலுறுதூ செனவுளனென் னளவாய் நின்று
கனவெனக்காண் குதலுலகைக் கனவு காணே

இ-ள்: அனைய சிவயோகியின் அவத்தை, முன்சொல் ஐந்திஞேடு சகசம் என்றும், உன்மணி என்றும் கூறப்படும் இரண்டும் சேர்ந்துஏழாகும் என்று கூறுவர். அவ்வேழுள், விருப்பு வெறுப்பின்றி, உலக நெறியில் எந்த நிலையையும் தாண்டி, தவத்தை விடாத விரதனுகி, முத்தியைப்பெற வேண்டும் என்பதில் நிலையான எண்ணம் உடையவனுய் முத்திபெறும் செயலில் விடாது அமைதல் சிவயோகியின் சாக்கிர நிலையாம். நெருப்பினை அடைந்த ஆடையைப்போல உளன் என்னும் அளவாய் நின்று உலகைக் கனவுபோல் கருதுதல் சிவயோகியின் சொப்பன நிலையாம். (எ-று)



### குறிப்பு

ஐந்திஞேடு என்றது சுத்தாவத்தையிற் கூறிய சாக்கிரம் முதலான ஐந்து.

## சுழுத்தி. துரியம்.

325. தோன்றுமிகு சாந்தனாய் ஞானா னந்த
சூரியன்பே ரொளியினால் உலகம் தோன்று(து)
ஊன்றுசிவ சித்தனாய் ஓவி யம்போல்
உறவிருத்தல் சுழுத்தி;சங் கற்ப மாகும்
ஆன்றமன விருத்திபோய் பரம சாந்தம்
அடைந்திறவா திறந்தவனாய் அகந்தை நீங்கி
ஏன்றனைய வாதனையு மிகந்து முத்தன்
எனவிருத்தல் துரியமென இயம்பும் நூலே.

இ-ள்: மிக்க சாந்தகுணம் உடையவனாய், ஞான ஆனந்த சூரியனாகிய பரமேசுரனது பேரொளியில் முழுகியிருத்தலால் உலகம் தோன்றாது, சிவத்தில் ஊன்றிய சித்தமுடையவனாய் அசைவற்ற சித்திரம்போல் பொருந்த இருத்தல் சிவயோகியின் சுழுத்தியவத்தையாம்; சங்கற்ப விகற்பமுடைய மனவிருத்தி போய் மேலான சாந்தநிலையை அடைந்து இறவாது இறந்தவனாய் யான் என்னும் பற்று நீங்கி உலக வாதனையெல்லாம் நீங்கி முத்தன் என்று கூறுமாறு இருத்தலே சிவயோகியின் துரியநிலையாகும். (எ-று) 48

## துரியாதீதமும், சகசாவத்தையும்

326. வேலையிடை நிறைகுடம்போல் விசும்பி டத்து
வெறுங்குடம்போல் உள்புறமும் மேவி நின்ற
கோலமிலொண் சிவம்முன்னாய் வரைதீ பம்போல்
கொள்கைபெறு நிலைதுரியா தீத மென்க
மேலுரைசெய் இந்திரிய வழக்க மின்றி
விமலனாய்ப்..............வங்க ணீங்கும்
சீலமுறு சாந்தனுக்குத் திகழும் தன்மை
தெரிசகசா வத்தையெனத் தெரிக்கும் நூலே.

இ-ள்: கடலின் உள்ளிருக்கும் நிறைகுடம் போலவும், விசும்பிடத்தே உள்ள வெறுங்குடம் போலவும் உள்ளும் புறம்பும்

மேவி நின்ற சிவபரம்பொருள் ஒன்றே முன்நிற்க, எழுதிய விளக்குப் போல உலகவாதனையால் தாக்கப் பெறுதிருத்தல் சிவயோகியின் துரியாதீதம் என்க. இந்திரிய இயக்கமின்றி குற்றமற்றவனுய்த் துவந்துவங்கள் நீங்கியுள்ள சாந்தகுண முடையவனுயிருப்பது சிவயோகியின் சகச நிலையாகும். (எ-று) 49

## உன்மணி அவத்தை

327. பயிலும்நெறி யோகத்தான் முறையின் எய்தப்
படும்பரம சிற்சத்தி வடிவ ணுகி
மயலில்பர சிவனெனத்தா னெனவி ரண்டு
வகையிலா நிலையினைஉன் மணியென் ருேர்க
இயலுமிவை யுளன்சீவன் முத்தன் ஆகும்
எழில்திகழ்மந் திரேசர்புவ னேச ரென்ன
முயலுமுயர் சாலோகம் முதலாய் உள்ள
முப்பதத்தோர் தாம்அபர முத்த ரன்றே.

இ-ள்: நாடொறும் பயிலும் யோகநெறி முறைமையினுல் அடையப்பட்ட மேலான சிற்சத்தி வடிவனுகிப் பரசிவனெனத் தானென இரண்டு வகையிலா நிலையே சிவயோகியின் உன்மணி என்னும் அவத்தையாம். இத்தகைய அவத்தைகளைப் பெற்றுள்ளவன் சீவன் முத்தனுவான். மந்திரேசர் என்றும் புவனேசர் என்றும் கூறப்பட்டவராய் சாலோக சாமீபசாரூப மென்னும் முப்பதத்தோர் அபரமுத்தராவார். (எ-று) 50

## பரமுத்தன்

328 படியில்சிவ சாயுச்சிய முத்தன் என்பான்
பரமுத்தன் எனப்படுவன்; பகரில் அன்னுன்
முடிவில்விதி பரமகே வலத்து வஞ்சேர்
முத்தன்நிரு மலனுகும் முறையான் மீண்டிங்(கு)
ஒடிவில்பவம் அடைந்துழலான் உரைத்த முத்தன்
உறுங்கலா திகளொழிவன் சுழுத்தி யன்போற்
கடிவின்முழு துணர்தன்முத லனபொ ருந்துங்
கடப்புனில யாதிபத மூன்று மன்றே

இ-ள் : உவமையற்ற சிவசாயுச்சிய நிலையைப் பெற்ற முத்தன் என்பவனே பரமுத்தன் எனப்படுவன் ; கூறில், அன்னுன் ஈற்றிலே விதிக்கப்பட்ட மேலான கேவலத்தன்மை சேர்ந்த முத்தனும் நிருமலனும் ஆகும் முறையினுன், மீண்டும் இவ்வுலகத்தில் பிறக்கும் பிறப்பினை அடைந்து உழலான். சுழுத்தியன்போல் கலாதிகள் ஒழிவன் ; முழுதுணர்தல் முதலானவற்றைப் பொருந்துவன். இலய போக அதிகார பதம் மூன்றும் கடப்பன். (எ-று) 51

ஆன்மா தன் ஞானத்தால் சிவனை உணர்ந்துகொண்டு அந்த ஞானத்தையும் விடுவனென்றது.

329. மன்னுசிவன் சூரியன்தன் சத்தி யாகும்
வளரொளியால் வலிசெய்யப் பட்ட தன்சித்
தென்னும்விழி கொடுசத்தா திகளி ருசந்
? தவிருஞ்சிவனை யாணவமி லாதான் காண்பன்
முன்னமொரு பொருளுணர்வான் கொண்ட வுற்கை
மொழிந்ததுகொண் டொழித்தல்போல் முதிர்ஞா
துன்னுமொரு சிவமாகும் ஞேயம் கொண்டு [னத்தால்
தொலைப்பனந்த ஞானமெனச் சொல்லும் நூலே.

நிலைபெற்ற சிவன் சூரியனும்: தன் சத்தியாகிய வளரொளியால் வலிமைபெற்றுள்ள தன்சித்து (ஆன்மசிற் சத்தி) என்னும் விழியைக்கொண்டு பரமேசுரனை ஆணவவலிமை யில்லாதவன் காண்பன். இருளிலே உள்ள பொருளை உணர வேண்டிக்கொண்ட கொள்ளிக்கட்டையை அப்பொருளை அறிந்து கொண்டபின் ஒழித்தல்போல, சிவமாகிய ஞேயப் பொருளைக் கொண்டபின் அந்த ஞானத்தையும் விடுவன் என நூல் கூறும். (எ-று) 52

சிவஞானமுடையார் சிறப்பு

330. பேரிலதாய் நிராலம்ப மாகி யென்றும்
பிரமாணம் மனத்தானும் பெறுவ தன்றிப்
பாரெழுவாய் ஆகியதத் துவங்கட் கப்பாற்
பட்டசிவர் தனிலொடுக்கப் பட்ட ஞானம்

யாரொருவன் உளனவன் அனையான் றன்னை
இலங்குபர முத்தனெனல் துணிவே நூற்குத்
நேரில்......... பொடுபூசை ..................ன
நோன்...... முழுது மில்லை யன்றே.

இ-ள் : பெயர் இல்லாததாய், நிராலம்பம் (பற்றுக்கோடில்லாதது) ஆகி, என்றும் பிரமாணம் மனத்தாலும் பெறுவதன்றி நில தத்துவம் முதலான தத்துவங்கட்கு அப்பாற்பட்ட சிவத்திலே ஒடுக்கப்பட்ட ஞானத்தை, யார் ஒருவன் பெற்றுள்ளானோ அவனைப் பரமுத்தன் என்றே நூல்கள் துணிந்து கூறும். அத்தகைய பரமுத்தனுக்குப் பூசை முதலிய ஒன்றும் வேண்டுவதில்லையாம். (எ-று) 53

## குறிப்பு

பரமுத்தனுக்குச் சிவபூசை முதலியன வேண்டுவதில்லை என்பதை,

"மந்திரந் தியானமே வணக்கம் பூசனை
தந்திரம் இவையிலைச் சாற்றுங் காலிவன்
சிந்தையில் ஒருதனி ஞேயம் எய்தலால்
பந்தமோ டறிதரப் படுவ தில்லையே"

என்னும் (88) சதமணிமாலையால் அறிக.

## சிவஞானப்பேறுடையவர் நிலை

331. ஒன்றாகிச் சிவசொருப மன்றி வேறொன்(று)
உணர்வதிலை இங்ஙனமிங் குணர்ந்த வாற்றால்
பொன்றுவச் சிவத்தொளியில் பொருந்தி ஞர்க்கப்
போகபோத் துருத்துவம் அதிகாரத் துவங்கள்
நன்றாம்நற் பதியாகும் சிவன்செய் கின்ற
நவையறும்ஐந் தொழிலிவைகள் நண்ணு வாகும்
என்றாக மத்திறங்கள் இயம்பா நிற்கும்
இலகுறுமப் பரமுத்தி இயல்பு ரைப்பாம்.

இ-ள் : சிவஞானப் பேறுடையவன் பலவகைப் பொருளையுடைய உலகம் சிவம் என்கின்ற இரண்டில் சிவமாகிய

ஒன்றையே பற்றிச் சிவசொரூபத்தையன்றி வேறொன்றை உணர்வதில்லை என்று இவ்வாறு கூறியமுறையால், அச்சிவப்பிரகாசத்தில் பொருந்தியவர்க்குப் போகங்களை நுகர்வதும் அப்போகத்திற்கு உரியராவதும் அதிகாரங்களை மேற்கொள்வதும் பதிசெய்யும் ஐந்து தொழில்களைப் பெறுவதும் ஆகிய இவையெல்லாம் பொருந்தாவென்று சிவாகமங்கள் கூறும். இனி அப்பரமுத்தியின் இயல்பினைக் கூறுவாம். (எ—று) 54

## சிவசாயுச்சியம்

332. எங்குமுற விளங்குசிற் சத்தி மூர்த்தி
இனையபர முத்திமல மூன்றும் நீங்கி
சிங்கலறும் ஐந்தொழில்செய் செயலொன் றின்றிச்
சிவசமா னதைக்குறியாய்ச் சிறந்த தாகும்
துங்கமுறும் அறிவின்ப மயமாம் ஆன்மா
சொருபமுடைத் தததீக்கை யால்சா திப்பது
இங்கதனை இலங்குசா யுச்சி யப்பேர்
எய்துமுத்தி எனவுலகம் இயம்பு மன்றே.

இ-ள்: அங்கேயுள்ளது இங்கேயுள்ளது என்னமல், எங்கும் நிறைந்துள்ள அருட்சத்தியாகிய சிற்சத்தியை வடிவமாகப் பெறும் பரமுத்தியானது, மும்மலமும் நீங்கிப் பரமனுக்குள்ள ஐந்து தொழில்களைச் செய்யும் செயல் சிறிதுமின்றிச் சிவசமானதைக் குறியாய்ச் சிறந்ததாகும். தூய்மையுறும் அறிவு இன்பமயமாகும் ஆன்மா தன் சுயரூபத்தைப் பெறும் சுத்தப்பரமுத்தி ஞான தீக்கையால் அடையப்படுவதாகும். இவ்வுலகத்திலே அதனைச் சிவசாயுச்சிய முத்தி எனக் கூறுவார் (எ—று) 55

### இப்பாட்டு பயன் கூறுகிறது.
### இந்நூலைக் கற்று உலகினர்க்குக் கூறுபவர் சிவனே என்றது.

333. சகலசிவா கமப்பொருளும் தெரிந்து கூறத்
தக்கசிவப் பிரகாசன் உரைத்த நூலுள்
விகலமறு பொருளதனை விளங்கு முத்தி
மிடியகன்று வாழ்வுபெற வேண்டு வார்கட்(கு)

அகலமுறும் அறிவானந் தங்க ளெய்த
அருளினுல் அளிப்பவனை ஆர ணங்கள்
புகலுறுமொண் சிவனெனக்கண் புலத்திற் காணப்
பொருந்தினன்என் றுலகமெலாம் போற்றும் நின்றே.

*இ-ள்: சிவாகமப் பொருள் எல்லாவற்றையும் ஆராய்ந்து கூறத்தக்க* **சிவப்பிரகாசன் உரைத்த சிவப்பிரகாச விகாசம்** *என்னும் இந்நூலுள் கூறப்படும் குற்றமற்ற பொருளதனை விளங்கும் முத்திச்செல்வம் பெற்றிராத வறுமை நீங்கிச் சிவ வாழ்வினைப்பெற விரும்புபவர்கட்குப் பரப்புடைய சிவஞான இன்பத்தை அடைய அருளால் கொடுப்பவனை வேதங்கூறும் சிவன் எனக்கருதி, அச் சிவனே. கண்ணுகிய புலனுக்குக் காண வந்துள்ளான் என்று உலகமெல்லாம் அவன் முன்னே நின்று போற்றும். (எ-று)* 56

*பிரளய இயல் முற்றும்.*

*ஆகத் திருவிருத்தம்*[1] *333*

*சிவப்பிரகாச விகாசம் முற்றும்.*

*திருச்சிற்றம்பலம்*

சிவப்பிரகாசன் திருவடி வாழத்
தவப்பிர காசம் தானே வருமே.

பாவாயு நற்சேடன் பாபாற் பொருள்கொடுக்குந்
தாவாத வெண்கலையாந் தானெனவெண்-ணுவாய்க்க
நந்நூற்று வைத்தகதிர் நன்னூற் கவிதையொரு
முந்நூற்று முப்பத்து மூன்று.

**துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய சிவப்பிரகாச விகாசம்** *சிவப்பிரகாசன் திருவடித்துணை யருளினுலே விரோதிஸு மாசிமீ எழுதப்பெற்றது.*

---

1, *ஆகத்திருவிருத்தம் என்பதிலிருந்து இவையெல்லாம் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் திருமடத்திலிருந்து கிடைத்த சுவடியில் எழுதப்பட்டுள்ளன,*

# சிவப்பிரகாச விகாசம்

## அருஞ்சொல் அகரவரிசை

(பாட்டெண்)

### அ

சீ



சு



சூ



சே



சொ



ஞா



த

### தி



### தீ



### து



### தூ



### தெ



### தே



### தை



### ந



### நா



### நி



### நீ

வா



வி



வீ



வெ



வே



வை

# சிவப்பிரகாச விகாசம்

## பாட்டு முதற்குறிப்பு அகர முதல் வரிசை

(பாட்டெண்)

# சிவப்பிரகாச விகாச உரையுள் எடுத்தாண்ட நூல்கள்

(பக்கயெண்)